# புது பாட்டரி

## வாங்கப் போகிறீர்களா?

## சிறந்ததையே வாங்குங்கள்

# ஓக்ஸ்

## பாட்டரியை வாங்குங்கள்




பெட்ரோல் அல்லது டீஸல்
கொண்டு இயங்கும் எந்த வித
வாஹனத்திற்கும் ஏற்றதொரு
ஓக்ஸ் பாட்டரி இருக்கிறது.

**ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிட்.**

இந்தியாவெங்கும் அங்கீகாரம் பெற்ற




போர்ட் விநியோகஸ்தர்கள்

க்வீன்ஸ் ரோடு, பம்பாய் 4

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 16
இதழ் 46

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

ஹேவிளம்பி
ஆனி 2

# வெற்றிக்கு வழியாகாது!

சுயலாபம் காரணமாகத் தனி நபர் ஆரம்பிக்கும் காரியங்கள் பொது மக்கள் நலனுக்கு உகந்த காரியங்களாகப் பரிணமித்து நாட்டுக்கு நன்மை தருகின்றன. அதாவது சுயநல முயற்சிகளே மொத்தத்தில் பொதுநலமாகிறது.

உலகில் மகத்தான காரியங்கள் பல தனி நபர்களின் முயற்சியினாலும் ஆர்வத்தினாலும் நடைபெற்றுள்ளன.

ஆதிகாலத்தில் அரசர்கள் தாங்கள் வழிபடுவதற்காகவும் பக்தி செலுத்துவதற்காகவும் மாபெரும் கோயில்கள் கட்டினார்கள். அதையொட்டி ஒரு பெரிய சமுதாயமே பல நூறு ஆண்டுகள் மன நிறைவோடு வாழ வழி ஏற்பட்டுவிட்டது.

எத்தனையோ முதலாளிகள் தங்கள் சொந்த லாபம் கருதி ஆலைகள் நடத்தி வருகிறார்கள். அந்த ஆலைகள் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை கொடுத்துக் காப்பாற்றி வருகின்றன. அவற்றில் உண்டாகும் பண்டங்கள் தேச முழுதுக்கும் பயன்பட்டு வருகின்றன. இவ்வகையில் இவை யாவும் நாட்டின் சொத்துக்களே.

இப்படித்தான் ஒவ்வொரு நாட்டிலும் தனி நபர்களின் முயற்சியினால் செல்வம் கொழித்திருக்கிறது. முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. பண்பாடு வளர்ந்திருக்கிறது. இந்தப் பண்பாடு எத்தனையோ இடையூறுகளை எதிர்த்து நின்றிருக்கிறது.

இப்பொழுது நமது நாட்டில் சுபிட்சத் திட்டம் வகுத்திருக்கிறார்கள் அல்லவா? இந்தத் திட்டம், மேற்கூறிய பழைய முறையை ஒழித்துவிட்டு அதற்குப் பதிலாக ஏற்பட்டதல்ல. அந்த முறைக்குக் கூடுதலாக வேலை செய்து செல்வம் கொழிக்கச் செய்ய வேண்டும் என்றுதான் திட்டம் வகுத்திருக்கிறார்கள்.

தனிநபர்கள் பல தொழில்கள் நடத்தி நாட்டுக்குப் பணி செய்து வரும் இந்தக் காலத்தில் ஒரு புதுக் கருத்து பரவி யிருக்கிறது. அதாவது தனி நபர்கள் பெரும் தொழில்கள் நடத்துவதற்குப் பதிலாகச் சர்க்காரே பெருந்தொழிற் கூடங்கள் நடத்த வேண்டும் என்ற கருத்து பரவி வருகிறது. நமது சர்க்காருடைய தீர்மானம் என்னவென்றால், தனி நபர்களுடைய தொழில்களும் நடக்கவேண்டும்; சர்க்காரும் தொழிற் கூடங்கள் நடத்த வேண்டும். இரண்டும் சேர்ந்து நாட்டுக்குக் குறிப்பிட்ட செல்வத்தை வளர்க்க வேண்டும் என்பதே. நமது சர்க்கார் மேற்கூறிய இரட்டைக் கருத்தில் நம்பிக்கை கொண்டு அதை நிறைவேற்றத் தீர்மானித்திருக்கிறார்கள். அதனால்தான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சர்க்கார் 3,800 கோடி ரூபாய் முதலீடு செய்து பல தொழில்கள் நடத்த உத்தேசித்திருந்தாலும் தனிப்பட்ட முதலாளிகளும் செல்வம் படைத்தவர்களும் 2400 கோடி ரூபாய் முதலீடு செய்வார்கள் என்று எதிர்பார்த்து, கணக்கிட்டுத் திட்டம் வகுத்திருக்கிறார்கள்.

தனிப்பட்ட முதலாளிகள் நடத்தும் தொழில்களில் இயல்பாகவே தனி வேகம் காணப்படுகிறது. அதனால் லாபமும் காணப்படுகிறது. அவர்கள் காட்டும் ஊக்கம், உற்சாகம், சிரத்தை, வேலைத் திறமை முதலியவற்றால் ஏற்படும் இந்த லாபம் இயற்கை வேகங்களின் பயனாகும்.

சர்க்கார் எடுத்து நடத்தும் தொழில்கள் வெற்றி பெறுவது, சர்க்கார் நிர்வாக இயந்திரத்தைப் பொறுத்தது. சர்க்கார் நிர்வாகம் ஒழுங்காக இருந்தால் தொழிற் சாலைகளும் நன்றாக வேலை செய்யும். சர்க்கார் நிர்வாகம் ஊழல் மலிந்ததாக இருந்

தால் அந்தத் தொழில்களும் சீர்கெட்டுக் காணப்படும். அங்கே இயற்கை வேகத்துக்கு இடமில்லை. ஏன், அங்கு இயற்கை வேகம் தாமதமும் அசிரத்தையும்தான். அவை சர்க்காரின் நோக்கத்துக்கு எதிரிடையாக வேலை செய்யும்.

நமது சர்க்காரின் போக்கு முதலாளிகள் தொழில்கள் சரிவர நடப்பதற்குப் பெரும் இடையூறாக இருந்து வருகிறது. சர்க்காரும் அவர்களுடைய ஊக்கத்தைக் குறைக்கக் கூடிய பல காரியங்கள் செய்து வருகிறார்கள். பணம் படைத்த முதலாளிகள் எப்படியும் தங்கள் தொழில்களை நடத்திக் கொள்வார்கள் என்று அவர்கள் தக்கபடி தொழில்கள் நடத்துவதற்கான சூழ்நிலைகளை ஏற்படுத்தாமல், பாதகமான பல காரியங்களைச் செய்து வருகிறார்கள். இது மாபெருந் தவறாகும்.

தனி நபர்களால் நடத்தப்பட்டு முடிய வேண்டிய திட்டத்தின் பகுதிக்கும் அரசாங்க நிர்வாகத்தார் செய்து முடிக்க வேண்டிய திட்டத்தின் பகுதிக்கும் போட்டி ஏற்படக் கூடாது. இரண்டுக்கும் பணம் அவசியம். ஒன்றை நஷ்டப்படுத்தி விட்டு ஒன்று லாபம் பெறுவதில் பயனில்லை.

சர்க்கார் தாமே எடுத்து நடத்தும் தொழில்களுக்குப் பணம் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன், தனி நபர்கள் புதுத் தொழில்கள் ஆரம்பிக்கத் தகுந்த சூழ்நிலை ஏற்படுவதற்கு விரோதமான பணம் திரட்டும் முறைகளைக் கையாண்டு வருகிறார்கள். இதனால் தொழிலதிபர்கள் புதுத் தொழில்கள் ஆரம்பிக்காமல், சர்க்கார் போட்டுள்ள ஐந்தாண்டுத் திட்டமே நிறைவேறாமல் போகும்.

சர்க்காரில் இவ்விதமாகப் புறக்கணிப்பார்களா என்று கேட்கலாம்? சர்க்காரே நடத்தும் இரண்டு இலாக்காக்களில் முரணும் கவனக் குறைவும் பரஸ்பர நஷ்டமும் ஏற்படும்போது இதில் என்ன வியப்பு?

ஒரு இலாக்காவினர் சாலை போடுகிறார்கள். குண்டும் குழியுமாக உள்ள சாலையை நன்றாக அமைத்து விட்டுப் போகிறார்கள். அடுத்தாற் போல் மின்சார இலாகாக்காரர்கள் வருகிறார்கள். சாலையில் பள்ளம் தோண்டிப் பூமிக் கடியிலுள்ள மின்சாரக் கம்பியைப் பழுது பார்த்து விட்டு, தோண்டிய பள்ளத்தை அரையும் குறையுமாக மூடி விட்டுப் போகிறார்கள்! சாலை முன்னைவிடக் குண்டும் குழியுமாகவே ஆகிவிடுகிறது. வெகு நாள் வரையில் பழுது பார்க்கப்படாமல் கிடக்கிறது.

இதைப் போலவே, சர்க்கார் தாங்களே எடுத்துக் கொண்டுள்ள பெருந் திட்டங்கள் வெற்றிகரமாக நிறைவேற்ற வேண்டும் என்கிற ஆர்வத்தில் தனியாருக்கு வாய்ப்பளிக்காமல் செய்து வருகிறார்கள். இதனால் முடிவில் திட்டமே வெற்றி பெறாமல்போக ஏதுவாகும்!

* * *

இப்பொழுது மத்திய சர்க்கார் ஏராளமான வரிகள், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டும் என்பதற்காகவே விதித்திருப்பதாகக் கூறுகிறார்கள். மத்திய சர்க்கார் ஐந்தாண்டுத் திட்டம் என்று சொல்லும்போது தாங்கள் எடுத்து நடத்தும் பெரும் இரும்புத் தொழிற்கூடங்களை மனத்தில் வைத்தே பேசுகிறார்கள். அந்தத் தொழிற்கூடங்களை நடத்த எப்படியும் பணம் திரட்டியாக வேண்டும் என்று எத்தனை வகை வரிகள் விதிக்க முடியுமோ அத்தனை வகை வரிகள் விதித்திருக்கிறார்கள். அத்துடன் ஏற்கனவே இருக்கும் வரிகளை எவ்வளவு உயர்த்த முடியுமோ அவ்வளவுக்கு உயர்த்தியும் இருக்கிறார்கள். திட்டம் என்பது சர்க்கார் நடத்தும் தொழில்களுடன் முடிந்து விடவில்லையே! தனி முதலாளிகளும் பல கோடிக்கணக்கான ரூபாய்கள் முதலீடு செய்து பல தொழில்கள் ஆரம்பித்தால்தான் திட்டம் வெற்றி பெற்றதாகும். இந்நிலையில் செல்வ வரி, செலவு வரி, வருமான வரி என்று வரிக்கு மேல் வரியாகப் பல வரிகள் மூலம் பணம் படைத்தவர்களைச் சூழ்ந்து கொள்ளும்போது எப்படி அவர்களுக்குப் புதுத் தொழில்களில் முதலீடு செய்ய இடமாவது, இடமிருந்தால் உற்சாகமாவது இருக்கும்?

தாங்கள் எடுத்துக் கொண்ட தொழில்களை நன்றாக நடத்த வேண்டுமென்பதற்காகச் சர்க்கார் தனித் தொழிலதிபர்களை மனம் நோகும்படியும், உற்சாகமிழக்கும்படியும் செலவுக்குப் பணம் திரட்ட இடமில்லாமற்படியும் பல வகைகளில் காரியங்கள் செய்தால் நாடு அடையக்கூடிய பயன் ஒன்றுமில்லை. அதற்கு மாறாக சர்க்கார் எதிர்பார்க்கும் ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றி கிட்டாமற் போகும்.

பல பாத்திரங்களிலுள்ள பண்டத்தை, ஒரு பாத்திரத்திலிருந்து இன்னொரு பாத்திரத்தில் கொட்டுவதால், மொத்த அளவு அதிகமாகி விடாது. இன்னொரு பாத்திரத்தில் கொட்டும்போது கை தவறிக் கொஞ்சம் வெளியே சிதறி, பண்டத்தின் அளவு குறையலாமே தவிர, பெருகுவதற்கு வழியில்லை. இதை வைத்துச் சர்க்கார் தங்களுக்கு என்று திரட்டும் முதலைப்பற்றி யோசிக்க வேண்டும். தனித் தொழிலதிபர்களுக்குக் கடும் வரிகள் விதித்து, அவர்களிடமிருந்து பணத்தை வாங்கிக் கொள்வதால் மொத்தத்தில் லாபம் ஒன்றுமில்லை; பணம் நல்லபடியாகச்செலவழிக்கப் படாமற் போவதுதான் மிச்சமாகும்.

* * *

இவ்வளவுக்கும் காரணம் ஐந்தாண்டுத் திட்டம் வகுத்த இலாக்காவுக்கும் நிதி தேடித் தரும் இலாக்காவுக்கும் கருத்து இணைப்பும் கொள்கை இணைப்பும் இல்லாமைதான். திட்டம் வகுத்தவர்கள் ஒரு கோஷ்டியார்: அதற்கு நிதி வசூலிக்கும் பொறுப்பிலுள்ளவர்கள் வேறொரு குழுவினர். திட்டம் வகுத்தவர்கள் நிதி மந்திரியிடம் திட்டத்தைக் கொடுத்து விட்டு, 'நிதி வசூலித்துக் கொடு' என்று விட்டு விட்டார்கள். அவர் தன் மூளையைச் செலவிட்டு வரிகள் விதித்து விட்டார்.

திட்டமும், நிதியும் தனித்தனியாகப் பிரிக்க முடியாத அம்சங்கள். இரண்டும் ஒரு கருத்துக்கு அடங்கியிருக்க வேண்டும். திட்டத்துக்காக நிதிவசூலிக்கும் முறைகளும், திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றக் கூடிய சூழ்நிலையை உண்டாக்குவதாக இருக்கவேண்டும். இதை மனத்தில் கொள்ளாமல் பட்ஜெட் வகுக்கப்பட்டிருக்கிறது!

## வெற்றி பெற்று விட்டார்!



## புதிய வரிகள்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சர்க்கார் நடத்தும் தொழில் ஸ்தாபனங்களுக்காகச் சர்க்கார் விதித்துள்ள வரிகள் தனி முதலாளிகள் புதுத் தொழில்களை ஆரம்பிக்க விடாதபடி செய்கின்றன!

தேச மக்களின் சுபிட்ச வாழ்வுக்காக வகுக்கப்படும் திட்டமும் அதற்கான வரி வகைகளும் எல்லாக் கட்சியினரும், மக்களும் ஒப்புக்கொள்ளக் கூடிய வகையில் அமைய வேண்டும். ஐந்தாண்டுத் திட்டத்தை ஒரு கட்சியினரின் கொள்கையாகக் கொள்ளாமல் எல்லாக் கட்சியினரும் வரவேற்றுச் சென்ற தேர்தலில் பேசியதைப் பார்த்தோம். அத்திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றுவதற்கு, எல்லாருக்கும் வெறுப்பும் கசப்பும் உண்டாக்கக்கூடிய வரிகளை விதிப்பது வழியாகாது.

ஜனநாயகத்தின் முக்கிய அம்சம் தனி நபரின் பரிபூரண சுதந்திர உணர்ச்சி. தனி மனிதன் தன் சொந்த வாழ்க்கையில் எத்தனையோ விஷயங்களைப் பகிரங்கப்படுத்தாமல் நடத்தி வருகிறான். சமீபத்தில் புதிதாக அறிவிக்கப்பட்டுள்ள இந்த வரிகள் ஜனநாயகத்தின் இந்த அடிப்படை சுதந்திரத்துக்கு மாறானது. தனி நபர்களின் உடைமைகளையும் செலவுகளையும் ஒன்று விடாமல் பரிசீலிக்கச் சர்க்கார் திட்டமிட்டு விட்டது. ஒருவர் ஒரு நகை வைத்திருந்தால் அது நல்ல தங்கமா மட்ட தங்கமா பூச்சுத் தங்கமா, நல்ல வைரமா பொய் வைரமா, கெட்டி முத்தா செயற்கை முத்தா என்று சொல்லியாக வேண்டும். இந்த விஷயங்கள் எல்லாம் இது வரையில் குடும்ப ரகசியங்களாக இருந்து வந்தன. இனிமேல் அப்படியிருக்க முடியாது. வரி போடும் வரம்புக்குள் அடங்கியதா அல்லது அதற்குக் கீழ்ப்பட்டதா என்று விசாரிப்பதற்கும் கூட உத்தியோகஸ்தர்கள் எல்லா விஷயங்களையும் கணக்குகளையும் பரிசீலிக்க வேண்டும். இனிமேல் எல்லா குடும்பஸ்தர்களும் கணக்கு எழுத வேண்டும். இந்த நிலையில் என்ன சுதந்திர உணர்ச்சியிருக்கப் போகிறது?

செல்வ வரி சம்பந்தமாகச் சமீபத்தில் சர்க்கார் அறிக்கை ஒன்று வெளியாகியிருக்கிறது. அதில் பாத்திரங்கள், மேஜை நாற்காலிகள், நகைகள் ஆகிய பொருள்கள் ரூ. 25,000 மதிப்புவரை ஒருவர் வைத்துக் கொள்ளலாம்; வரி விதிக்கப்பட மாட்டாது என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. இது பலருக்குத் திருப்தி தரலாம். ஒருவரிடம் 25,000 ரூபாய் மதிப்புள்ள சாமான்கள்தான் இருக்கின்றன என்பதை மதிப்பிட சர்க்கார் வருமானவரி அதிகாரி வீட்டுக்கு வந்து பரிசீலிக்க வேண்டியதாக இருக்கும். நகை வாங்கிய கணக்கைக் காட்ட வேண்டியதாக இருக்கும். கணக்கில்லாமற் போனால் நம்பமாட்டார். நகைகள் யாருக்குச் சொந்தம் என்றும் நிரூபிக்க வேண்டியதாகும்! ஆக, இந்த வரிகளினால் வரி செலுத்தக் கூடியவர்களும் செலுத்த வேண்டாதவர்களும் சர்க்கார் சோதனைக்கு ஆளாக வேண்டியிருக்கும். ஒவ்வொரு குடும்பத்திலும் சர்க்காரைப்பற்றி என்ன பேசி வருவார்கள் என்று எளிதில் புரிந்து கொள்ளலாம். பழி இப்படி வளர்ந்தால் திட்டத்துக்கு வெற்றி காண முடியாது!

ஏழைகளின் வாழ்க்கைக்கு வேண்டிய பண்டங்களின் விலைகள் ஏற்கனவே விஷம் போல் ஏறியிருக்கும் சமயத்தில் பண்டங்களின் மேல் மறைமுக வரிகளை அதிகப்படுத்தி விலைகளை இன்னும் ஏற்றினால் மக்களுக்கு என்ன சுகம்? திட்டம்தான் எப்படிச் சரியாக நிறைவேற முடியும்? சர்க்காருக்கும், புது வரிகளின் மூலம் வரும் வருவாய்க்குச் சரியாகச் சம்பளச் செலவும் கூலிச் செலவும் திட்டத்திற்காக வாங்கவேண்டிய சாமான்களின் கிரயமும் அதிகமாகும்.

ஏழைகளின் துயரத்துக்கிடையில் திட்டம் எப்படிச் சந்தோஷமாக நிறைவேறும்? அளவுக்கு மிஞ்சினால் பொறுப்பதும் கஷ்டம்.

## சத்தியமே வெல்லும்!

எகிப்து மீது பிரிட்டனும் பிரான்சும் தொடுத்த போரைக் காட்டிலும் அதர்ம யுத்தம், மூடத்தனமான யுத்தம் வேறெதுவும் இருக்க முடியாது. அதனால் பிரிட்டனுக்கோ பிரான்சுக்கோ எவ்வித லாபமும் இல்லை. காரணமின்றி எகிப்து மக்களைப் பலி கொண்டு அவர்களின் அதிருப்திக்கும் உலக மக்களின் கண்டனத்துக்கும் ஆளானதைத் தவிர அந்த வல்லரசுகள் கண்ட பலன் எதுவுமில்லை.

எகிப்தைப் பணிய வைப்பதற்காக மேற்படி வல்லரசுகள் எத்தனையோ குயுக்திகளைக் கையாண்டன. நாஸரைப் பலவிதத்திலும் மிரட்டிப் பார்த்தன. ஆனால், எதற்கும் நாஸர் அசைந்து கொடுக்கவில்லை. வல்லரசுகளின் பொய்ப் பிரசாரங்களைக் கண்டு எகிப்து மக்கள் ஏமாந்து விடவில்லை. நாஸர் மீது அவர்களுக்குள்ள பேரபிமானமும் உலகத்தின் மதிப்பும் அதிகமாயினவேயன்றி அணுவளவும் குன்றவில்லை.

எனவே, வல்லரசுகள் தாங்களே இறுதியில் தலைவணங்கும்படி நேர்ந்தது. எகிப்து மீது கோபம்கொண்டு சூயஸ் கால்வாயைப் பகிஷ்காரம் செய்த பிரிட்டன் உள்படப் பல நாடுகளும் இப்போது எகிப்துடன் ஒப்பந்தம்செய்து கொண்டு விட்டன. வீண் மமதையுடனும் மூடப் பிடிவாதத்துடனும் பகிஷ்கார நாடகத்தை இறுதி வரையில் நடத்திப் பார்த்த பிரெஞ்சு சர்க்காரும், கடைசியாகத் தங்கள் மௌடீகத்தை உணர்ந்து கொண்டு விட்டார்கள். சூயஸ் கால்வாய் வழியாகத் தங்கள் கப்பல்கள் போகும் விஷயமாக எகிப்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டார்கள்.

மொத்தத்தில் சூயஸ் பிரச்னையின் விளைவாக வல்லரசுகளின் பேராசையும் போர் வெறியும் வெளியாயின. நாஸரின் மதிப்பும் எகிப்தின் பெருமையும் உயர்ந்தன. அணுகுண்டுகளாலும் ஹைட்ரஜன் குண்டுகளாலும் பீதியடைந்துள்ள உலக மக்களுக்கு நம்பிக்கை உண்டாவதற்கும் இடம் ஏற்பட்டது. உலகில் ஆயுத வலிமையினால் வல்லரசுகள் எவ்வளவு அக்கிரமங்கள் செய்தாலும் இறுதியில் சத்தியமே வெல்லும் என்ற புனிதமான தத்துவம் சூயஸ் கால்வாய்ப் பிரச்னையின் மூலமாக வெளியாகியிருக்கிறது.

# ஆகாச வெடி

"உலக பாங்கி உப தலைவர், நேருஜியுடன் விருந்து சாப்பிட்டவாறே மிகச் சிக்கலான பாகிஸ்தான் - இந்தியா கால்வாய் ஜலப் பிரச்னையை விவாதித்தார்." —செய்தி

விருந்தின் இறுதியில், "இந்தப் பெரிய பிரச்னையைக் குறித்து விவாதிக்க ஒரு விருந்து போதாது; பல விருந்துகள் வேண்டும்" என்ற முடிவுக்குத்தான் இருவரும் வந்திருக்க வேண்டும்.

★

"உலகிலேயே முதியவர் என்று விளங்கிய ரஷ்யர் ஒருவர் சென்ற வாரம் தமது 157வது வயதில் காலமானார். கடைசி வரை இவர் தமது கையினலேயே சமையல் செய்து சாப்பிட்டு வந்தார்." —செய்தி

சாப்பாட்டுக்குப் பிறர் கையை எதிர் பாராமலிருப்பதுதான் ஒருவேளை நீண்ட ஆயுளுக்குக் காரணமோ என்னவோ?

★

"இந்திய சர்க்கார் எஃகு மந்திரிக்கு, நகர மண்டபத்தில் வரவேற்பு விருந்து நடந்து கொண்டிருக்கும்போது வெளியே எதிர்க் கட்சிக்காரர்கள் சிலர், 'மந்திரியே விருந்து சாப்பிடாதே!' என்று கோஷித்துக் கொண்டிருந்தார்கள்." —ஜலந்தர் செய்தி

இம்மாதிரி கோஷங்களை யெல்லாம் எவ்வளவோ சாப்பிட்டு ஏப்பம் விடும் நம் மந்திரிகள் சிலருக்கு, இந்த கோஷம் என்ன பிரமாதம்?

"பதினேழரை அடி உயரமுள்ள மனித எலும்புக் கூடு ஒன்று மணிலாத் தீவுக்கு அருகே கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறது. இவன் ஒரு வேளை ராட்சஸனு யிருக்கலாமோ என்று ஜனங்கள் அஞ்சுகின்றனர்." —செய்தி

அந்த மனிதன் உயிரோடிருந்து இப்போதுள்ள மனிதர்களைப் பார்த்தாலும் இவ்வாறுதான் குள்ள ராட்சஸர்களோ என்று பயந்திருப்பான் என்பதில் சந்தேகமில்லை.

★

"தொண்ணூறு நிமிடத்தில் பூமியைச் சுற்றும் செயற்கை உபகிரகம்!" —நவேப்பு

இந்த உபகிரகத்தினால் உபத்திரவம் ஒன்றும் ஏற்படாது அல்லவா?

★

"ரூ. 2500 செலவில் லட்சுமி தேவிக்கும் பகவான் விஷ்ணுவுக்கும் போலிக் கல்யாணம் நடந்தது!" —பாராபங்கி செய்தி

பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணம் பூலோகமெங்கும் கொண்டாட்டம்!

★

"கவர்னர் கிரிக்கு 'ப்ளு' இப்போது இறங்கி வருகிறது!" —நவேப்பு

கிரி விஷயத்தில் தோன்றிய ஜுரம் ஆனதால் சீக்கிரமாகவே இறங்கிவிடத் தானே வேண்டும்?

# நீ ஆண் மகனா?

கடவுளையும் அவன் சக்தியையும் நம் பாதவர்கள் காதலின் சக்தியை நம்பியேயாக வேண்டியிருக்கிறது.

ஒரு மேனாட்டுப் பேராசிரியர், "கட்புலனுக்கு எட்டாதவைதான் உலகை இயக்குகின்றன-உஷ்ணம், மின்சாரம், காதல்" என்றார்.

காதலின் காரணமாக உலகில் எத்தகைய சாம்ராஜ்யங்கள் அழிந்திருக்கின்றன; எப்பேர்ப்பட்ட பேரரசுகள் எழுந்திருக்கின்றன! இத்தகைய மகத்தான காதல் தத்துவத்துக்கு உரிய தெய்வமாக 'மன்மதனை'ச் சிருஷ்டித்த பெருமை நம் முன்னோர்களுடையது.

காதல் வசப்பட்ட பெண்கள் காதலின் அதி தெய்வமாகிய மன்மதனிடம் கொஞ்சிக் குலாவி இரக்கம் காட்டும்படி இறைஞ்சும் கவிதைகள் பாரத நாட்டின் இலக்கியத்தில் ஏராளம்! காதல் நோயினால் தாக்குண்ட மங்கைகளின் மன நிலைகள் பட்டை தீட்டிய வைரத்தைப் போல் பளிச் பளிச்சென்று அந்தக் கவிகளில் மின்னும். இதோ இங்கே ஒரு மங்கை - வசந்தவல்லி - குற்றாலநாதர் மீது காதல் கொண்டு விட்டுத் தவிக்கிறாள்.

உலகத்துக்கெல்லாம் இன்பமூட்டும்சந்திரன் அவளுக்கோ கொடும் நரக வேதனையைத் தருகிறான். 'அக்காள்' என்னும் சகி ஓயாமல் என்னவெல்லாமோ கதைகள் பேசி அவளைத் துன்புறுத்துகிறாள். உலகுக்கெல்லாம் மந்த மாருதமாக வரும் தென்றல் அவளுக்குத் தழலாகத் தகிக்கிறது.

இப்படி இரவு வேளையில் சந்திரிகையும், தென்றலும், தூக்கமின்மையும் அவளைப் படாதபாடு படுத்துகின்றன! இந்த நிலையில் மன்மதனின் உருவெளித் தோற்றத்தையும் அந்த வான வெளியில் காண்கிறாள்.

'இத்தனை தொல்லைகள் போதா வென்று இவன் வேறு வந்து சேர்ந்தானே' என்று எண்ணுகிறாள்! கையில் கரும்பு வில்லும், மலர்க் கணையும் கொண்டு அவளிடம் போர் தொடுக்கவே வந்து விட்டான்! அவள் என்ன செய்வாள்?

"—சிறு
பெண்பிள்ளை மேற் பொருது
ஆண்பிள்ளை ஆவையோ மன்மதா?"

என்று இறைஞ்சுகிறாள்.

இந்த ஒரு அடியில் அவள் காதல் உணர்ச்சியை யெல்லாம் கொட்டி விடுகிறாள்!

இக்காட்சியைத்தான் இவ்விதழ் அட்டை ஓவியமாக வழங்குகிறார் சைத்ரிகர் ரத்னம்.

# பிரதமரின் குற்றச்சாட்டு

தமிழ் அரசுக் கட்சியின் கோரிக்கைகளைப் பற்றிப் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா இவ் வாரம் பத்திரிகை நிருபர்களுக்கு ஒரு அறிக்கை விடுத்தபொழுது அந்தக் கோரிக்கைகளை எந்த அரசாங்கமும் ஏற்றுக் கொள்ளுவதற்கில்லை என்று கூறிவிட்டு, சத்தியாக்கிரக யோசனையைக் கைவிடுமாறு சமஷ்டிவாதிகளைக் கேட்டுக் கொண்டார். சமீபத்தில் சில மந்திரிகள் மன்னருக்கு விஜயம் செய்தபொழுது தமிழரசுக் கட்சியினர் கறுப்புக் கொடி காட்டி ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள். அந்தச் சமயம் மந்திரிகள்மீது கல்வீச்சுகளும் நடந்தன. இதைப் பிரதமமந்திரி எடுத்துக் காட்டினார். தமிழரசுக் கட்சியினர் சாத்வீக முறையில் சத்தியாக்கிரகம் நடத்தினாலும்கூட அது வகுப்புக் கலகத்திலேயே முடியுமென்றும் பல ஆயிரம் பேர்கள் துன்பப்பட நேரிடுமென்றும் இந்த விஷப் பரீட்சையைத் தமிழரசுக் கட்சி கை விட வேண்டுமென்றும் அவர் கேட்டுக் கொண்டார். சிறுபான்மை வகுப்பினர்களின் பிரச்னைகளைத் தீர்க்க ஏற்கனவே தாம் சில யோசனைகள் சொல்லியிருப்பதை எடுத்துக் காட்டி, அவைகளைப் பரிசீலனை கூடச் செய்யாமல் தமிழரசுக் கட்சியினர் போராட்டம் நடத்தத் திட்டமிட்டிருப்பதாக அவர் குற்றஞ் சாட்டினார்.

இதற்கிடையில் முன்னாள் பிரதம மந்திரியான ஸ்ரீ டட்லி சேனநாயகா விடுத்திருக்கும் ஒரு அறிக்கையில் மிக அபாயகரமான நிலைமை நாட்டில் ஏற்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டி விட்டு, இந்த நெருக்கடியைத் தீர்க்க உடனே ஒரு சர்வகட்சி மகாநாடு கூட்டிப் பேச வேண்டுமென்று ஒரு யோசனை சொல்லியிருக்கிறார். இவ்விரண்டு அறிக்கைகளைப் பற்றி "வீரகேசரி" பத்திரிகை எழுதியிருக்கும் ஒரு தலையங்கத்தில் நாட்டில் இன்று ஏற்பட்டிருக்கும் நெருக்கடிக்குச் சர்க்கார் கட்சியும் ஸ்ரீ டட்லி சேனநாயகாவின் கட்சியும் தான் பெருமளவு பொறுப்பாளிகளென்று குறிப்பிட்டிருக்கிறது. சமரச யோசனைகள் எவரிடமிருந்து வந்த பொழுதிலும் அதன் சாத்தியக் கூறுகளை ஆராயத் தமிழரசுக் கட்சி கடமைப்பட்டுள்ளதென்றும் சமரச வழிகளை முயன்று பார்த்த பிறகே சத்தியாக்கிரகப் போராட்டத்தில் இறங்க வேண்டுமென்றும் அப் பத்திரிகை யோசனை கூறியிருக்கிறது.

உண்மையான சத்தியாக்கிரகி எப்பொழுதும் திறந்த மனத்துடன் சமரசப் பேச்சுக்குத் தயாராயிருக்க வேண்டுமென்பதே அமரர் காந்தியின் அருள்வாக்கு. ஆகையால் சமரசக் கதவை அடைத்து விட்டுப் பிடிவாதமாகப் போராட்டம் நடத்துவதாகப் புகார் செய்ய இடமில்லாதபடி தமிழரசுக் கட்சி நடந்து கொள்ள வேண்டுமென்றும் 'வீரகேசரி' அறிவுறுத்தியிருக்கிறது.

* * *

தமிழ்மொழியை ஒதுக்கிச் சிங்களத்தை மாத்திரம் அரியாசனத்தில் அமர்த்திய தனிச் சிங்களச் சட்டம் சென்ற வருட ஜூன் மாதம் 5-ம் தேதி இயற்றப்பட்டது. அதன் ஆண்டு நிறைவு தினமாகிய இவ்வருட ஜூன் 5-ம் தேதியை யாழ்ப்பாணத் தமிழர்கள் வடக்கு கிழக்கு மாகாணங்களில் துக்க தினமாக அனுஷ்டித்தார்கள். அன்று ஆயிரக்கணக்கான கறுப்புக் கொடிகளைப் பறக்க விட்டிருந்ததுடன் பெரும்பாலான பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டிருந்தன: தனிச் சிங்களச் சட்டத்தைப் பிரேத ஊர்வலம்போல எடுத்துச் சென்று தகனம் செய்தார்கள். இதையொட்டி யாழ்ப்பாணத்தில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் தமிழரசுக் கட்சித் தலைவர் ஸ்ரீ வி. வன்னிய சிங்கம் பேசிய பொழுது சத்தியாக்கிரக இயக்கத்தைக் கைவிடும் யோசனையோ அல்லது ஒத்திவைக்கும் யோசனையோ தங்களுக்குக் கிடையவே கிடையாதென்றும் ஆகஸ்டு 20-ம் தேதி திட்டமிட்டபடி சட்ட மறுப்புப் போராட்டம் நடந்தே தீருமென்றும் அவர் அறிவித்தார்.

தமிழர் விடுதலைப் போராட்டத்தில் தமது முழு கவனத்தையும் செலுத்துவதற்காக இம் மாத முடிவில் தமது வழக்கறிஞர் தொழிலை விட்டுவிடப் போவதாயும் அவர் அறிவித்தார்.

இலங்கைத் தமிழர்கள் போராட்டத்தை நடத்தத் திடீரென்று தீர்மானித்துவிடவில்லை. இலங்கை சர்க்காரின் மனம் மாறும் என்ற நம்பிக்கையுடன் மாதக் கணக்கில் பொறுத்துப் பார்த்தார்கள். பிரஜா உரிமைச் சட்டத்தினால் தங்களுக்கு ஏற்பட்டுள்ள தொல்லைகள் ஓரளவாவது தீரலாம் என்று எதிர் பார்த்தார்கள். ஆனால், நடந்தது என்ன? பிரஜா உரிமை பெற்றவர்களைக் காட்டிலும் பிரஜா உரிமை மறுக்கப்பட்டவர்களின் தொகை பன்மடங்கு அதிகமாகியது. போதாக்குறைக்குத் தனிச் சிங்களச் சட்டம் ஏற்பட்டதன் விளைவாக, தன்மானமுள்ள இலங்கைத் தமிழர்களின் நிலை சகிக்க முடியாததாகி விட்டது.

* * *

இலங்கைத் தமிழர்களின் சத்தியாக்கிரகப் போராட்டத்துக்கு உதவி புரியத் தென்னிந்தியாவிலிருந்து சில தி. மு. க. தலைவர்கள் வரப்போவதாகத் தமிழரசுக் கட்சியைச் சேர்ந்த ஒருவர் தெரிவித்தார். இவ் விஷயம் தெரிந்தவுடன் தென்னிந்தியாவிலிருந்து அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள் யாரும் இலங்கைக்கு வரமுடியாதபடி தடுக்க இலங்கை அரசாங்கம் அவசர நடவடிக்கையை எடுத்துக் கொண்டிருக்கிறது. இதோடு ஆகஸ்டு போராட்டம் நடந்து முடியும் வரையில் இலங்கைப் பிரஜைகளில் யாரும் வெளிநாடுகளுக்குப் போக முடியாதபடியும் தடை செய்யப் பட்டிருக்கிறது. தவிர்க்க முடியாத காரணங்களுக்காக வெளிநாடுகளுக்குப் போய்த் தீரவேண்டுமென்று நிரூபிப்பவர்களுக்கு மட்டுமே வெளிநாட்டுப் பாதுகாப்பு இலாகா அனுமதி யளிக்கிறது. அவர்களுடைய அனுமதியின்றி டிக்கட்டுகள் கொடுக்கக் கூடாதென்று ரயில்வேக்கும் விமானக் கம்பெனிகளுக்கும் உத்தரவு பிறப்பிக்கப் பட்டுள்ளன. இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்ட இந்தியர்களே அடிக்கடி இந்தியாவுக்குப் போய் வருவதினால் அரசாங்கத்தின் புதிய கட்டுப்பாடுகள் அவர்களையே கடுமையாகப் பாதித்துள்ளது. -ரஜனி

# தீபாவளி வெளியீடு




# திருமணம்

ஒரு குடும்பப் படம்

ஜெமினி கணேசன் • சாவித்திரி • தங்கவேலு
ரங்காராவ் • நாகையா • எம். என். ராஜம் •
ஈ. வி. சரோஜா • ராஜகோபால் • அசோகன் •
சந்தியா • பாக்கியம்

கோபி கிருஷ்ண • குமாரி கமலா



...வசனம்... ...சங்கீதம்...
வலம்புரி சோமநாதன் • எஸ். எம். சுப்பையா நாயுடு

டைரக்ஷன் • ஏ. பீம்சிங்

வலம்புரி பிக்சர்ஸ்
4. அபிராமபுரம் 3. வது தெரு சென்னை-18-

BAKTHA

விநியோகஸ்தர்கள் :

மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி கன்யாகுமரி ஜில்லாக்கள் : } ஜயந்தி பிலிம்ஸ், மதுரை

மலேயா : கியான்சிங், சிங்கப்பூர்

# திருமணங்கள்

நமது அன்பார்ந்த நேயர்களுக்கு ஒரு மகிழ்ச்சிகரமான குடும்ப நிகழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம்.

நிகழும் வைகாசி மாதம் 25-ந் தேதி (7-6-1957) வெள்ளிக்கிழமை சுப தினத்தில் கல்கி மானேஜிங் டைரக்டரும் ஆசிரியருமான திரு சதாசிவம் அவர்களின் குமாரிகள் சௌபாக்கியவதி ராதாவுக்கும், சௌபாக்கியவதி விஜயலக்ஷ்மிக்கும் திருமணங்கள் இனிது நடந்தேறின.

சௌபாக்கியவதி ராதாவுக்கும் என்ஜினியர் திரு எஸ். குருசாமி ஐயர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி விசுவநாதனுக்கும், சௌபாக்கியவதி விஜயலக்ஷ்மிக்கும் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ராஜேந்திரனுக்கும் கல்கி காரியாலயப் பூங்காவில் நிர்மாணிக்கப்பட்டிருந்த விசேஷ கல்யாண மண்டபத்தில் மிகச் சிறப்பாகத் திருமணங்கள் நடைபெற்றன.

இந்தத் திருமண வைபவத்தில் நமது மதிப்புக்குரிய ராஜாஜி அவர்கள் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசீர்வாதம் செய்தார்கள். இதைப் பெறற்கரும் பாக்கியமாகக் கருதிப் போற்றி மகிழ்கிறோம்.

மற்றும் திருமண வைபவத்துக்கும் மாலையில் நடைபெற்ற சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாச அய்யர் அவர்கள் கச்சேரிக்கும் சென்னை ராஜ்ய மந்திரிகள் திரு பக்தவத்ஸலம், திரு சி. சுப்பிரமணியம், திரு கக்கன், திருமதி லூர்தம்மாள், எதிர்க்கட்சித் தலைவர் திரு வி. கே. ராமசாமி முதலியார், சபாநாயகர் யு. கிருஷ்ண ராவ், திரு தேவதாஸ் காந்தி, அவர் குடும்பத்தினர், நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை, திரு சிவஞான கிராமணியார், சுத்தானந்த பாரதியார், சென்னை நகரசபை மேயர் திரு சீனிவாசன், பத்திரிகையாளர்களான திரு எஸ். எஸ். வாஸன், திரு ராமனாத் கோயங்கா, திரு காசா சுப்பாராவ், பிரமுகர்களான பூண்டி வாண்டையார் திரு கி. துளசி ஐயா, கபிஸ்தலம் மூப்பனார் திரு கருப்பையா, திருப்புகழ்மணி திரு டி. எம். கிருஷ்ணசாமி ஐயர்-மற்றும் நண்பர்களும், இசைவாணர்களும், கலைவாணர்களும் விஜயம்செய்து சிறப்பித்தார்கள்.

ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரபிரசாத், உதவி ஜனாதிபதி ராதாகிருஷ்ணன், பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு, திருமதி இந்திரா காந்தி மற்ற மத்திய சர்க்கார் மந்திரிகள், மைசூர் மகாராஜா, திருவனந்தபுரம் மகாராஜா, திருமதி பத்மஜா நாயுடு, திரு ஸ்ரீபிரகாசா, திரு கே. எம். முன்ஷி, திரு ஏ. ஜே. ஜான், திரு திவாகர், திரு பட்டாபி சீதாராமய்யா, திரு ராமகிருஷ்ண ராவ், திரு திருவேதி ஆகிய ராஜ்ய கவர்னர்கள், சென்னை ராஜ்ய முதல் மந்திரி திரு காமராஜ நாடார் ஆகிய எண்ணற்ற பிரமுகர்களிடமிருந்தும், திரு வினோபா அடிகள், சென்னை ஆர்ச் பிஷப், விளம்பர ஸ்தாபனங்கள், அகில இந்தியாவில் உள்ள எல்லா பத்திரிகை ஆசிரியர்கள், தமிழ்கூறும் நல்லுலகில் உள்ள எல்லா கல்கி ஏஜண்டுகள் ஆகியவர்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

காஞ்சி காமகோடிபீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், சிருங்கேரி சாரதா பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் ஆகியவர்கள் நல்வாசிகள் கொண்ட ஸ்ரீமுகங்களும் மணமக்களுக்கு வந்திருந்தன.

செம்மங்குடி சீனிவாச ஐயர் அவர்களின் அமோகமான சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. வயலின் ஸ்ரீ டி. என். கிருஷ்ணன், மிருதங்கம் பழனி ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை, கடம் உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராமய்யர் ஆகியவர்கள் பக்கவாத்தியம் வாசித்துச் சிறப்பித்தார்கள்.

சங்கீத கலாநிதி திருவீழிமிழலை சுப்பிரமண்ய பிள்ளை சகோதரர்கள், இஞ்சிக்குடி பிச்சைக்கண்ணு குழுவினர்கள், சென்னை ஸ்ரீ நடேசப் பிள்ளை குழுவினர்கள் நாதஸ்வர கான மழை பொழிந்தார்கள்.

சென்னை நகரசபை பாண்டு வாத்திய கோஷ்டியினர் பாண்டு வாத்திய கீதம் இசைத்து மகிழ்வித்தார்கள்.

திருமணத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தவர்களுக்கும், வாழ்த்துச் செய்தி அனுப்பியவர்களுக்கும், மற்றும் பல வகையான தொண்டுகள் செய்தவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கல்கி நேயர்கள் அனைவருடைய ஆசியையும் கோருகிறோம்.



## திருமணக் காட்சிகள்

கல்கி காரியாலயப் பூங்காவில் அமைந்திருந்த விசேஷ கல்யாண மண்டபத்தையும் திருவீழிமிழலை ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளைக் குழுவினரின் நாதஸ்வரக் கச்சேரியுடன் நிகழ்ந்த மாப்பிள்ளை அழைப்புக் காட்சிகளையும், மாப்பிள்ளைகள் அமர்ந்து வந்த அலங்காரமான மோட்டார் வாகனத்தையும், எதிர்ப்பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம்.

மாப்பிள்ளைகள் காசியாத்திரைக்குச் செல்வதையும், பெண்களின் பெற்றோர்களையும், இசை விருந்தளித்த செம்மங்குடி சீனிவாச ஐயர் குழுவினரையும் மணப்பந்தலில் வந்திருந்து மணமக்களுக்கு ஆசிகூறிய பிரமுகர்களில் ஒரு பகுதியையும் இந்தப் பக்கத்தில் காணலாம்.





# மாணவ சேனை



"வேலன்"

கல்வி பயிலும்போதே மாணவர்களுக்கு ஓரளவு ராணுவப் பயிற்சியும் அளிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து, இந்திய ராணுவ இலாகாவினர் சில திட்டங்களை வகுத்து அவற்றைத் திறம்பட நிறைவேற்றி வருகிறார்கள். இந்தத் திட்டங்களில் ஒன்றுதான் என். ஸி. ஸி. என்று கூறப்படும் "நாஷனல் கேடட் கோர்" அதாவது தேசிய மாணவ சேனை. 'கேடட்' என்றால் போர்த்துறை மாணவன் என்று தமிழில் அர்த்தம். என்.ஸி.ஸி.யைத் தவிர இன்னொரு சேனையும் உண்டு. இதை 'ஆக்ஸிலரி கேடட் கோர்' என்னும் ஏ. ஸி. ஸி. சேனை யாகும். இதற்குத் தமிழில் ஆரம்ப மாணவர் சேனை என்று பொருள் கூறலாம்.

என். ஸி. ஸி.யில் சேரும் மாணவர்கள், அரசியல், வகுப்புவாத ஸ்தாபனங்களில் சம்பந்தப்பட்டவர்களாக இருக்கக் கூடாது; ஒழுங்கின காரியங்களுக்காகத் தண்டிக்கப் பட்டவர்களாக இருக்கக் கூடாது. மரியாதையும், பண்பாடுமுள்ளவர்களாக இருக்க வேண்டும். உடலுழைப்பில் உற்சாகம் கொண்டவர்களாக இருக்கவேண்டும். தேக திடமுள்ளவர்களாக இருக்கவேண்டும். இவ்வாறு பல நிபந்தனைகள் விதித்திருக்கிறார்கள். இந்த நிபந்தனைகளை யெல்லாம் பூர்த்தி செய்து கொண்டு, பல்லாயிரக்கணக்கில் பாரதநாட்டு மாணவச் செல்வங்கள் இந்தச் சேனையில் சேர்ந்து பயிற்சி பெற்று வருவதைக் குறித்து ஒவ்வொருவரும் பெருமைப்பட வேண்டும்.

இந்த என். ஸி. ஸி. சேனைகளில், கடல், ஆகாயம், தரை ஆகிய மூப் பிரிவுகளும் உண்டு. ஆகாய விமானப்படைப் பயிற்சி, கப்பற்படைப் பயிற்சி, காலாட்படைப் பயிற்சி ஆகிய மூன்று வகை ராணுவப் பயிற்சிகளும் அளிக்கப்படுகின்றன.

என். ஸி. ஸி. யின் ஆதார தளம்தான் ஏ. ஸி. ஸி; அதாவது ஆரம்ப மாணவர் சேனை. இந்த ஆரம்ப மாணவர் சேனையில் உயர்தரப் பள்ளி மாணவர்களும் மாணவிகளும் மட்டிலுமே சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். மூன்று வருஷ காலத்துக்கு இந்த ஆரம்ப சேனையில் பயிற்சி அளிக்கப்படுகிறது. சென்னை ராஜ்யத்தில் இதுவரை 40,000 சிறுவர்களும் சிறுமிகளும் இந்த ஏ. ஸி. ஸி. யில் சேர்ந்திருந்த போதிலும், மொத்தமுள்ள மாணவர் எண்ணிக்கையுடன் ஒப்பிடும் போது இது குறைவு என்றுதான் கூற வேண்டும். இதற்கு முக்கியமான காரணம் ஏ.ஸி.ஸி. போதனை பயிற்சி பெறப் போதிய ஆசிரியர்கள் உற்சாகத்துடன் முன் வராதது தான் காரணம் என்று கூறவேண்டும்.

ஆனால் சென்ற இரண்டு ஆண்டுகளில் ஏ. ஸி. ஸி.யின் உபயோகத்தை உயர்வகுப்புப் பள்ளிகள் உணரத் தொடங்கி, விசேஷப் பயிற்சி பெற ஆசிரியர்களை இப்போதெல்லாம் அதிக எண்ணிக்கையில் அனுப்பி வருகின்றன. இவ்வருஷம் சுமார் 500 ஆசிரியர்கள் ஏ.ஸி.ஸி. போதனை பயிற்சி பெற முன் வந்தனர். அவர்களில் 60பேர் உபாத்தியாயினிகள். இந்த 500 பேருக்கும் சென்ற ஏப்ரல் 26-ந் தேதி தொடங்கி மே மாதம் 14-ந் தேதி வரை மூன்று வார காலம், சென்னை கிண்டி இன்ஜினியரிங் கல்லூரியில், ராணுவ அதிகாரி காப்டன் கோபி அவர்கள் மேற்பார்வையில் வகுப்புகள் ஆரம்பமாயின.

ஏ. ஸி. ஸி. மாணவர்களுக்குப் பின்வரும் திட்டங்களில் பயிற்சி அளிக்கப் படுகின்றன. உடற்பயிற்சி, கவாத்து செய்தல், ஆபத்து கால முதல் உதவி புரிதல், ஜனக்கூட்டங்களைச் சமாளித்தல், ஊர்ப் புறங்களிலும் கிராமங்களிலும் சுகாதாரத்தை வளர்த்தல், சிறிய சாலைகள் அமைத்தல், நடை பாதைகளைச் செப்பனிடுதல் போன்ற சமூக சேவைகளைச் செய்வதற்கு வேண்டிய அவசியமான பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன.

துப்பாக்கிகளை உபயோகிப்பதற்கு வேண்டிய திட்டங்களும் வகுத்திருக்கிறார்கள். பயிற்சி பெற்றுச் செல்லும் ஆசிரியர்களுக்கு, சர்க்கார் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 100ம், ஒரு ஜதை உடுப்புகளும் அளிக்கிறார்கள். ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் விரிவான பயிற்சிகளின் தன்மையைப் பார்க்கும்போது அவர்களுக்கு அளிக்கப்படும் ஊதியம் மிகக் குறைவு என்றே கூறவேண்டும்.

பயிற்சிக்கு வந்த ஆசிரியர்களில் ஸ்திரீகள் திருவல்லிக்கேணி லேடி வெலிங்டன் போதனா முறைப் பள்ளியில் முகாமிருந்து, ஒவ்வொரு நாளும் இன்ஜினியரிங் கல்லூரிக்கு வந்து மாலைவரை தங்கியிருந்து, வகுப்புகள், அணி வகுப்புகள், கவாத்துகள் முதலியவற்றில் கம்பீரமான முறையில் பங்கெடுத்துக்கொண்டு தேர்வு பெற்றார்கள். பயிற்சி பூர்த்தியான கடைசி தின வைபவத்துக்கு ராஜ்ய முதன் மந்திரி காமராஜ் வந்திருந்து அணிவகுப்பு மரியாதையை ஏற்றுக் கொண்டு, இந்தப் போதனா திட்டத்தை நிறைவேற்றி வைத்த காப்டன் கோபி முதலிய ராணுவ அதிகாரிகளுக்குத் தமது நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொண்டார்.

இவ்விழாவில் இரண்டு ஆசிரியர்களும் இரண்டு ஆசிரியைகளும் வெள்ளிக் கோப்பைகள் பரிசு பெற்றார்கள். சேலம் நகர் ஸி. எஸ். ஐ. உயர்தரப் பள்ளி ஆசிரியர் ஸ்ரீ ஜே. தாஸ் ஜயசீலன், நாகரசம்பட்டி போர்டு உயர்தரப் பள்ளி ஆசிரியர் ஸ்ரீ ஈ. ஆல்பர்ட், திருமங்கலம் போர்டு உயர்தரப் பெண் பள்ளி ஆசிரியை குமாரி ரெஜினா நல்லதம்பி, சென்னை தண்டையார் பேட்டை கே. ஸி. சங்கரலிங்க நாடார் உயர்தரப் பெண் பள்ளி ஆசிரியை ஸ்ரீமதி சுகிர்தம் ஆல்பர்ட் பாக்யநாதன் ஆகிய நால் வருக்கும் பரிசுகள் வழங்கப்பட்டன. தேசிய கீதத்துடன் விழா வெற்றியுடன் முடிவுற்றது.




மாணவர்களுக்கு ராணுவப் பயிற்சியளிக்க, இவ்வருஷம் சில பள்ளி ஆசிரியர்களும் ஆசிரியைகளும் ராணுவப் பயிற்சி பெற்றனர். 1. அவர்களுக்கு அந்தப் பயிற்சியளித்த காப்டன் கோபி. 2. ஆசிரியைகள் வகுப்பு அறைமுன் அணி வகுத்து நிற்கின்றனர். 3. வகுப்பு அறையில் ராணுவ பாடம். 4. ராணுவப் பயிற்சி நடைபெறுகிறது. 5. ஆசிரியர்களும் பயிற்சி பெறுகின்றனர். 6. அணி வகுப்பின் மற்றொரு காட்சி.

# மாதர்குல திலகங்கள்



தமிழ் நாட்டின் வைத்தியமேதையாக விளங்கிய டாக்டர் எஸ். ரங்காச்சாரியார் அவர்களுடைய திருஉருவச் சிலையைச் சென்னை பெரிய வைத்தியசாலை முன் பார்க்கும்போதெல்லாம் ஒவ்வொருவர் மனத்திலும் பின்வரும் ஒரே கேள்விதான் தோன்றுகிறது. ''டாக்டர் ரங்காச்சாரியாருக்குப் பிறகு அவருக்கு நிகரான வைத்திய மேதை வேறு யாராவது நாட்டில் தோன்றினார்களா?'' என்ற கேள்வி எழுகிறது. வைத்தியத் துறையில் மேதைகள் பலர் தோன்றித்தான் இருக்கிறார்கள். நிபுணர்களும் தோன்றித்தான் இருக்கிறார்கள். ஆனாலும் மனம் சமாதானம் அடைவதாயில்லை. டாக்டர் ரங்காச்சாரியரிடம் அமைந்திருந்த ஏதோ ஒரு விசேஷ சக்தி - வைத்திய சாஸ்திரத்துக்கு அப்பாற்பட்டு விளங்கி நின்ற சக்தி மற்றவர்களிடம் அமைந்திருக்கிறதா என்ற ஆராய்ச்சியில் தான் மனம் ஈடுபடுகிறது.

வைத்திய உலகில் அற்புத ஒளியாக விளங்கிய டாக்டர் ரங்காச்சாரியாரின் வாழ்க்கைத் துணைவியார் ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரி அவர்களைத்தான் இங்கு நாம் காண்கிறோம். டாக்டர் ரங்காச்சாரியார் அவர்கள் வைத்திய உலகில் ஒளி வீசி நின்றாரென்றால் அதற்கு ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரி அவர்கள் தீபமாக விளங்கி வந்தார்.

வாழ்க்கைத் துணை நலன் அமைவதைப் பொறுத்தே ஒருவரின் வாழ்க்கைப் பொலிவும் அமைந்திருக்கிறதென்பது ஆன்றோர் கண்ட உண்மை. இதற்கு ஓர் எடுத்துக்காட்டாக ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரி அவர்களைக் குறிப்பிடலாம். அம்மையார் அவர்கள் கணவருக்கு அளித்து வந்த ஆதரவும், ஊக்கமும் தான், வைத்தியத் தொழிலில் கணவரின் புகழ் ஒளி வீசச் செய்ததென்று கூறலாம்.

ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரியார் சென்னைக்கு அருகாமையிலுள்ள திருவள்ளூரில் 1895-ம் ஆண்டு உயர் குடும்பம் ஒன்றில் பிறந்தவர். வீட்டிலேயே கல்வி பயின்றார்! அந்தக் காலத்து வழக்கத்தை யொட்டிப் பத்தாவது பிராயத்திலேயே அம்மையாருக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டது. இல்லறப் பண்பாடுகள் பூரணமாக அமையப் பெற்ற அம்மையார் அவர்கள் கணவரின் தர்ம சிந்தனையையும், தயாள குணத்தையும் தமது பாக்கியவசமாகக் கருதினார். டாக்டர் ரங்காச்சாரியார் தமது தொழிலில் ஏராளமாகப் பணம் சம்பாதித்தது போலவே, தர்ம காரியங்களுக்கு ஏராளமாக வழங்கி வந்தார்.

கணவரின் தர்மசிந்தனையை வளர்ப்பதையே இல்லறப் பண்பாகக் கொண்டு, ஸ்ரீமதி கமலா அவர்கள் இரண்டரை லட்ச ரூபாய்க்குமேல் அநேக ஸ்தாபனங்களுக்கு நன்கொடை வழங்கியிருப்பதைக் குறிப்பிட வேண்டும். அந்த நன்கொடைகளை விளம்பரத்துக்கோ பெயருக்கோ ஆசைப்படாமல் வழங்கியிருக்கிறார். சென்னை வைத்திய கல்லூரிக்கு ரூபாய் 50,000, குடந்தை கல்லூரிக்கு ரூபாய் 25,000 சென்னை அரசாங்க தொழில் நுட்பப் பள்ளிக்கு ரூ. 13,200, சென்னை புற்று நோய் சிகிச்சை நிலையத்துக்கு ரூ. 10,000, சென்னை சர்வகலாசாலை நூற்றாண்டு விழா நினைவு படிப்பு நிதிக்கு ரூ. 35,000 முதலிய தர்மங்களை அவற்றில் முக்கியமாகக் குறிப்பிடலாம்; ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரி அவர்கள் சென்னையிலுள்ள அநேக அநாதை இல்லங்களுக்கும், மாதர்கள் கல்வி, பராமரிப்பு நிலையங்களுக்கும் ஏராளமாகப் பண உதவி புரிந்து வருகிறார்கள். அந்த ஸ்தாபனங்களுக்கு நேரில் விஜயம் செய்து அங்குள்ள அநாதைகளுக்கும் மற்றவர்களுக்கும் தாயன்பு சேவை புரிந்து வருகிறார்கள். அம்மையார் அவர்களுக்கு இந்த 64-வது பிராயத்திலும் தோட்டக் கலை ஒரு முக்கியமான பொழுது போக்காக இருந்து வருகிறது. வீட்டுத் தோட்டக் கலையில் அவருடைய சிறந்த சேவையையும் ஆர்வத்தையும் பாராட்டி, சென்னை தோட்டக் கலை சங்கம் அவருக்குப் பல பரிசுகளும், கோப்பைகளும் வழங்கியிருக்கின்றன.

இவர் சம்ஸ்கிருதத்தில் தேர்ந்த அறிவு பெற்றவர். தெய்வ பக்தி மிகுந்தவர்.

எல்லாவற்றுக்கும் மேலாக அடக்கமே அணிகலனாகக் கொண்ட, ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரி அவர்கள் நீடூழிவாழப் பிரார்த்திக்கிறோம்.




# அன்பென்று

தேவர்களே! முரசு கொட்டுங்கள்; சங்கம் ஊதுங்கள்! உங்கள் சொர்க்கத்தில் மலர்கள் இருப்பது உண்மையானால், உடனே அவற்றை ஏராளமாகத் திரட்டிக் கொண்டு வாருங்கள். ஈழ நாட்டின்மீது மலர்மாரி பொழிவதற்கு இதைவிட நல்ல சந்தர்ப்பம் வேறு வாய்க்கப் போவதில்லை.

எந்தையே! பாரதத்தின் தந்தையே! புத்த பகவானே! வானுலகத்தில் தாங்கள் இன்று எங்கே இருந்தாலும், பரம்பொருளின் பாத கமலத்தடியில் வீற்றிருந்தாலும், புண்ணிய ஈழத் தீவுக்கு மேலே ஆகாச வெளியில் வட்ட மிட்டுக் கொண்டிருந்தாலும், தங்கள் திருவுளம் குளிர்ந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. "நிச்சயமாக அழிந்து போகும் நிலையிலிருக்கும் இந்த உலகைக் காப்பாற்ற அன்பு, சகிப்புத்தன்மை, சமாதானம், அஹிம்சை ஆகிய வழிகளைக் கடைப்பிடிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. உலக நாடுகளில் வாழும் சிந்திக்கத் தெரிந்த மனிதர்கள் எல்லாரும் இதை உணர்ந்து விட்டனர்" என்று மனிதகுல மாணிக்கமான ஜவாஹர்லால் நேரு அவர்கள் அனுராதபுரத்தில் புதிய நகரைத் திறந்துவைத்து அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினார். போதிக் கடவுளே! தாங்கள் இந்த மண்ணுலக வாசியாக இருந்த பொழுது எதைச் சொன்னீர்களோ எதற்காக வாழ்ந்தீர்களோ அதைத் தங்கள் நாட்டில் தோன்றிய ஜவாஹர்லால்நேரு நிறைவேற்றி வைக்க அரும்பாடு பட்டுவருகிறார். அவருக்கும் உலக மக்களுக்கும் ஆசி கூறுங்கள்.

ஈழநாட்டுப் பொதுமக்களே! பாரதத்தின் பிரதமர் ஜவாஹர்லால் நேரு அவர்களிடம் நீங்கள் வைத்திருந்த திட நம்பிக்கையை நிறைவேற்றி விட்டார். அதற்காக உங்களையே நீங்கள் வாழ்த்திக் கொள்ளுங்கள்.

சந்தேகப் பிராணிகளே! "இந்தியா ஈழத்தின்மீது படை எடுத்துவிடும்" என்று ஐயமுற்றுக் கொண்டிருந்தீர்கள் அல்லவா? உங்கள் சந்தேகம் இவ்வளவு சீக்கிரத்திலேயே தீர்ந்து விட்டது பார்த்தீர்களா? "இந்தியா எப்பொழுதும் ஈழத்தின்மீது படை எடுக்காது" என்று நேருஜி உறுதி கூறி விட்டார். நீங்கள் அதிர்ஷ்டசாலிகள்தான்!

ஈழநாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளாக வாழ்ந்து வரும் தமிழ் மக்களின் உரிமையையும் அவர்கள் மொழியையும் எதிர்த்துவரும் ஈழநாட்டு அருமைச் சகோதரர்களே! உங்களுக்கு நமது மனமார்ந்த நன்றி. உங்கள் எதிர்ப்பு காரணமாகத்தான் ஈழநாட்டுத் தமிழ்ச் சகோதரர்கள் எல்லாரும் இன்று ஒன்று திரண்டு நிற்கிறார்கள். ஜவாஹர்லால் நேருவும் ஒரு உண்மையை உங்களுக்காகச் சொல்லாமல் சொன்னார். "இந்தியாவில் எல்லாருக்கும் எல்லா உரிமைகளையும் வழங்கியிருக்கிறேன். அதனால் ஜனநாயகம் ஓங்கி வளருகிறது. புத்தர் பிரானின் அன்பைக் கடைப்பிடிக்க வேண்டிய முறை இதுதான்" என்று கூறினார். தமிழ் மக்கள் உரிமையை நீங்கள் எதிர்ப்பதினால்தானே உரிமை இழந்து நாடற்றவர்களாக இருக்கும் தமிழ் மக்களுக்கு நேருஜி இந்தத் தைரிய மொழிகளை மறைமுகமாகச் சொன்னார். தமிழ் மக்களை எதிர்த்து வரும் ஈழநாட்டுச் சகோதரர்களே, நீங்கள் அடியோடு வாழ்வீர்களாக! உங்களால் அல்லவா ஈழத் தீவில் உரிமை முரசு கொட்டும் முழக்கம் கேட்கிறது. அந்த முரசம் "அன்பென்று கொட்டுவோம்!" என்றல்லவா முழங்குகிறது.

மேலே குறிப்பிட்ட அன்பு முரசத்தைப் பற்றி நேயர்களுக்குச் சொல்லவும் வேண்டுமா?



# கொட்டுமுரசே!

## பகீரதன்

துவேஷத்தையும் வகுப்பு உணர்ச்சியையும் ஒழித்து மனிதர்கள் மத்தியில் அன்பு மலர நேருஜி கொட்டிய முரசு முழக்கம்தான் அது!

புத்த மதமும் அதன் கட்டுப்பாடுகளும் சட்ட திட்டங்களும் ஈழ நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டவைதான். அவை மிக உயர்ந்த நோக்கத்துடன்தான் கொண்டு வரப்பட்டன. மக்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்கள் போல வாழவேண்டும் என்பதுதான் அவற்றின் இலட்சியம். ராஜ்ய ஆசை மிகுந்த சில வெறியர்கள் மக்களின் அன்பை நசுக்கி விடக் கூடாது என்பதுதான் அவற்றின் குறிக்கோள். இவை எல்லாம் நல்ல நோக்கங்கள் இல்லை என்று யார் சொல்ல முடியும்? ஆனால் நோக்கத்தைக் காட்டிலும் அதை நடத்துபவர்கள் கொடியவர்கள் ஆனார்கள். அன்பையும் அஹிம்சையையும் நிலைநாட்டத் தோன்றிய புத்தமதம் அன்பையும் அஹிம்சையையும் தீர்த்துக் கட்டி விடுமோ என்று பயப்பட வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. ஈழ நாட்டில் இன்றைய தினம் புத்த மதத்தின் போக்கு அந்த மாதிரி நிலைக்கு வந்துவிட்டது.

"பட்டினி கிடந்து செத்தாலும் பாதகமில்லை; உரிமை கிடைத்தால் போதும்; தமிழ் மொழிக்கு அந்தஸ்தும் அரியாசனமும் கிடைத்தால் போதும்" என்று ஈழநாட்டுத் தமிழ் மக்கள் வாய்விட்டுச் சொல்லும் அவல நிலைமை சுதந்திரம் பெற்ற ஈழத் திரு நாட்டில் இன்று ஏற்பட்டு விட்டது.

அந்த அளவுக்கு ஈழ நாட்டுத் தமிழ் மக்களின் வாழ்க்கை நிம்மதி குறைந்து மோசமாகிக் கொண்டு வருகிறது.

தமிழ் மக்கள் ஈழநாட்டுச் சுதந்திர சர்க்காரைக் கண்டு பயப்படுகிறார்கள்; அவர்கள் போடும் சட்டத்தைக் கண்டு நடுங்குகிறார்கள்; அதை அமுல் நடத்தும் அதிகாரிகளைக் கண்டு அஞ்சுகிறார்கள்; அவர்களை வீதியில் பார்த்தால் பீதி அடைகிறார்கள்; அடுத்த வாரம் ஈழநாட்டில் தங்குவோமோ மாட்டோமோ என்று தயங்கித்தவிக்கிறார்கள்; டி. ஆர். பி. நோட்டீஸைக் கண்டு திடுக்கிடுகிறார்கள்; அந்த நோட்டீஸில் கண்ட நாள் கடந்துவிட்டால் இன்னும் அதிகமாகத் திகில் அடைகிறார்கள்; பிரஜா உரிமை மனுஆபீசைக் கண்டால் பரிதவிக்கிறார்கள்; அந்த ஆபீஸ் வாசலில் நிற்கும் க்யூ வரிசையை எண்ணிக் கிலிகொள்கிறார்கள்; பிரஜாஉரிமைக்கு மனுப் போட்டவர்கள் பயப்படுகிறார்கள்; போட மறந்தவர்களைப் பற்றியோ ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. அவர்கள் இன்னும் அதிகமாகப் பயப்படுகிறார்கள்.

பிரஜா உரிமைக்கான மனு போட்டிருக்கும் தமிழ் மக்கள் அஞ்சி நடுங்குவதைப் பற்றி என்னத்தைச் சொல்வது?

பிரஜா உரிமை மனுவில் பிறந்த தேதியை, ஊர் முதலியவைகளைப் பற்றிச் சரியாக எழுதினோமா என்ற பயம்; எழுதிய தேதியையும் ஊரையும் அதிகாரிகள் சரி என்று ஒப்புக் கொள்வார்களா என்ற பயம்; எந்தச் சமயம் வீட்டுக்கு வந்து டி. ஆர். பி. நோட்டீஸ் கொடுத்து ஊரை விட்டுப் போ என்று சொல்லுவார்களோ என்ற பயம்; காலம் எல்லாம் பாடுபட்டுச் சம்பாதித்த சொத்துசுகங்களைப் பிடுங்கிக் கொண்டு ஊரைவிட்டே

---

**ஜயந்தி மாவத்தை என்ற புது நகரை நேருஜி திறந்து வைத்து விட்டு அந்த நகருக்குள் பிரவேசிப்பதையும், சமாதி புத்தர் திருவுருவச்சிலையைப் பெற்றுக் கொள்வதையும், அன்று மாலை நடைபெற்ற மாபெரும் பொதுக் கூட்டத்தையும் படங்களில் காணலாம்.**



துரத்தி விடுவார்களோ என்ற பயம்; "ஐயா, இப்படிச் செய்யலாமா" என்று கேட்டால் தடியால் அடிப்பார்களோ என்ற பயம்; அடிப்பதையும் அடித்து விட்டுக் கோர்ட்டில் வழக்கையும் போட்டு இழுத்து அடிப்பார்களோ என்ற பயம்.

மொத்தத்தில் ஈழநாட்டுத் தமிழ் மக்கள் ஈழ நாட்டில் வாழ்வதே ஒரு பயங்கரமான, ஆபத்தான காரியம் என்று ஆகிவிட்டது.

இந்த மாதிரி சமயத்தில் உண்மையான புத்த மதத்தை எடுத்துக் காட்டும் ஒரு மகான் தேவைப்பட்டார். எல்லாவற்றையும் அலசி ஆராய்ந்து மக்களுக்கு உண்மையைத் தைரியமாக எடுத்துச் சொல்லும் ஒரு மகா புருஷர் அவசியமாயிருந்தது.

கடவுளின் அருளால் அத்தகைய மகா புருஷர் நம்முடைய நாட்டில் இப்பொழுது நம்மிடையே வாழ்கிறார். ஜவாஹர்லால் நேரு ஈழ நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்த போதெல்லாம் அன்பைப் பற்றியும் அஹிம்சையைப் பற்றியும் அழுத்தம் திருத்தமாக எடுத்துச் சொன்னார்.

அனுராதபுரத்து வீதியில் பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்கள் தமது புதல்வி இந்திரா காந்தியுடனும் இலங்கைப் பிரதம மந்திரி, போக்கு வரத்து மந்திரி, புதை பொருள் ஆராய்ச்சிக் கமிஷனருடனும் திறந்த காரில் பவனி வந்தபொழுது இந்தப் புராதன நகரம் புத்துயிர் பெற்று எழுந்து விட்டது.

ஜவாஹர்லால் நேரு அனுராதபுரத்துக்கு வருவதற்குப் பல மணி நேரத்துக்கு முன்னதாகவே மக்கள் கூடி விட்டனர். அதனால் அவர் வரும் வழியில் கூடியிருந்த மக்களின் மீது சிறிது கவனம் செலுத்த முடிந்தது. தமிழ் மக்கள், சிங்கள மக்கள், ஆண்கள், பெண்கள் வயது முதிர்ந்த பெரியவர்கள் சிறுவர்கள் என்று பலதிறப்பட்டவர்களும் கூடியிருந்தார்கள். இவ்வளவு பேரும் அனுராதபுரத்தில் வசிப்பவர்களா? இல்லை. ஈழநாட்டுத் தமிழ்ப் பிரதேசங்களில் வசிக்கும் தமிழ்மக்கள் பெருந் திரளாக அங்கு வந்திருந்தார்கள். அதில் யாழ்ப்பாணத் தமிழர்கள் அதிகம் காணப்பட்டார்கள். அவர்கள் முகங்களில் தமிழ்க் களை சொட்டிக் கொண்டிருந்தது. வெள்ளை வெளேர் என்ற தூய உடை உடுத்திக் கொண்டிருந்தார்கள். பெண்மணிகளும் தங்கள் விசால நெற்றியில் குங்குமப் பொட்டு இட்டுக் கொண்டு சாட்சாத் சரஸ்வதி தேவி போல் விளங்கினார்கள். மொத்தத்தில் யாழ்ப்பாணத் தமிழ் மக்களைப் பார்ப்பதே மனத்துக்கு இன்பமாக இருந்தது.

இப்படி யாழ்ப்பாணத் தமிழ் மக்களைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவர்களிடையே ஒரு பரபரப்பு உண்டாயிற்று. அதற்குக் காரணம் ஜவாஹர்லால் நேரு அவர்களின் கார் அங்கு வந்ததுதான்.

நேருஜியைப் பார்த்தேன். இரண்டு கண்களைக் கொண்டு எவ்வளவு நிறையப் பார்க்கலாமோ அவ்வளவு நிறையப் பார்த்தேன். அப்பொழுது என் மனத்தில் பொங்கி எழுந்த உணர்ச்சிகளை எல்லாம் இப்பொழுது விவரிக்க இயலாதவனாக இருக்கிறேன்.

எத்தனையோ நூற்றுக் கணக்கான படங்களில் அவருடைய திருமுகத்தைப் பார்த்திருக்கிறேன். அவரைப் பலமுறை நேரிலும் சந்தித்திருக்கிறேன். அந்தத் திருமுகத்தில் இதுவரையில் நான் காணாத ஒரு உணர்ச்சியை அப்பொழுது கண்டேன். என் அருகில் இருந்தவரைப் பார்த்து, "நேருஜியின் முகத்தில் ஏற்பட்டிருக்கும் இந்தப் புதிய உணர்ச்சிக்குக் காரணம் என்ன?" என்று கேட்டேன். "புத்தர் பிரானின் புனிதத் திருமேனியில் இருந்து எடுத்த தாதுக்களை அடக்கம் செய்து அதன் மீது எழுப்பப்பட்ட தாகபாக்கள் கட்டப்பட்ட அனுராதபுரத்துக்குள் அல்லவா நேருஜி வருகிறார். அதனால் அவர் முகத்தில் புதிய உணர்ச்சிகள் உண்டாகின்றன" என்று சொன்னார். இப்பொழுது நான் நின்று கொண்டிருந்த இடத்துக்கு நேராக நேருஜியின் கார் வந்துவிட்டது. அவ்விடம் வந்ததும் மக்கள் ஜெயகோஷமிட்டனர். எல்லாரும் தங்களை மறந்து பரவசமாகித் தாங்களே நேருஜியாக எண்ணியிருந்த சமயத்தில் ஒரு குழந்தை 'வீல்' என்று கத்திக் கொண்டு அழத் தொடங்கி விட்டது. அதன் தாயார் எவ்வளவோ சமாதானம் செய்து பார்த்தார். "நேருஜியைப் பாரு" "அதோ பாரு நேருஜியை" என்று சொல்லிப் பார்த்தார். அந்தக் குழந்தை அழுகையை நிறுத்தியதாகத் தெரியவில்லை. நேருஜி அந்தக் குழந்தையின் பக்கம் திரும்பித் தம் கழுத்தில் கிடந்த மாலைகளில் ஒன்றை எடுத்து அதன் கழுத்தில் போட்டார். உடனே அந்தப் பொல்லாத குழந்தையின் அழுகை நின்று விட்டது. "சரிதான்; இந்தக் குழந்தை பெரியவனாகும்போது மிகப் பெரிய அரசியல் வாதியாக விளங்கும்" என்ற தீர்மானத்துக்கு வந்தேன். அரசியல் வாதிகள் பலர் இப்படித்தானே முதலில் பலமாகக் கூச்சல் போடுவார்கள். யாராவது அவர்களை விடப் பெரிய தலைவர்கள் வந்து முதுகில் தட்டிக் கொடுத்துக் கழுத்தில் ஒரு மாலையைப் போட்டால் 'கப்சிப்' என்று அடங்கி விடுவார்கள்!

பின்னர் நேருஜி பழைய அனுராதபுரத்துக்கு அருகில் புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ள புதிய நகரைத் திறந்துவைத்து அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினார். "இன்றைய உலகில் மனித வர்க்கத்தைப் பிடித்துள்ள சகல துன்பங்களுக்கும் புத்த பிரானின் போதனையே சிறந்தது" என்றார். ஈழநாட்டுக் கலாச்சார மந்திரி ஜயவீர குருப்பு புத்த பிரானின் சமாதி வடிவ உருவச்சிலை ஒன்றை நேருஜியிடம் கொடுத்தார். சங்கமித்ரையின் உருவப்படம் ஒன்றை இந்திரா காந்தியிடம் கொடுத்தார். நேருஜியும் இந்திரா காந்தியும் ஈழநாட்டுக்கு விஜயம் செய்ததின் ஞாபகார்த்தமாக அந்தப் புனிதப் பொருள்கள் அவர்களுக்கு அன்புடன் அளிக்கப்பட்டன.

"பழைய அனுராதபுரம் அப்படியே இருக்கும்போது புதிதாக ஏன் ஒரு நகரத்தை நிர்மாணிக்க வேண்டும்?"

"பழைய அனுராதபுரத்தைப் புனித நகரமாக மாற்றியுள்ளார்கள். அந்த நகரில் உள்ள புத்தர் பிரான் ஞானம் பெற்ற போதி விருட்சத்தையும் தாகபாவையும் சுற்றி ஒரு மைல் தூரத்துக்குக் கடையோ கடைத்தெருவோ வீடுவாசல்களோ, இதர சுகாதாரக் குறைவான, பக்தியைக் குறைக்கும், நகரத்தின்



**இலங்கைப் பிரதமர் தம்முடைய அரசாங்க மாளிகையான 'ஆலய அசோக' பவனத்தில் நேருஜிக்கு விருந்து அளித்தார். அப்பொழுது மூன்று பெண் மணிகள் கண்டி நடனமாடிய காட்சி.**

புனிதத்தைக் கெடுக்கும் எந்தப் பொருளும் இருக்கக்கூடாது என்று இன்றைய இலங்கை சர்க்கார் உத்தர விட்டுவிட்டது. அங்குள்ள பழைய கட்டடங்களை எல்லாம் இடித்து விட்டு அவற்றின் சொந்தக்காரர்களுக்குப் புது நகரை அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள்.''

''அடாடா! மிக நல்ல ஏற்பாடாக இருக்கிறதே! திருக்கோயிலையும் அதன் சுற்றுப் புறங்களையும் இப்படி அல்லவா காப்பாற்ற வேண்டும். தமிழ் நாட்டில் உள்ள கோயில் நிர்வாகிகள் பின்பற்றவேண்டிய சிறந்த வழி. தமிழ்நாட்டில் உள்ள கோயில்களில் எல்லாம் விளம்பரப் பலகைகளும், கடைகளும், கடைத் தெருவுமாகக் கோயிலின் புனிதத்தையே அல்லவா கெடுத்து வருகின்றன.''

''கோயிலின் புனிதத்துக்காக வேண்டிப் பழைய அநுராதபுரத்தைச் சுற்றியுள்ள இடங்களைக் காலி செய்தால் அது எவ்வளவோ போற்றக்கூடிய காரியமாயிற்றே! அதற்காக அவர்கள் செய்யவில்லை. பழைய அநுராத புரத்தில் இப்பொழுது காலி செய்யப்பட்டிருக்கும் இடங்களெல்லாம் தமிழ் மக்களுக்குச் சொந்தமானவை. தமிழ் மக்களை அங்கிருந்து அகற்றி இந்த நகரைச் சிங்கள மய மாக்குவதற்காக அல்லவா இந்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.''

''எதற்காகச் செய்தாலும் அநுராதபுரத்தைப் புனிதமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற உயர்ந்த பக்தி உணர்ச்சியைப் பாராட்ட வேண்டியதுதானே!''

இந்த இடங்களை எல்லாம் சுற்றிப் பார்த்து விட்டுப் புராதன சிங்கள மன்னர்கள் உபயோகித்த இரட்டைத் தடாகத்துக்கு அருகில் நேருஜி வந்தார். அந்தத்தடாகங்களில் வசித்த ஆமைகள் பெருங் கூட்டமாகக் கூடி வந்து நேருஜியை வரவேற்றன. நேருஜி அவைகளின் உணவு என்ன என்று விசாரித்தார். பிறகு ஆமைகள் புசிக்கும் 'பாண்' தருவித்துத் தம்முடைய கையினாலேயே அந்தத் தடாகத்து ஆமைகளுக்கு வழங்கினார்.

இந்தக் காட்சியைப் பார்த்ததும் எனக்கு மனசை என்னவோ செய்ய ஆரம்பித்து விட்டது. மன்னர்களும் மகாராணிகளும் இளவரசர்களும் இளவரசிகளும் நீராடி மகிழ்ந்த இந்த இரட்டைத் தடாகத்தில் இன்று ஆமைகள் அல்லவா கிடக்கின்றன. என்னே காலத்தின் விசித்திர கோலம்.

இரட்டைத் தடாகத்தைப் பார்த்து விட்டு சமாதி புத்தரின் சந்நிதியில் வந்து நேருஜி நின்றார். பிரம்மாண்டமான சமாதி புத்தரையும் நேருஜியையும் பார்த்ததும் நான் திகைத்துப் போனேன். வேதனை ஒன்று என் மனத்தை அலைத்தது. எத்தனை மகா சிற்பிகள் பக்தி சிரத்தையுடன் கூடியிருந்து இந்தப் பிரமாண்டமான சிலையை இங்கு ஒரு காலத்தில் உருவாக்கி யிருக்க வேண்டும்.

அந்த மகா சிற்பிகளுக்கு இந்த நாட்டு மன்னன் எவ்வளவு கவனத்துடன் காணிக்கை செலுத்தி இந்த சமாதி புத்தர் சிலையை இங்கு ஸ்தாபனம் செய்திருப்பான்! அன்றைய தினம் இந்தப் பகுதியில் எவ்வளவு குதூகலம் ஏற்பட்டிருக்கும்! என்ன பரபரப்பு உண்டாகி யிருக்கும்! எவ்வளவு மக்கள் கூடி யிருந்திருப்பார்கள்! அவர்கள் இதயத்தில் எவ்வளவு ஆர்வம் பொங்கிப் பெருகி இருக்கும்! இந்தப் பெரிய கல் உருவம் இங்கே எழுந்தருளும்போது இந்த அடர்த்தியான மரங்களுக்கு அடியில், சூரியவெளிச்சம் துலங்கிய வானத்தின் கீழ் மன்னனும் மக்களும் மகா சிற்பிகளும் கூடி இருந்து தங்கள் முயற்சிகள் வெற்றி அடைந்ததைக் குறித்து எவ்வளவு ஆர்ப்பரித்திருப்பார்கள்!

நிச்சயமாக இந்தப் பிரம்மாண்டமான சிலையை உருவாக்க வெகு நாட்கள் பிடித்திருக்க வேண்டும்! ஒரு மனிதன் தன் ஆயுளில் இந்த புத்த பிரானின் சிலையை நிர்மாணித்திருக்க முடியும் என்று சொல்ல முடியாது! இதை முடிக்க எத்தனை மனிதர்கள் தங்கள் ஊக்கத்தையும் உழைப்பையும் கொடுத்தார்களோ! அவர்கள் உழைப்பையும் ஊக்கத்தையும் இந்த சமாதி புத்தர் சிலை இன்றைக்கும் எடுத்துக் கூறிக் கொண்டிருக்கிறது.

இந்தச் சிலையை அமைக்க என்ன என்ன யோசனை செய்திருப்பார்கள்! பொய்யும் மெய்யும் கலந்த எத்தனையோ கதைகள்

இந்த அநுராதபுரத்தின் ஒவ்வொரு சிதைந்த சிற்பங்களைப் பற்றியும், நாகபாக்களையும், புத்த விஹாரங்களைப் பற்றியும் வழங்கி வருகின்றன. இந்தக் கதைகளே அந்தக் கால மக்களின் வாழ்க்கையை, விசித்திர வாழ்க்கையை நமக்கு எடுத்துக் காட்டி விடுகின்றன.

புத்தர் சிலை எடுத்து பிரதிஷ்டை செய்தாயிற்று. நாள் தவறாமல், பருவம் தவறாமல் பூவும்புனலும் தூவித் தூப தீப நைவேத்திய ஆராதனைகள் செய்து காணிக்கை செலுத்தி பக்தியுடன் வழிபட்டவர்கள் எத்தனைபேரோ!

திடீரென்று அந்தக் காலம், அந்த உலகம் எல்லாம் மறைந்து விட்டன. அன்று எது உண்மையாக இருந்ததோ இன்று அதுவே தன் பொருளை இழந்து நிற்கிறது. அருவி வறண்டு விட்டது! அருவி கொட்டிய தேய்ந்த கற்கள் பழைய காலத்தில் அருவி கொட்டியதை நினைவுபடுத்துவதுபோல இந்த சமாதி புத்தர் தனிமையில் இருந்து பழைய பெருமைகளை நமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கிறார். இந்த புத்தர் பேசிய மொழியை மக்கள் மறந்து விட்டனர். மனிதன் ஒரு காலத்தில் உண்டாக்கிய இந்த ஒப்பற்ற கீர்த்தி மீண்டும் சுடர் விடுவதற்கு வழிவகுப்பதுபோல நேருஜி அந்த சமாதி புத்தருக்கு முன்னால் மௌனமாக நின்று கொண்டிருந்தார்.

இந்த சமாதி புத்தர் சிலைக்குஅருகில் எக்ஸத் புத்த பெரமுனையைச் சேர்ந்த சுமார் ஆயிரம் புத்தபிக்குகள் கூடி விருந்து பாரதப் பிரதமருக்கு ஒரு வரவேற்பு அளித்தனர். வணசிவாலி தேரோ நேருஜியை வரவேற்றுப் பேசினார். "உலகில் சமாதானம் நிலவுவது இலங்கை இந்தியப் பிரதமர் கூட்டு முயற்சியில் இருக்கிறது" என்று குறிப்பிட்டார். நேருஜியை வரவேற்பதில் இலங்கையில் உள்ள எல்லா பௌத்தர்களும் உண்மையாகவே பெருமகிழ்ச்சி அடைவதாகக் கூறினார்.

அன்று மாலை ஏழு மணிக்கு அநுராதபுரத்திலிருந்து கொழும்புக்குத் திரும்பினார் நேருஜி.

மறுநாள் கொழும்பு நகரில் பல விழாக்களில் கலந்து கொண்டார். மாலையில் இலங்கைப் பிரதமர் பண்டார நாயகா அளித்த அரசாங்க விருந்து அற்புதமான முறையில் இருந்தது. ஆகா! அந்தக் காட்சியின் சிறப்பை என்னென்று சொல்வது? "பிரதமர் பண்டார நாயகாவின் 'ஆலய அசோக' பவனத்தில் இரவு தீபாலங்காரம் நன்றாயிருக்கும்" என்று சொல்லக் கேட்டு ஒரு அபூர்வமான காட்சிக்கு நான் தயாரானேன். ஆனால் நேரில் பார்த்த போதோ நான் எதிர்பார்த்ததை எல்லாம் விட அதிசயமாக இருந்தது.

"இந்த 'ஆலய அசோக' பவனம் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்படுவதற்கென்றே ஏற்பட்டதுபோலும்" என்று ஒரு சமயம் தோன்றியது. "மின்சார விளக்கைக் கண்டு பிடித்ததே இந்த ஆலய அசோக பவனத்தை அலங்கரிக்கத்தானோ என்னவோ?" என்று மற்றொரு சமயம் தோன்றியது.

ஆகாயத்தில் மின்னும் நட்சத்திரங்களை எண்ணினாலும் எண்ணி விடலாம். ஆனால் அன்றிரவு ஆலய அசோக பவனத்தில் போட்டிருந்த விளக்குகளை எண்ண முடியாது.

இரவைப் பகலாக்குவது இதுதான்போலும்.

இதுமட்டும்தானா? அற்புதமான நடன விருந்துகள் வேறு! கதகளி நடனம், கண்டி நடனம், ரதி மன்மத நடனம் என்று பலப்பல நடனங்கள் வேறு இருந்தன. இந்த நடனத்தில் மூன்று பெண்மணிகள் நாட்டியம் புரிந்தனர். ஏதோ கண்ணுக்கு அழகாய் இருந்தன. குற்றம் குறை இல்லை என்று சொல்ல முடியாது. ஆனாலும் இந்த அபிநயத்தில் வழங்கிய முத்திரைகள் உயர்ந்த கலைப் பண்பை எடுத்துக் காட்டின. இதன் நுட்பத்தை உணர்ந்தவரே இந்த அபிநயத்தில் ஆனந்தம் கொள்ள முடியும். நாட்டியங்களைக் கற்பிக்க ஈழ நாட்டில் ஒரு பள்ளிக்கூடமே வைத்து நடத்துகிறார்களாம்.

*** *** ***

நேருஜி அவர்கள் ஈழநாட்டில் தங்கியிருந்த இரண்டேகால் நாளிலும் "அன்பென்று கொட்டு முரசே! உலகில் அத்தனை பேரும் நிகராம்!" என்று அன்பு முரசம் கொட்டி விட்டுப் பாரதத்துக்குக் கிளம்பினார். அவர் அடி எடுத்து வைத்த வேளைதானோ என்னவோ ஈழநாட்டில் இன்னும் சில முரசங்கள் முழங்கும் சத்தம் கேட்கிறது. அந்த முரசு வெற்றி முரசாக முழங்க வேண்டும்! அன்பு முரசாக ஒலிக்க வேண்டும்!

நேயர்கள் தொடர்ந்து ஈழநாட்டில் பிரயாணம் செய்வதற்கு முன்னால் அவர்களைக் கம்பளை காங்கிரஸ் மகாநாட்டுக்கு அழைத்துப் போக விரும்புகிறேன். (தொடரும்)

# HEWLETT'S
## MIXTURE




## ஹியூலெட்ஸ்
### மிக்ஸர்

80 ஆண்டுகளுக்கு மேலாக இந்த ஔஷதம் அஜீர்ணம், வயிற்றுக் கோளாறுகள், நெஞ் செரிச்சல், வாயு பொருமல் புளிப்பு, குடல் வியாதிகள் இவற்றிற்கு முக்கிய பரிகார மாக உலக முற்றிலும் பெயர் பெற்று விளங்கி வருகிறது. அபினி சேர்த்தும், அல்லாம லும் 4 அவுன்ஸ், 10 அவுன்ஸ் அளவுகளில் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

C. J. HEWLETT & SON
(INDIA) PRIVATE LTD.,
MADRAS-3.

எல்லா சோதனைகளிலும்
தேர்ச்சி பெற்ற
ஆதர்ச டூத் பிரஷ்
இன்றே வாங்குங்கள்-
அதன் குணங்
களை தெரிந்து
கொள்ளுங்கள்




எல்லா
கடைகளிலும்
கிடைக்கும்

இந்தியாவிலேயே மிக்க
அனுபவம் வாய்ந்த டூத் பிரஷ்
தயாரிப்பவர்கள்

# தீய ஆஸ்த்மா
## பிராங்கைட்டிஸ் சளி
### நீங்கள் தூங்கும்போது இளகுகிறது

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், தலைதோஷத் தால் மூச்சுத்திணறல், இருமல், தும்மல், மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப் படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப் போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார் கள். இந்த நவீன, விஞ்ஞான, அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந் துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் சீக்கிரம் இருமல் தும்மலின்றி சுக மாக சுவாசித்து குழந்தைபோல் தூங்க லாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.



# கிறிஸ்துவத் துறவி லாரென்ஸ்



ராஜாஜி

6

அன்பைச் செலுத்தி, பகவானுடன் சங்கமத்தை அடைய வேண்டும். பகவானுக்கு அன்பு செலுத்துவதே தவங்களின் நோக்கம். விரதங்களின் பயனும் அதுவே. வெறுமனே தேகத்தைத் துன்புறுத்துவது தவமாகாது. இதைப் பற்றி நான் ரொம்ப யோசித்திருக்கிறேன். நான் கண்ட முடிவு என்னவென்றால் பகவானுக்காகவே நாம் செய்யும் எல்லாக் காரியங்களையும் செய்ய வேண்டும். இடையறாமல் அவனுக்கு அன்பைச் செலுத்த வேண்டும். இதுவே அவனை அடையும் பாதை. இதுவே தவம். வேறு குறுக்கு வழி இல்லை.

தவறு ஏதேனும் செய்து விட்டேனால் ''ஆண்டவனே! பார்த்தாயா, நீயின்றி நான் ஏதேனும் செய்தால் இப்படித்தான் ஆகும்'' என்பேன். நான் செய்ய வேண்டியதைச் செய்து விட்டால் அது அவன் செயல் என்று அவனுக்கு வந்தனம் செலுத்துகிறேன்.

என் எண்ணம் இப்பொழுது வேறு ஏதுமில்லை, ஆண்டவன் நினைவு ஒன்றே. அதைத் தவிர வேறு எதற்கும் என் மனம் இடம் தரவில்லை. மறுக்கிறது. வேறு எந்த எண்ணமாவது நுழையப் பார்த்தால் அது உள்ளே நுழைவதற்குள் அகற்றி விடுகிறேன். இதற்கு வேண்டிய சக்தியை ஆண்டவன் எனக்கு அருள்கிறான்.

அவன் அருளைப் பற்றி எனக்கு உறுதியான நம்பிக்கையினால் சில சமயம் நான் வேறு எண்ணங்களை மனத்தின் வாயில் வரையிலும் விடுகிறேன். அப்போது ஆண்டவனை இறைஞ்சுவேன். உடனே என்னைக் கெடுக்க வந்த எண்ணம் இருந்த இடம் தெரியாமல் மாய மாய்ப் போகிறது.

ஏதேனும் லௌகிகப் பணி செய்ய வேண்டி நேரிட்டால் நான் அதைப் பற்றி முன்னதாக யோசிப்பதோ கவலைப் படுவதோ கிடையாது. செய்ய வேண்டிய காலம் வந்தபோது பகவான் வழி காட்டி விடுகிறான். எனக்கு ஒரு சிரமமும் இல்லாமல் முடிந்து விடுகிறது. பிறகு நடந்து போன நிகழ்ச்சிகளைப் பற்றிக் கொஞ்சமேனும் நினைப்பதில்லை. எந்தக் காரியம் செய்துகொண்டிருக்கும்போதும் என் மனம் அதைப் பற்றிக்கொண்டு நிற்பதில்லை. கவனமின்றியே காரியம் முடிந்து போகிறது. எல்லாம் அவன் செயல் அல்லவா?

ஆகாரம் எடுத்துக் கொண்ட பின் இன்னது சாப்பிட்டேன் என்கிற நினைவு இல்லை. நான் பெரிய ஞானியல்ல. ஏதோ எனக்குத் தெரிந்த முறையில் எல்லாம் செய்து கொண்டு போகிறேன். எனக்கு வழிகாட்டும் பகவானுக்கு நன்றி செலுத்திக் கொண்டு செய்வதையெல்லாம் செய்து கொண்டு போகிறேன்.

தேவியின் கடிதம்

# தம்பதிகள் சண்டை!

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

அன்றொரு நாள் என் சிநேகிதி வீட்டுக்குப் போயிருந்தேன். புருஷனும் மனைவியும் இரைந்து சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சி அவர்கள் வழக்கத்துக்கு விரோதமாக இருந்தது. என் சிநேகிதி அழமாட்டாத குறையாக, ''ராஜியை இவர் அடிப்பது சரியா? 'பெண் குழந்தையைத் தந்தை அடித்துக் கண்டிப்பது சரியில்லை' என்றேன். 'உன்னை யார் கேட்டார்கள்?' என்று என்மேல் சீறினார். அது தான் சண்டை'' என்றாள்.

குழந்தைகளுக்குச் சாதாரணமாகப் பயிற்சி அளிப்பதில் பெற்றோர்களில் யார் என்ன பொறுப்பு ஏற்பது என்பது பிரச்னை. எவ்வளவோ ஒற்றுமை இருந்தாலும் இம்மாதிரி அற்ப விஷயங்களில் அவர்களுக்குள் மனஸ்தாபம் ஏற்படுகிறது.

ஒருவர் கண்டிக்கும்போது இன்னொருவர் பரிந்து பேசத் தோன்றுவது சகஜம். ஆனால் அது தவறுதான். பெற்றோர்களிடையே ஒருவர் கண்டிக்கும்போது இன்னொருவர் சலுகை காட்டினால் குழந்தைகளுக்குப் பாரபட்சம் உண்டாகிறது.

ஒரு அம்மாளுக்கு நான்கு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் இருக்கிறார்கள். பெண் சோம்பேறி. நான்கு மருமக்கள்மார்களும் ஓடி ஆடி வீட்டு வேலைகளைச் செய்கிறார்கள். அந்த அம்மாள் தம் ஒரே பெண்ணை ஓயாமல் திட்டிக் கொண்டே இருந்தார். பார்க்கிறவர்கள் 'ஒரு பெண்ணை இப்படிக் கூடக் கரித்துக் கொட்டுவார்களா?' என்று ஆச்சர்யப் படுவதுண்டு. மருமக்கள் நால்வரும் அந்தப் பெண்ணிடம் ஒரு நாள் அநுதாபமாக நடந்து கொள்வார்கள். 'இப்படி ஏன் பெண்களைக் கோபித்துக் கொள்கிறீர்கள்?' என்று கேட்டேன். அந்த அம்மாள் சொன்ன பதில் எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. ''என் பெண் சோம்பேறி. வணங்கா முடி. நான் இப்படித் திட்டிக் கோபிக்கா விட்டால் என் மருமக்கள் எல்லோரும் திட்டுவார்கள். அது எனக்கு மனம் வரவில்லை'' என்றார். இது ஒரு தாயின் மனப்பான்மை. ஒரு பெண்ணுக்கு அளிக்கும் சீதனம் முக்கியமல்ல; அந்தப் பெண்ணுக்குக் கொடுக்கும் பயிற்சி, அதன் பயனாக ஏற்படும் சிறந்த குணம்—இவைதான் உண்மையான ஸ்ரீதனம். குடும்பத்தின் ஒளிச்சுடராகப் பெண்ணைத் தயார் செய்ய ஒரு தாயால்தான் முடியும். வீட்டு வேலைகளைத் தந்தை சொல்லிக் கொடுக்க முடியாது. இதனால்தான் 'தாயைப் பார்த்து மகளைக் கொள்ளு' எனச் சொல்லுகிறோம். வீட்டு நிர்வாகத்தைத் தாயிடம் கற்றுக் கொள்ள வேண்டும்.

ஆண் குழந்தைகளின் ஒழுக்கம், படிப்பு இவைகளைக் கற்பிப்பது தந்தையின் வேலை ஆகும். அவர்கள் ருசிக்கேற்ப அந்தத் துறையில் பிரகாசிக்கச் செய்வது தந்தையின் பொறுப்பு.

நாம் சொல்லாமல் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கும் பாடம் ஒன்று உண்டு. புதிதாக வீடு கட்டின ஒரு அம்மாள் வீட்டுக்குப் போயிருந்தேன். பெரிய பெண் வீட்டைச் சுற்றிக் காட்டினாள். தனியாக இருந்த ஒரு அறையைக் காட்டி, ''இந்த அறை எங்க அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சண்டை வந்தால் போடுகிற இடம். எங்கள் எதிரே சண்டை போடுவது தவறு என்பது எங்கள் அப்பாவின் கருத்து'' என்று பெருமையாகச் சொன்னாள். எனக்குச் சிரிப்பு வந்தது. கணவனும் மனைவியும் சண்டை போடுவதே போதுமான கெடுதல். அதற்குப் புது வீட்டில் வேறு இடம் ஒதுக்க வேண்டுமா?

தந்தை, பெண் குழந்தைகளுக்கு அதிக செல்லம் கொடுப்பது விபரீதமாகி விடுகிறது: அந்தப் பெண்ணுக்குக் கணவனிடம் அன்பு குறைகிறது. செல்வந்தரான தந்தையாக இருந்தால் கணவனுக்கும் தந்தைக்கும் எடை போடுகிறாள். கணவனிடம் மதிப்பு குறைகிறது. அதனால் இன்ப வாழ்க்கையே பாதிக்கப் படுகிறது.

பெண்ணோ பிள்ளையோ சரியாக உலகம் மெச்ச உருப்பெறாமல் போவதற்குச் சில காரணங்கள்தான் முக்கியமாக இருக்கின்றன. இயற்கையில் குழந்தைகள் மோசமாக இருக்க வேண்டும். அடுத்த படியாகப் பெற்றோர்கள் குழந்தைகளைக் கவனிக்காமல் இருப்பது காரணம். மூன்றாவதாக, சகவாசக் கெடுதல் காரணமாக அமையலாம். நான்காவது மிகவும் அவர்களைத் தூக்கி வைத்துச் செல்லம் கொடுப்பதனால் அவ்வாறு நேரிடலாம்.



இவை தவிர, சில குழந்தைகள் முன்னேற்றமின்றி இருப்பதைப் பார்க்கிறோம். அநேகமாய் அதிகக் கண்டிப்பால் ஏற்படும் தாழ்வு மனப்பான்மையால் அவர்கள் அவ்வாறு இருக்கின்றனர்

வீடும் ஒரு அரசாங்கம். அதில் கணவனும், மனைவியும் குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுப்பதைத் தாங்கள் பகிர்ந்து கொள்ள வேண்டுமல்லவா?

இப்படிக்கு,
பூமாதேவி

# 'அனஸின்'

## வலியை வெல்லுவதற்கான
## நான்கு மருந்துகளின் கலப்பாகும்

1. க்வினையின் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின் விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை ... அனஸினைப் போல தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது இருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைஸா மட்டுமே.

**நான்கு**
**மருந்துகளின்**
**சேர்க்கையான**
**'அனஸின்'**
**வேண்டுமென்றே**
**கேளுங்கள்**










ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைஸா

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 25

## இவள் ஒரு அனாதை!

சிறு மலைக் குன்றுகளும் மரங்களும் நிறைந்த அந்தப் பகுதிகளிடையே குதிரைமேல் ஏறிச்சென்றாலும், முன்னால் சென்ற மனிதர்களைத் துரத்திச் செல்வது மிகக் கடினமாகத்தான் இருந்தது. முன்னால் சென்ற அவர்கள் தங்களுக்குப் பின்னால் இருவர் குதிரைமீதேறித் தங்களைத் துரத்திக் கொண்டு வருவதையறிந்து மலைக் குன்றுகளிடையே மறைந்து மறைந்து செல்லத் தொடங்கினர். அவர்கள் கைப்பிடியில் சிக்கிய பெண் அலறித் துடித்த வண்ணமே இருந்தாள். பிருதிவிபதியின் குதிரைக்கு வெகு தூரத்துக்குப் பின்னால் சந்தகரின் குதிரை வந்து கொண்டிருந்தது. குதிரையில் வேகமாகச் சென்ற பிருதிவிபதிக்கு முன்னால் ஓடோடி மலைக் குன்றுகளுக்கிடையே பதுங்கிச் செல்லும் மனிதர்களின் உருவமும், அவர்கள் உடையும் அவர்கள் கையில் வைத்திருந்த தீப்பந்த வெளிச்சத்தில் நன்கு தெரிந்தன.

அவர்கள் அணிந்திருந்த உடையிலிருந்து அவர்கள் போர் வீரர்களாகவோ அல்லது அரசாங்கத்தைச் சேர்ந்தவர்களாகவோ இருக்க வேண்டுமென்பதை உணர்ந்து கொண்டான். அவர்கள் இடையில் உறையிலிடப்பட்ட நீண்ட வாள் தொங்கிக் கொண்டிருந்தது. இந்த நிசி வேளையில் ஆயுதங்களோடு இருக்கும் இவர்களோடு எவ்வித ஆயுதமும் இல்லாதிருக்கும் தன்னால் போரிட்டுச் சமாளிப்பது கடினம் என்றே அவனுக்குத் தோன்றியது. இருப்பினும் ஒரு பெண்ணைப் பலாத்காரமாகத் தூக்கிச் செல்லும் அவர்களை எளிதில் விட்டுவிடவும் அவனுக்கு விருப்பமில்லை. மேடும் பள்ளமுமான அந்த இடத்தில் தன் குதிரையை அதி வேகமாகச் செலுத்தினான். பிருதிவிபதி கிட்டத்தட்ட அவர்களை நெருங்கிய சமயத்தில் முன்னால் சென்றவர்கள் தங்கள் கையிலுள்ள தீப்பந்தங்களை அவிழ்த்து விட்டு இருளில்

கி. ரா. கோபாலன்



மறைய முயற்சித்தனர். ஆனால் அவர்கள் எண்ணம் பலிக்கவில்லை. பிருதிவீபதியின் குதிரை ஒரே பாய்ச்சலில் அவர்கள் இருக்கும் இடத்தை யடைந்து விட்டது. அச்சமயத்தில் பிருதிவீபதி அங்கிருந்த ஒருவனின் தீப்பந்தத்தைக் குதிரைமீது இருந்தபடியே 'லபக்'கென்று பிடுங்கிக் கொண்டான். தீப்பந்தங்களைக் கையிலேந்திய மற்றவர்கள் அப்பொழுதுதான் வீசி எறிந்தனர். பிருதிவீபதியின் கையில் இருந்த தீப்பந்தத்தின் ஒளியில் அங்கிருந்த நால்வரின் முகங்களும் நன்கு தெரிந்தன. அவர்களில் மூவர் போர் வீரர்கள்போல உடை அணிந்திருந்தனர். ஒருவன் புத்த பிக்ஷு கோலத்தில் இருந்தான். அவன்தான் தன் தோளில் பெண்ணின் கையையும் காலையும் கெட்டியாகப் பிடித்த வண்ணம் தோளில் சுமந்து நின்றான். அந்தப் பெண் அவன் இரும்புப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தாள். பிருதிவீபதிக்கு முன்னால் வந்துகொண்டிருந்த சந்தகரின் குதிரை துள்ளிக் குதித்துப் பெண்ணைச் சுமந்து கொண்டிருந்தவன் மேல் மோதியது.

திடீரென்று தன்மீது குதிரை வந்து மோதவே அவன் நிலை கலங்கிப் போய் அந்தப் பெண்ணைத் தன் பிடியிலிருந்து கை நழுவ விட்டான்.

அவனுடைய பிடியிலிருந்து தனக்கு விடுதலை கிடைக்கவே சட்டென்று அந்தப் பெண் அவ்விடத்திலிருந்து ஓடத் தொடங்கினாள். சந்தகர் தாம் ஏறிக் கொண்டு வந்த குதிரையை அவருடைய சாமர்த்தியத்தால் அந்த மனிதன் மீது மோதும்படியாகச் செய்யவில்லை. அந்தக் குதிரைக்கே அப்போதொரு வெறி பிடித்திருந்தது. அது ஓர் நிலையில் நிற்காமல் முன்னும் பின்னுமாக வந்து துள்ளிக் குதித்து அங்கு நின்றவர்கள் மீதெல்

லாம் மோதி அவர்களைக் கீழே தள்ளியது. சந்தகரும் தம் குதிரையை அடக்க எவ்வளவோ பிரயத்தனம் செய்தார். வெறி பிடித்த அந்தக் குதிரையின்மீது உட்கார்ந்திருக்கவே அவருக்கு மிகுந்த பயமாக இருந்தது. குதிரையினால் மோதுண்டு கீழே விழுந்த வீரர்கள் மறுபடியும் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எழுந்து ஓட யத்தனித்தனர். பம்பரம் போல் சுற்றிச் சுற்றி முன் கால்கள் இரண்டையும் தூக்கித் தூக்கிப் பல மூலைகளிலும் சென்று மோதும் சந்தகரின் குதிரை, விழுந்த இடத்திலிருந்து எழுந்தவர்கள் மீதே மோதி அவர்களைக் கீழே தள்ளியது. அந்தக் குதிரை பிருதிவிபதி வீற்றிருந்த கம்பீரமான குதிரையை மாத்திரம் நெருங்கவில்லை. ஒரு கையில் தீப்பந்தத்தோடு இருந்த பிருதிவிபதி சட்டென்று கீழே குதித்து ஒருவனுடைய இடையில் தொங்கிக் கொண்டிருந்த உறையிலிருந்து கத்தியைச் சடாரென்று உருவி எடுத்துக் கொண்டு குதிரைமீது தாவி உட்கார்ந்தான். அடுத்த நிமிடம் கேட்க வேண்டுமா?

வாளோடு குதிரைமீது வீற்றிருந்த அவனோடு போர் செய்வது கடினம் என்றெண்ணி அப் போர்வீரர்கள் மூலைக்கொருவராகத் தலைதெறிக்க ஓடத் தொடங்கினர். யாரை விட்டாலும் புத்த பிக்ஷு கோலத்திலிருந்த மனிதனை எளிதில் விட்டுவிடப் பிருதிவிபதி விரும்பவில்லை. அவன் குதிரையிலிருந்த வண்ணமே தன் கையிலிருந்த தீப்பந்தத்தைச் சந்தகரிடம் கொடுத்து விட்டு ஓடத் தலைப்பட்ட புத்த பிக்ஷுவை நெருங்கி அவன் போர்த்திக் கொண்டிருந்த சீவர ஆடையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

அந்தச் சமயம் வெறி கொண்ட சந்தகரின் குதிரையும் தன் உடம்பாக அந்தச் சன்னியாசியின் மேல் வந்து மோதியது. பிருதிவிபதி அந்த பிக்ஷு



உங்கள் வீட்டில் பூச்சிகளின்

## தொந்தரவு இருக்கிறதா?

# லிண்டேன் கலந்த ப்ளிட் உபயோகித்து

## அவைகளைக் கொல்லுங்கள்!



பூச்சிகள் வளருமிடங்களில் வியாதியும் பரவுகின்றது! உங்கள் குடும்பத்தினரின் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க, பூச்சிகளை அனைப்பொழுதில் நிச்சயமாகக் கொல்லும் சக்தி வாய்ந்த லிண்டேன் கலந்த ப்ளிட்டைத் தவறாமல் உபயோகியுங்கள்! முன்னைவிட தீவிர சக்தி வாய்ந்த இந்த பூச்சி கொல்லி அதிக துரிதமாக வேலை செய்கிறது. இதில் லிண்டேனும் டி.டி.டி.யும் (D.D.T.) ஒருங்கே சேர்ந்துள்ளதால், இதன் பலன் அதிக காலம் நீடித்து நிற்கிறது. புகழ்பெற்ற சிவப்பு, வெள்ளை மற்றும் நீலநிற டின்னில் கிடைக்கும் லிண்டேன் கலந்த ப்ளிட்டை வாங்குங்கள்.




ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது; கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V 4308

தன் பிடியிலிருந்து ஓடி விடாத வண்ணம் அச் சீவர ஆடையை நன்ருக முறுக்கிப் பிடித்துக் கொண்டு தீப்பந்தத்தை அவன் முகத்துக்கு எதிராக நீட்டும்படி சந்தகரைக் கேட்டுக் கொண்டான்.

பாவம்! சந்தகரின் குதிரையும் அப்பொழுதுதான் தன் வெறி தீர்ந்தது போல் சிறிது அமைதியாக இருந்தது. அந்தத் தீபத்தின் ஒளியில் அந்த புத்த பிக்ஷு யாரென்று பிருதிவீபதி முக ஜாடையிலிருந்து தெரிந்துகொண்டான்.

''ஓகோ, தாங்களா! அடிகள் இப்படிப்பட்ட காரியங்களில் ஈடுபட்டு அனுவசியமாக உடம்பை வாட்டிக் கொள்ளும் காரணம் தான் எனக்குப் புரியவில்லை. காவிரிப்பூம்பட்டினத்தை விட்டு அடிகள் திருப்பான்மலைக்கு எப்போது வந்ததோ? அடிகளைத் தரிசித்ததில் மிகவும் சந்தோஷம். அடிகளை இப்படியே விட்டு விடுவது மரியாதையில்லையென்று நினைக்கிறேன். அடிகளிடம் எத்தனையோ விசாரிக்க வேண்டியிருக்கிறது. இப்படியே வரலாம்'' என்று சொல்லிக் கழுத்தில் முறுக்கியிருந்த சீவர ஆடையை விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு குதிரையைத் தட்டினன். அதுவும் கம்பீரமாக நடந்தது. பிருதிவீபதியின் பிடியிலிருந்து விலக முடியாத புத்த பிக்ஷுவும் தலை குனிந்த வண்ணம் குதிரையின்வேகத்துக்குத்தக்கபடி ஓடவேண்டியிருந்தது. சந்தகரும் அந்த பிக்ஷு தப்பித்து ஓடாத வண்ணம் இடையே அவனை நடக்க வைத்து மற்ருெரு பக்கத்தில் தம் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்தார்.

பிருதிவீபதி சந்தகரைப் பார்த்து, ''அடிகளாரைப் பற்றி உங்களுக்கு அதிகம் தெரிந்திருக்காது!'' என்ருன்.

''அடிகளார் ஒரு பெண்ணை அனுயாசமாகத் தூக்கிச் செல்வதில் சமர்த்தர் என்பது வரையில் தெரியுமே தவிர அவர்களைப் பற்றி வேருென்றும் தெரியாது எனக்கு!'' என்ருர் சந்தகர்.

''இது தெரிந்தவரையில் சரிதான். இதிலிருந்து அடிகளாரின் ஒவ்வொரு நடத்தையும் இப்படிப்பட்டதாகத் தானிருக்கும் என்று தாங்கள் தாராளமாக நம்பலாம்!'' என்ருன் பிருதிவீபதி.

''நம்பாமல் என்ன செய்வது? சீவர ஆடையை உத்தேசித்து மாத்திரம் எதையும் நாம் நம்பாமல் விட்டு விடுவது மூடத்தனமாகும். அடிகளார்க்குப் பெண்களென்ருல் அவர்களிடம் தனி அபிமானம் ஏற்பட்டு விடும்போலிருக்கிறது! அந்த அன்பின் காரணமாக அவர்களைத் தோளில் சுமந்து செல்லக் கூட அடிகளார் சித்தமாயிருப்பார்போலிருக்கிறது. நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால் அடிகளார் ஏற்கெனவே தங்களுக்கு அறிமுகமானவர் போலல்லவா தோன்றுகிறது?'' என்ருர் சந்தகர் வியப்போடு.

''எனக்கு மாத்திரம் அறிமுகமானவரில்லை; உங்களுடைய நண்பர் பூதுகனுக்குக்கூட அறிமுகமானவர்தான். அடிகளார் சமுத்திர ஸ்நானம் செய்யும் விஷயத்தில் உங்கள் நண்பர் பூதுகர் மிகவும் உதவி செய்திருக்கிருர். அவர் செய்த அந்த உதவியை அடிகளார் என்றுமே மறப்பதற்கில்லை'' என்ருன் பிருதிவீபதி.

''ஓகோ! அப்படியா? என் நண்பன் பூதுகனுக்கு வேண்டியவரென்ருல் எனக்கும் வேண்டியவராகத்தானிருக்கும்!''

''இப்பொழுதுதான் உங்களுக்கு வேண்டியவராகி விட்டாரே!... உங்களுடைய குதிரை வந்தவுடனே அடிகளிடம் தானே தன் பார்வையைச் செலுத்தியது. ஆஹா! அது எவ்வளவு ஆவலாக அடிகளார் மீது வந்து மோதியது?'' என்ருன் பிருதிவீபதி.

''அடிகளார் மீது ஏற்பட்ட அன்பு சில நிமிட நேரம் என் குதிரையை வெறியாகத்தான் பிடித்து ஆட்டியது. போகட்டும். உலக இருளைத் துடைக்க வந்த போதி மாதவரின் புண்ணிய சீடராகி, தீப்பந்தம் பிடித்துக் கொண்டு மலைப் பிரதேசங்களிலெல்லாம் வந்து அனுதைப் பெண்களை ஆதரிக்கும் பெரு நோக்கத்தோடு அகற்றிக் கொண்டு போக நினைக்கும் அடிகளார் எந்த ஊரோ? அடிகளாரின் நாமதேயம் என்னவோ?'' என்ருர் சந்தகர்.

அந்த இரண்டு குதிரைகளுக்கு மிடையில் நடந்த புத்த பிக்ஷு கலங்கமாலரையர்தான் என்பதை நாம் விளக்கத்தேவையில்லையல்லவா? இருப்பினும் கலங்கமாலரையரைப் பற்றிச் சந்தகர் தெரிந்து கொள்ள வேண்டாமா? பிருதிவீபதி சொன்னதிலிருந்து சந்தகருக்கு ஓரளவு விளங்கியது. இருப்பினும் அந்த புத்த பிக்ஷுவினுடைய ஊர், பெயர் முதலியவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் அவருக்கு ஏற்பட்டது.

அந்நிலையில் கலங்கமாலரையர் தம் நாமதேயத்தைத் தாமே சந்தகரிடம் சொல்லுவாரா? அவர் சந்தகரின் கேள்விக்கு எந்தவிதமான பதிலும் சொல்லாமல் மௌனமாக நடந்து கொண்டு வந்தார்.

பிருதிவீபதி சிரித்துக் கொண்டே, ''துறவு நிலையில் உள்ளவர்களுக்கு ஊரேது, பேரேது? இப்படிப்பட்ட உண்மையான துறவிகளை நாம் ஊரும் பெயரும் தெரிந்து கொண்டுதான்

அழைக்க வேண்டுமென்று அர்த்த மில்லை!'' என்று சொல்லிக் கொண்டே வரும்போது முன்பு எங்கிருந்து கிளம்பி னார்களோ, அதே இடத்துக்கு வந்து சேர்ந்தனர். ஒரு மலைக் குகை வாசலில் அந்த புத்த பிக்ஷுவின் பிடியிலிருந்து தப்பிய பெண் தரையில் விழுந்து கிடந்த ஒரு வயதானவரை மெதுவாகத் தூக்கிக் குகைக்குள் அழைத்துச் செல்ல முயற்சி செய்து கொண்டிருந்தாள்.

பிருதிவிபதியும் சந்தகரும் குதிரையை நிறுத்தினர். குதிரை மீதிருந்த சந்தகர் கீழே இறங்கிக் கீழே கிடந்த வயதான மனிதரைக் கவனித்தார். பக்கத்திலிருந்த குகையில் எரிந்து கொண்டிருந்த விளக்கின் ஒளி அந்தப் பெண்ணின் முழு உருவத்தையும் எடுத்துக் காட்டியது.



அந்தப் பெண்ணுக்குச் சுமார் இருபது வயது இருக்கலாம். நல்ல அழகி. காவி நிறமுடைய புடவையை அணிந்திருந்தாள். அவளுடைய நீண்ட கேசம் எண்ணெய் தடவி ஒழுங்குபடுத்தப்படாமல் தோளில் விழுந்து கிடந்தது. அவள் அழகான கண்களிலிருந்து கண்ணீர் ஆறுகப் பெருகிக் கொண்டிருந்தது. அவள் துயரம் நிறைந்த தழுதழுத்த குரலில், ''தெய்வம் போல வந்து காப்பாற்றிய உங்களுக்கு இறைவன் பேரருள் புரியட்டும்'' என்ருள்.

அப்பொழுதுதான் மெதுவாக எழுந்து உட்கார்ந்த வயோதிகரும் கையைத் தூக்கி அவர்களை ஆசிர்வதித்தார். அடிபட்டுக் கீழே விழுந்த அம்மனிதர் மிகவும் வயதானவர். அவருக்கு அறுபது வயதுக்கு மேலிருக்கலாம். மொட்டைத் தலையும் எலும்போடு ஒட்டிய மெலிந்த தேகமும் அவர் நெடு நாட்களாகத் தவக்கோலம் கொண்டிருந்த ஒரு மனிதர் என்பதை மிக எளிதாக எடுத்துக் காட்டியது. அந்த மலைக் குகைகள் நிறைந்த இடத்தில் ஜைன முனிவரும் அந்தப் பெண்ணும்தான் தனிமையில் வசித்து வந்திருக்கவேண்டுமென்பதை அவர்கள் உணர்ந்து கொண்டனர். அழகும் யௌவனமும் கொண்ட ஒரு பெண்ணைக் கெட்ட எண்ணத்துடன் வஞ்சனையாகக் கடத்திக் கொண்டு செல்லத்தான் அந்தப் பௌத்த பிக்ஷுவும் முயற்சி செய்திருக்க வேண்டும் என்று எளிதாக விளங்கியது.

பிருதிவிபதி அந்த புத்த பிக்ஷுவைத் தன் பிடியிலிருந்து விடாமல் அவனைத் தர தரவென்று இழுத்துக் கொண்டு வந்து அந்த முனிவரின் காலடியில் தள்ளி, ''நீ செய்த கொடிய பாவத்துக்குப் பெரியவரின் கால்களில் விழுந்து மன்னிப்பு கேட்டுக் கொள். அதற்குப் பின்தான் உனக்கு அளிக்க வேண்டிய தண்டனையை நான் அளிக்க வேண்டும். உன்னைப் போன்ற துறவு வேடத்தில் புகுந்த துரோகிகளை ஒழித்துக் கட்டினுல்தான் மதம், சமூகம், நாடு இவைகள் எல்லாம் காப்பாற்றப்படும்'' என்ருன்.

அந்தப் பெண்ணின் முதுகில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்திருந்த முனிவர் மெதுவான குரலில், ''நான் மன்னிப்பதற்கு எதுவும் இல்லை. இந்த உலகில் யாவரும் தாங்கள் செய்த பாபத்துக்காக இறைவனிடம் மன்னிப்பு கேட்க வேண்டியவர்கள். நம்மை இம்சித்தவர்கள் என்பதற்காக இவரை நாம் இம்சிக்க வேண்டாம். இவரைத் தண்டிப்பது உங்கள் கடமையாகக் கருதினுலும் அவரை மன்னித்து விடுங்கள். உலகில் மோகச் சுழலில் சிக்குவதே குற்றம். அந்தச் சுழலில் சிக்கியவர்கள் செய்யும் காரியம் ஒவ்வொன்றும் மேலும் மேலும் செய்யும் குற்றமாகத்தான் இருக்கும். அவரை விட்டு விடுங்கள். என்னை யார் இம்சித்திருந்தாலும் அதற்காக அவர்களை இம்சைக்குள்ளாக்க விரும்பவில்லை'' என்று கூறினர்.

அந்த ஜைன முனிவர் சொல்லியபடி கலங்கமாலரையரை மன்னித்து அனுப்பப் பிருதிவிபதிக்கு இஷ்டமில்லை. அவன் வேறு வேடத்தில் இருந்தாலும் பாதகமில்லை. அவன் துறவு வேடத்தில் புகுந்து கொண்டு இத்தகைய காரியங்களைச் செய்தால் அவன் அயோக்கியனிலும் அயோக்கியன் என்றுதான் சொல்ல வேண்டும். இவனை இப்படியே விட்டு விடுவது தருமமா? தன்னைப் போன்றவர்களுக்கு இது கடமையுமல்ல என்று நினைத்தான் பிருதிவிபதி.

சந்தகரும் அப்படித்தான் நினைத்தார். ''நீங்கள் மன்னிக்கலாம். ஆனல் நாங்கள் அவனை மன்னிக்கத் தருமம்

இடம் கொடுக்காது. உலகைப் பிடித்து அரிக்கும் இத்தகைய விஷக் கிருமிகளை உடனடியாகக் கழித்துவிட வேண்டும். ஒரு விஷக் கிருமியினால் எத்தனையோ விஷக் கிருமிகள் உற்பத்தியாகலாமல்லவா? இதை மனித சமூகமும் நாடும் தாங்காது'' என்றார்.

அரிஷ்டநேமி என்ற அந்த ஜைன முனிவர், ''இந்த உலகில் கெட்ட வழியிலேயே சென்ற மனிதன் நல்ல வழியில் திருந்தவும் இடமுண்டு. தான் செய்த கெடுதலான காரியங்களுக்குரிய தண்டனைகளை அவன் உணர்ந்து விட்டால் மறுபடியும் அந்தக் காரியங்களைச் செய்ய அவன் தலைப்பட மாட்டான். நான் உங்களை வேண்டிக் கொள்கிறேன், பகைவனிடமும் கொஞ்சம் கருணை காட்டிப் பாருங்கள். தான் செய்த அடாத காரியத்துக்காகத் தன்னைத் தண்டிக்காமல் மன்னித்த பெருந்தன்மையையாவது எண்ணி அவன் சீர்திருந்தட்டும்!'' என்று எடுத்துரைத்தார்.

அதற்கு மேல் அந்த முனிவரின் வார்த்தையைத் தட்டுவதில் அவர்களுக்குப் பிரியமில்லை. ஒருநாள் தன் வார்த்தையைக் கேட்டு அப்பூதுகன் அதே புத்த பிக்ஷுவை மன்னித்து அனுப்பியதை எண்ணினான். ஆனால் இன்று அதே பிக்ஷு மறுபடியும் அடாத குற்றங்களைச் செய்திருக்கிறான். தன் வார்த்தையைக் கேட்டுப் பூதுகன் எப்படி மன்னித்து அனுப்பினானோ, அதேபோல ஜைன முனிவரின் வார்த்தையைக் கேட்டு இந்த பிக்ஷுவை மன்னித்து அனுப்பி விடத் தீர்மானித்தான். சந்தகரும் இந்த பிக்ஷுவுக்கு நற்புத்தி புகட்டி அனுப்பி விடத்தான் வேண்டும் என்று தீர்மானித்தார். ஆயினும் அந்த ஜைன முனிவருக்கும் அவரைச் சார்ந்திருக்கும் பெண்ணுக்கும் ஒரு பாதுகாப்பு ஏற்படாத வரையில் இந்த பிக்ஷுவை மன்னித்து அனுப்புவது உசிதமாகாது என்றுதான் அவருக்குப் பட்டது. இன்று இவனை மன்னித்து அனுப்பி விட்டால் மறுநாள் அவன் மற்றவர்களுடன் வந்து அம்முனிவருக்கும் இந்தப் பெண்ணுக்கும் துன்பம் விளைவிக்கலாமல்லவா? அதோடு இந்த புத்த பிக்ஷுவோடு வந்தவர்கள் 'தப்பித்தோம் பிழைத்தோம்' என்று ஓடி விட்டனர். அவர்களே மறுபடியும் வந்து சமண முனிவருக்கும் இந்தப் பெண்ணுக்கும் இடையூறை ஏற்படுத்தலாமல்லவா? ஆகையால் இந்த புத்த பிக்ஷுவை எளிதாக விட்டுவிடுவது அவ்வளவு நன்மையாகாது என்று அவர் எண்ணினார்.

அவர் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தவர்போல், ''இவனை மன்னித்து விடலாம். ஆனால் அதற்கு இது சந்தர்ப்பமில்லை. இவனை நாம் காஞ்சிபுரம் வரையில் அழைத்துச் சென்று இவனைப் பற்றிச் சொல்லி இவனைப் பாதுகாப்பாக வைக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதுதான் நல்லது. அப்படிச் செய்யப்படாத வரையில் மறுபடியும் என்றாவது ஒரு நாள் இன்று செய்த பெருங் கொடுமைகளையே செய்யும் துணிச்சல் உடையவனாகி விடுவான்!'' என்றார்.

இவைகளையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த பிக்ஷு தணிவான குரலில், ''என்னை மன்னித்து விடுங்கள். நான் இத்தகைய பிசகைச் செய்யத் துணியவில்லை. ஆனால் பல்லவச் சக்கரவர்த்தியின் ஒன்று விட்ட சகோதரனான சிம்மவர்மன்தான் இத்தகைய காரியங்களைச் செய்யும்படி என்னைத் தூண்டினான். நான் காஞ்சியைச் சேர்ந்தவனல்ல! தஞ்சையைச் சேர்ந்தவன். என்னை நீங்கள் மன்னித்து விட்டீர்களானால் நான் என்னுடைய ஊருக்குச் சென்று விடுவேன். மறுபடியும் இங்கு வந்து யாரையும் இம்சிக்கவே மாட்டேன்!'' என்று உறுதி கூறினான்.



சந்தகர் இதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே, ''ஓகோ! நீங்கள் எங்கள் நாட்டைச் சேர்ந்தவர்தானா? அப்படி வாருங்கள் வழிக்கு! தஞ்சை மாநகரைச் சேர்ந்தவரா? இப்பொழுது புரிந்து விட்டது. திடீரென்று இல்லற தருமங்களில் எல்லாம் வெறுப்புற்றுத் துறவற மார்க்கத்தில் புகுந்த மகா திராகிய கலங்கமாலரையர் தாங்கள்தானே? தாங்கள் ஏதோ அரசியல் சூழ்ச்சிக்காகத்தான் புத்த பிக்ஷுவாகி யிருப்பதாகச் சிலர் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் அந்த அரசியல் சூழ்ச்சிகளோடு பெண் பித்து கொண்டும் புத்த பிக்ஷுவாகி யிருக்கும் விஷயம் இப்பொழுதுதான் விளங்கியது. உங்களைத்தான் பூதுகன் கடலில் குளிப்பாட்டி அலசி எடுத்தானா? அவன் அவ்

வளவு அலசி எடுத்தும் இன்னும் உங்கள் புத்தியில் ஒட்டிக் கொண்டிருக்கும் அழுக்கு அப்படியேதானிருக்கிறது! போகட்டும். இப்பொழுது நீங்கள், இந்த இடத்திலேயே நிற்கவில்லை, நேராக உங்களுடைய ஊராகிய தஞ்சைமாநகருக்கே சென்று விடுகிறேன் என்கிறீர்கள், இல்லையா? ரொம்ப நல்லது. நீங்கள் தஞ்சைமாநகருக்குச் செல்வதில் எவ்வித ஆட்சேபணையுமில்லை. ஆனால் இப்படிச் சீவர ஆடை அணிந்த கோலத்தில் உங்களை எந்த இடத்துக்கும் அனுமதிக்க எனக்கு விருப்பமில்லை. இதோ நான் என் வெள்ளையான மேல் வஸ்திரத்தைத் தருகிறேன். உங்கள் சீவர ஆடையை அகற்றிவிட்டு இதை உடுத்திக் கொண்டு நீங்கள் செல்லலாம். இப்பொழுது உங்களுக்கு நாங்கள் அளிக்கும் தண்டனை இதுதான். மறுபடியும் புத்த துறவிகளுக்கு உரிய சீவர ஆடையில் உங்களை நாங்கள் எங்கே பார்க்க நேர்ந்தாலும் மலையிலிருந்து உருட்டி மகா பரிநிர்வாணத்துக்கு வழி காட்டுவோம்!'' என்று சொல்லித் தாம் போர்த்தியிருந்த வெள்ளை வஸ்திரத்தை எடுத்துக் கலங்கமாலரையரிடம் வீசி எறிந்தார்.

''சரி! இதுவும் ஒரு சரியான தண்டனைதான். இதனால் புத்த சமயமும் பிழைக்கும்!'' என்று சொல்லிவிட்டுத் தன் கைகளை நீட்டி, சீவர ஆடைகளைக் களைந்துவிட்டு அந்த ஆடையை அணிந்து கொள்ளும்படி கலங்கமாலரையருக்கு உத்தரவிட்டான் பிருதிவீபதி.

கலங்கமாலரையனும் வெட்கித் தலை குனிந்த வண்ணம் மறைவான இடத்துக்குச் சென்று தன் சீவர ஆடைகளைக் களைந்து வெண்ணிற ஆடையை யணிந்து கொண்டு, அச் சீவர ஆடையைக் கொண்டு வந்து வைத்தான்.

சந்தகர் சீவர ஆடையைக் கையில் எடுத்துக் கொண்டு, ''இனி நீங்கள் போகலாம்!'' என்றார்.

கலங்கமாலரையன் தலை குனிந்தவண்ணம் மெதுவாக அங்கிருந்து நடந்து இருளில் மறைந்தான்.

அரிஷ்டநேமி என்ற அந்த ஜைன முனிவர் ''அவனை இவ்வளவோடு மன்னித்து அனுப்பியதில் எனக்கு மிகுந்த திருப்தி. அவன் என்னை இம்சித்ததற்காக அவனை இம்சிக்க விரும்பவில்லை. ஆனால் நீங்கள் பெருந்தன்மையோடு ஒரு நல்ல காரியம் செய்தீர்கள். துறவியின் உடையில் அலையும் சில கயவர்களுக்குப் பாடம் கற்பிக்க இதுவொரு சிறந்த முறை. எந்தச் சமயத்தினரா யிருந்தால் என்ன? துறவிகள் என்பவர்கள் வணக்கத்துக்குரியவர்கள். அவர்களிடமே இப்படிப்பட்ட அக்கிரமமும் ஊழலும் வளருமானால் அப்புறம் தருமம் எங்கே நிலைப்பது? உத்தமரான பல்லவ சக்கரவர்த்தி நந்திவர்மர் தீவிர சைவராயினும் ஜைன சமயத்தின் மீதோ புத்த சமயத்தின் மீதோ துவேஷம் கொண்டவர் இல்லை. தார்மீக வழியைப் பின்பற்றி நடப்பவர். ஆனால் அவருடைய ஒன்று விட்ட சகோதரனான சிம்மவர்மன் ஜைன சமயத்துக்குத் தன்னால் எவ்வளவு இழுக்கு ஏற்படுத்த முடியுமோ அவ்வளவையும் செய்து கொண்டு வருகிறான். இதை நான் ஏன் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றால் நீங்கள் இருவரும் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவர்களாயிருப்பினும் இவ்வுலகில் நேர்மையையும் நியதியையும் காப்பாற்ற விரும்பும் வாலிபர்களாகத் தோன்றுகிறீர்கள் என்ற காரணத்தினால்தான்'' என்றார்.

''நீங்கள் சொல்வதில் உண்மையிருக்கிறது. ஜைன சமயத்தவனாகிய சிம்மவர்மன் உங்களைப் போன்ற துறவியின் பாதுகாப்பில் இருக்கும் ஒரு பெண்ணைக் கடத்திச் செல்ல புத்த சமயத்தவன் என்று வேஷம் போடும் ஒரு துறவியின் உதவியை நாடினால் இந்த இருவர்களாலும் இவ்விரு சமயங்களுக்கும் ஏற்பட்டுள்ள களங்கத்தைப் பற்றி நாம் என்ன சொல்வது? நானும் சமண சமயத்தைச் சேர்ந்தவன்தான். ஆனால் தருமத்தை விற்று எதையும் நிலைநாட்ட விரும்பும் எவனையும் இவ்வுலகில் விட்டு வைக்க நான் விரும்பவில்லை. சிம்மவர்மன் சமண சமயத்தினனானதே தன்னுடைய சகோதரனின் பெருமை பொருந்திய அரசைச் சதி செய்து கவிழ்த்துத் தான் அச் சிங்காதனத்தைக் கைப்பற்றிக் கொள்ளத்தான் என்கிற ரகசியத்தை உங்களுக்கு நான் சொல்லி வைக்கிறேன். இன்று பல்லவ சக்கரவர்த்தி நந்திவர்மருக்கு உற்ற துணையாக இருக்கும் அரசர்களான இராஷ்டிரகூட மன்னர் அமோகவர்ஷரும், கங்கதேசத்து அரசர் ராஜமல்லரும் தீவிர சமண சமயத்தினர். இந் நிலையில் பொறாமை கொண்ட சிம்மவர்மன் தானும் ஒரு சமணனாகி, எவ்வகையிலாவது மத துவேஷத்தைக் கிளப்பி அவர்கள் நட்பைக் குலைக்கப் பார்க்கிறான். இதற்காக இப்படிப்பட்ட சிறு சூழ்ச்சிகள் செய்து மன்னனின் பெயருக்கு இழுக்கை உண்டாக்க நினைக்கிறான்'' என்றான் பிருதிவீபதி.

''இந்த பெண்ணைத் தங்களிடமிருந்து கடத்திச் செல்லச் செய்த சூழ்ச்சியிலும் ஏதோ அந்தரங்கம் இருக்கிறது. இந்தப் பெண் யார்....?'' என்றார் சந்தகர்.

தன்னைப் பற்றிச் சந்தகர் விசாரித்ததும் அங்கு நின்றுகொண்டிருந்த பெண் மிகவும் வெட்கமடைந்தவளாக அங்கிருந்த சிறு மலைக் குகைக்குள் சென்றாள்.

அரிஷ்டநேமி என்ற அந்த முனிவர் ஒரு பெருமூச்சு விட்டார். ''இந்தப் பெண்ணுக்கு நான் வைத்த பெயர் கரேசி. இவள் ஒரு அனாதை. இவள் கதையே வேறு...'' என்றார். **(தொடரும்)**

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்



அவள் சொல்வது சரியே. பித்தளை, தாமிர சாமான்களில் பிராஸோ ஏற்படுத்தும் மாறுதலைப் பற்றி அவள் நன்கறிவாள். பிராஸோ சுத்தம் செய்வதோடு பளபளப் பாகவும் செய்கிறது — அதுவும் மிருதுவாக, விரைவாக, எளிதாக.







திரவம் அல்லது பசை

## பிராஸோ

மெட்டல் பாலிஷ்

உங்கள் வீட்டிற்கு பிரகாசத்தை கொண்டுவருகிறது

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப் பெற்றது)

# "உங்கள் பற்களை பாதுகாறுங்கள் !"

## விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறர்



உங்கள் டூத் ப்ரஷ் நல்ல நிலையில் வைக்கப்பட்டிருந்தால் பற்களின் பராமரிப்பு சுலபமாகிறது. பின் கண்ட எளிதான விதிகளைப் பின்பற்றினால் உங்கள் 'விஸ்டம்' டூத் ப்ரஷ் நன்கு நீடித்து சேவை தரும்...



உங்கள் டூத் ப்ரஷைக் கழுவ வெதுப்பான தண்ணீரை உபயோகியுங்கள். வெந்நீர் கூடாது. வெந்நீரில் நனைய விட்டால் ப்ரஷின் தலை மடங்கி குச்சங்கள் தளர்ந்து போகின்றன.





பற்களை துலக்கிய பிறகு ப்ரஷை அலசி கழுவி அதை தொங்கவிட்டு அல்லது நிமிர்த்தி வைத்து உலர விடுங்கள். இதனால் குச்சங்கள் உறுதியாகவும் விறைப்புடனும் இருக்கும்.



இரண்டு டூத் ப்ரஷுகளை வைத்து மாற்றி மாற்றி உபயோகிப்பதுதான் மிகவும் நல்லது. இதனால் ஒவ்வொரு ப்ரஷும் நெடுநாள் முறையில் நீடித்து உழைக்கும்.

உங்கள் பற்களை ஆரோக்கியமாய் வையுங்கள்: இரவிலும் காலையிலும் விஸ்டம் ப்ரஷால் துலக்குங்கள். துலக்க சுலபமாயிருக்க அதன் சிறிய தலை மற்றும் வளைந்த கைப்பிடியமைப்பால் வாயில் மூலை முடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விறைப்பான நைலான் குச்சங்கள் பல் இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட விஸ்டம் டூத் ப்ரஷை உபயோகியுங்கள் !

காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை காணுங்கள்

*Wisdom* REGD.



நீடித்து
உழைக்கும்
டூத் ப்ரஷ்

# மணத் தவிசு



பேராசிரியர்:
அ. சீநிவாசராகவன்

அது மிகப் பெரிய கலியாண மண்டபம். எவ்வளவு பெரியது என்று அளவிட முடியாது, 'கரை தெரி அரியது'. தங்கத்தால் மண்டபத்தின் விதானத்தை அமைத்திருந்தார்கள். அமைப்பதற்கு என்ன, மிதிலை மன்னன் மகள் சீதையின் திருமணம் அல்லவா அங்கு நடைபெற இருக்கிறது! மலையைப் போல் நிமிர்ந்து உயர்ந்த அந்த மண்டபத்தில் அங்கங்கே இரத்தினங்கள் பதிக்கப் பெற்றிருந்தன. கலியாணத்திற்கு உரிய மங்கலப் பொருள்கள் மண்டபம் எங்கும் நிரம்பி இருந்தன. இந்த மண்டபத்திற்குள்ளே கவிச்சக்கரவர்த்தி கம்பர் நம்மை அழைத்துச் செல்கிறார்:

**கரைதேர் அரியது கனகம் வேய்ந்தது**
**வரை என உயர்ந்தது மணியில் செய்தது**
**நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்**

*[கரை-எல்லை; தெரி அரியது-தெரிவதற்கு முடியாதது; கனகம்-தங்கம்; வரை-மலை; மணியில்-நவரத்தினங்களால்; நிரைவளை-வரிசை வரிசையாய் வளைகளை அணிந்த பெண், இங்கே, சீதை; மணவினை-கலியாண காரியம், இங்கே, அதற்கு உரிய பொருள்கள்.]*

திருமண மண்டபத்திற்குள் நுழையும் போது, மங்கல வாத்தியங்கள் முழங்குகின்றன. வேத கோஷம் கடல் போல் ஒலிக்கின்றது:

**மங்கல முரசினம் மழையின் ஆர்த்தன**
**சங்குகள் முரன்றன தாரை போர்எனப்**
**பொங்கின மறையவர் புகலும் நான்மறை**
**கங்குலின் ஒலிக்கும்மா கடலும் போன்றவே**

மங்கல பேரிகைகளின் கூட்டம் மழை மேகத்தைப் போல் ஓங்கி அதிர்கின்றன. சங்குகள் விட்டு விட்டு ஒலிக்கின்றன. தாரைகள் ஒலித்திரள்களை அடுக்கிப் போர் போல் குவிக்கின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக, மறையவர் பாடிய வேத கீதம், இரவில் பொங்கி முழங்கும் பெருங்கடல் போல், எங்கும் நிரம்புகிறது.

மண்டபத்தில், முனிவர்களும், சிற்றரசர்களும், பேரரசர்களும், அவர்களுடைய பரிவாரங்களும், நகர மக்களும் பெருந்திரளாகக் கூடி இருப்பதால், உள்ளே செல்வது கடினமாய் இருக்கிறது. கம்பருடைய உதவியால் எப்படியோ உள்ளே போகிறோம். நாம் போவதற்கும் மணமகன் வருவதற்கும் சரியாக இருக்கிறது. கூட்டத்தில் ஒரே ஆரவாரம். மணத் தவிசை (கலியாண ஆசனத்தை) நோக்கி, இராமன் செல்வதைப் பார்த்து அவன் வடிவழகிலே ஈடுபட்டு வியந்து நிற்கிறோம். கூட்டத்தில் உள்ளவர்கள் நம்மைப் போலவே, அழகைப் பருகி, பரவசமே அடைந்து விடுகிறார்கள். அந்த ஆனந்த வெறியில், மலர்களையும்,

**அருள்வாக்கு**

இப்பொழுது மோகமுள்ள நிலைமையில் நாஸ்திக புத்தி தீவிரமாக உள்ள வீடுகளிலும் ஸ்திரீகள்தான் நைந்து உருகுகிறார்கள். அவர்களுக்குப் பக்தி இருக்கிறவரையில் நமது மதத்துக்கு ஹானி ஏற்படமாட்டாது. நமது தர்மம் கெடாது. தம்முடைய சகோதரன் நாஸ்திகனாகிவிட்டகாலத்தில் திலகவதியார் பிரார்த்தித்ததற்கு இரங்கியே பரமகாருண்ணியநிதி அவரை சைவத்திற்குத் திருப்பினார். தம்முடைய புருஷன் நாஸ்திகனாகி விட்டதைப் பொறாது மங்கையர்க் கரசியார் துன்பப்பட்டதற்கு இரங்கியே பரமேசுவரன் அனுக்கிரஹித்தார். ஸ்திரீகள் நமது கோவில்களில் சந்நிதானத்தில் பிரார்த்திக்கும் வரையில் நமது மதத்துக்குப் பாதகம் ஏற்படாது. புருஷர்கள் வெள்ளைக்காரத் தேசங்களின் ஆசாரங்களைப் பார்த்துப் புரண்டு போய் விடுகிறார்கள். ஆனால் நமது ஸ்திரீகளின் மன உறுதி அசைவதில்லை.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்.

வாசனைப் பொடிகளையும், பொன்னையும், மணியையும், பீதாம்பரங்களையும் வீசுகிறார்கள்.

**சோர்ந்தனர் மலர்மழை, சுண்ணம் தூவினர்,**
**விரிந்து ஒளிர் காசு, பொன், தூசு வீசினர்,**
**பரிந்தனர் அழகினைப் பருகினார் போல் ஆம்.**

*[சுண்ணம் - வாசனைப்பொடி; காசு - இரத்தினம்; தூசு - ஆடை; பரிந்தனர்-விருப்பம் மிகுதியாய் உள்ளவர். ஆம், அழகைப் பருகத்தான்; பருகினார் போல் ஆம்: குடித்துவிட்டார்கள் போல இருக்கிறது.]*

இந்த அழகு வெறியிலிருந்து மீள்வதற்குள், சீதை என்னும் எழிற் கொடி, மண்டபத்தின் ஊடே மணத் தவிசை நோக்கி நடந்து செல்கிறது. இந்தத் தெய்வ அழகு, திருமண மேடையில், இராமனுடைய ஒப்பற்ற சௌந்தர்யத்தின் அருகில் சென்று அமர்ந்தால், எப்படி இருக்கும் என்று நாம் எண்ணுவதற்குள், அந்த அற்புதம் நிகழ்ந்து விடுகிறது. வெற்றிக்கும், பெருமைக்கும் இருப்பிடமான வீரன் இராமனும், அவனுடைய அன்புத் துணையான சீதையும் மணத் தவிசில் ஒன்றாக வீற்றிருக்கிறார்கள்.

**மன்றலின் வந்து மணத்தவிசு ஏறி**
**வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து**
**இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்.**

*[மன்றலின் - கலியாண கோலத்தோடு; ஆர்வத்து - அன்புடைய; அன்னமும் - அன்னம் போன்றவளும்; எய்தி - நெருங்கி.]*

தனித்தனியாக இவ்விருவருடைய அழகையும் பார்த்த போது ஏற்பட்ட பிரமிப்பு இப்போது கரைந்து, நமது நெஞ்சில் இன்பகரமான நிறைவு ஒன்றே ஆட்சி செலுத்துகிறது. இருவருக்கும் எவ்வளவு பொருத்தம்! இந்தப் பொருத்தத்தில், பல் விசித்திரமான சஞ்சாரங்கள் ஒன்றாக இசைந்த இராக ஆலாபனையால் ஏற்படுகின்ற பூரண உணர்ச்சியைக் கண்டு விடுகிறோம்.

கம்பர் சொல்கிறார்: ஆமாம், இந்த உணர்ச்சிதான் இயற்கையானது. அழகுப் பொருள்களைத் தனித்தனியாகக் காணும் போது ஏற்படும் எழுச்சியும் வியப்பும், அழகு என்னும் சத்திய தத்துவத்தைத் தொடும் போது நாம் பெறுகின்ற நிறைவிலே சங்கமம் ஆகிவிடுகின்றன.

இவ்வுலகப் பொருள்களோடு, அவை ஒவ்வொன்றின் தனித் தன்மையில் ஈடுபட்டு நாம் பெறுகின்ற இன்பத் தொடர்பே போகம் என்பது. போகத்தின் கருவிகள் உடலும், புலன்களும், மனமும்-அதாவது, கரணங்கள். இக் கருவிகள் படர்வதற்கு இடமாய் இருந்து போகத்தைத் தருவன உலகப் பொருள்கள். நம்முடைய கரணங்களும், உலகப் பொருள்களும் சேரும் போது தான் **போகம்** என்பது உண்டாகிறது.

கரணங்களுக்கும், உலகப் பொருள்களுக்கும் காரணமாய் நிற்கின்ற சத்தியத்தை நாடுகின்ற வழி தான், நாடிப் பெறுகின்ற நிலைதான் **யோகம்** என்பது.

போகத்தையே-இவ்வுலக வாழ்க்கையையே-அதன் காரணமான பரம் பொருளைத் தொடும் கருவியாக அமைத்து விட்டால், போகம் வேறு, யோகம் வேறு என்று இல்லாமல், இரண்டும் ஒன்றாகி விடுகின்றன. அப்போது பேரின்ப நிறைவு தோன்றுகிறது.

இராமனும், சீதையும், போகத்தையும் யோகத்தையும் போல, வெவ்வேறாகத் தோன்றுகிறார்கள். இங்கே இந்த மணத் தவிசில் அவர்கள் ஒன்றாகிவிட்டார்கள். போகமே யோகமாகும்போது, இங்கே, இந்த உலகத்தில், பேரின்பத்தை உணர முடிகிறதல்லவா? அந்த நிறைவைத் தான், இப்போது, சீதையையும் இராமனையும் சேர்த்துப் பார்க்கும்போது, நாம் பெறுகிறோம். இரு பேரழகுகள் ஒன்றாக இசைந்து, எல்லையில்லா அழகுத் தத்துவத்தை — சத்தியத்தை — கண் முன்னே நிறுத்தி விட்டன.

**... ...மணத் தவிசு ஏறி**
**வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து**
**இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்.**

எப்படி இருந்தார்கள்?

**ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.**

மணத்தவிசிலே சௌந்தர்ய தரிசனம் பெற்ற நமது நெஞ்சின் நிறைவு 'ஆம்' 'ஆம்' என்று ஆமோதிக்கிறது.




# மே 1957-ல்
# ஜெர்மனி நடத்திய
# மகத்தான பந்தயத்திலே!

| | | |
|---|---|---|
| 500 ஸிஸி முதல் | லிபரட்டி | கிலெரா |
| இரண்டாவது | மாகின்டயர் | கிலெரா |
| 350 ஸிஸி முதல் | லிபரட்டி | கிலெரா |
| ஸைட்கார் | ஹில்லிபிராண்ட் | பி. எம். டபிள்யூ |

முடிவுகள் அதிகாரபூர்வமானவை




## எண்ணெய்களில் மிகச் சிறந்தது

**ஸி. ஸி. வேக்பீல்ட் & கோ., லிமிடெட்**

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

A. 57.

# திரும்பிய அதிர்ஷ்டம்

சு. ரா.

காரியாலயத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தியின் மனம் நிரம்பியிருந்தது. அடுத்தநாள் அவனுக்கு ஒருவித அதிர்ஷ்டம் வர இருந்தது. தன் மனைவி காயத்ரியிடம் அந்தச் சந்தோஷ சமாசாரத்தைச் சொல்லி, அவளை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தத் துடித்தான்.

அவன் வேலை பார்த்து வந்த 'ஜாக்ஸன் அண்ட் பீடர்ஸன் கம்பெனி'யின் பிரதம டைரெக்டர் ஜாக்ஸனுக்கு ஒரு பெண் அந்தரங்கக் காரியதரிசி உண்டு. அவள் நாலைந்து மாதங்களுக்கு 'லீவ்' எடுத்துக் கொள்வதாக இருந்தாள், தன் பிரசவத்தை உத்தேசித்து. அவள் லீவில் இருக்கும் சமயம் யாரை அந்தரங்கக் காரியதர்சியாக நியமிப்பது என்பதற்காக அடுத்தநாள் தேர்வுப் பரீட்சை நடக்க இருந்தது. சுருக்கெழுத்து, தட்டெழுத்துப் பரீட்சைகளில் தேறி 'ஸ்டெனோ'க்களாக அங்கே வேலை பார்த்து வந்த மூன்றுபேர்களை மட்டுமே 'தேர்வு'க்கு அழைத்திருந்தார்கள். அம்மூவரில் கிருஷ்ணமூர்த்தியும் ஒருவன்.

அந்த வேலை கிடைத்தால் மாதா மாதம் இருநூற்றைம்பது ரூபாய் அதிகம் கிடைக்கும். எதிர்பார்க்க முடியாத அதிர்ஷ்டமல்லவா அது? விஷயம் தெரிந்தால் மனைவி காயத்ரி எவ்வளவு சந்தோஷப்படுவாள்?

அவளை மணந்ததிலிருந்து அவனுக்குப் பலவித நன்மைகள் உண்டாயின. அதற்கு முன்பு வீடு இல்லாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்தவனுக்கு, அவளை மணந்த இரண்டு மாதங்களுக்குள் கம்பெனிக்குச் சமீபத்திலேயே ஒரு நல்ல வீடு கிடைத்தது. வேலைக்காகத் திண்டாடிக் கொண்டிருந்த அவன் தம்பிக்கு வேலை ஆயிற்று. ஆறு வருஷங்களாகக் குணமாகாமல் படுத்த படுக்கையாக இருந்த அவனுடைய அம்மாவின் நோய் படிப்படியாகக் குறைந்து, அவள் எழுந்து நடமாடும் நிலையை அடைந்திருந்தாள். இன்னும்....

இதெல்லாம் அவன் நினைவுக்கு வந்தது. '....என்ன இருந்தாலும் காயத்ரி அதிர்ஷ்டசாலி. அவளுடைய அதிர்ஷ்டத்தினால் இந்த வேலையும் எனக்குத்தான் கிடைக்கும்' என்ற திட நம்பிக்கையுடன் வீடு திரும்பினான்.

மலர்ந்த முகத்துடன் அவனிடம் காப்பியைக் கொடுத்துக் கொண்டே, ''இன்று பகல் ஒரு வியாபாரம் செய்தேன். என்னவென்று உங்களால் சொல்ல முடியுமா?'' என்று கேட்டாள் காயத்ரி.

''நாளைக்கு நமக்கு ஒரு அதிர்ஷ்டம் வரப் போகிறது. அது என்னவென்று சொல்லிவிடு. நீ என்ன வியாபாரம் செய்தாய் என்று நானும் சொல்லிவிடுகிறேன்'' என்று சிரித்தபடியே கூறினான் கிருஷ்ணமூர்த்தி.

''நான் என்ன ஜோசியமா கற்று வைத்திருக்கிறேன், வரப் போவதை முன்கூட்டியே சொல்ல?'' என்று கேட்டாள்.

''நீ என்ன செய்திருப்பாய் என்று சொல்ல எனக்கு மட்டும் ஜோசியம் தெரியுமா, என்ன?'' என்று கூறிவிட்டு, ''காயத்ரி! நாளையில் இருந்து நாலைந்து மாதங்களுக்கு நான் ஆபீஸ் டைரக்டரின் அந்தரங்கக் காரியதரிசியாக வேலை செய்யப் போகிறேன். சம்பளம் நானூற்றைம்பது ரூபாய்'' என்றான் மிகுந்த உற்சாகத்துடன்.

''நிஜமாகவா? உத்தரவு வந்துவிட்டதா?'' என்று ஆவலுடன் கேட்டாள் காயத்ரி.

''நாளைக்கு அதற்கான தேர்வுப் பரீட்சை நடக்கப்போகிறது. நாளை சாயந்திரமே முடிவும் தெரிந்து, உத்தரவும் உடனே கைக்குக் கிடைத்துவிடும்'' என்றான்.

அவள் சிரித்துக் கொண்டே, ''உத்தரவு கிடைப்பதற்குள்ளாகவா இவ்வளவு சந்தோஷம்! நம்முடைய அதிர்ஷ்டம் எப்படியிருக்குமோ?'' என்றாள்.

''உன் அதிர்ஷ்டத்தினால் இந்த வேலை கட்டாயம் கிடைக்கும், காயத்ரி. அதுவும் இல்லாமல், கம்பெனியிலேயே எல்லாரும் அப்படித்தான் பேசிக் கொண்டிருக்கிறார்கள்'' என்றான் மிகப் பெருமையாக.

''என் அதிர்ஷ்டத்தைப் பற்றி நீங்கள்தான் பெருமைப்பட்டுக்கொள்ள வேண்டும்! சரி! சமையல் உள்ளுக்கு வருகிறீர்களா? நான் வாங்கியதைக் காட்டுகிறேன்'' என்று கூப்பிட்டாள். அவளைப் பின்தொடர்ந்து சமையலறைக்குச் சென்றான் அவன்.

அங்கே ஒரு நீண்ட பலகையின்மேல் வரிசையாக ஏழெட்டுப் புதிய கண்ணாடி ஜாடிகள் வைக்கப்பட்டிருந்தன. ஒன்றில் துவரம்பருப்பு, இன்னொன்றில் சர்க்கரை, மற்றொன்றில் காப்பிப் பொடி, நாலாவதில் ரவை...என்று சாமான்களின் பெயர்கள் எழுதி வைக்கப்பட்டிருந்தன. சில ஜாடிகள் காலியாக இருந்தன.

கிருஷ்ணமூர்த்தி பெருமையுடன் காயத்ரியைப் பார்த்தான். ''ஜாடிகள் நன்றாக இருக்கின்றன! அதைவிட அவற்றை நீ வரிசைப்படுத்தி வைத்திருப்பது வெகு ஜோர்!'' என்று குதூகலத்துடன் சொன்னான்.

''என்ன விலைக்கு வாங்கி இருப்பேன் என்று சொல்லுங்கள் பார்க்கலாம்'' என்று கேட்டாள் அவள்.

''எவ்வளவு வேண்டுமானாலும் தரலாம். எத்தனை அழகாக இருக்கின்றன!'' என்று மழுப்பினான் அவன்.

''அப்படிச் சொல்லித் தப்பித்துக் கொள்ள முடியாது. விலையைச் சொல்லுங்கள்'' என்றாள் புன்சிரிப்புடன்.

"சொல்லட்டுமா? எல்லாவற்றுக்கும் சேர்த்துப் பத்து ரூபாய். சரிதானு?"

"தப்பு!"

"அதைவிட அதிகமா? குறைவா?"

"அதை நான் ஏன் சொல்கிறேன்!"

"அப்படியானுல் என்னுல் விலையைக் கூற முடியாது. தயவு செய்து நீயே சொல்லிவிடு" என்று சொன்னுன்.

"அப்படி வாருங்கள் வழிக்கு....வீட்டில் இருந்த சில பழைய துணிகளைப் போட்டுத் தான் வாங்கினேன். பணமாக ஒன்றும் கொடுக்கவில்லை!" என்ருள்.

அதைக் கேட்ட அவனுக்குத் 'திக்'கெனப் பட்டது. திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்ததுபோல், 'விடுவிடு'வென்று முன்னுல் உள்ள அறைக்கு ஓடினுன். விஷயம் புரியாத காயத்ரியும் அவன் பின்னுல் ஓடினுள்.

அங்கே இருந்த 'கோட் ஸ்டாண்'டை நோக்கினுன். அவன் எதிர்பார்த்து வந்த வஸ்து அங்கே இல்லை! அவன் முகம் சிவந்தது. வந்த வேகத்தோடு திரும்பினுன். காயத்ரி அவன் பின்னுலேயே கலவரத்தோடு நின்று கொண்டிருந்ததைக் கண்டான்.

"காயத்ரி! ஸ்டாண்டில் இருந்த என் பழைய கோட் எங்கே?" என்று இரைந்தான்.

அவள் கலவரம் மறைந்தது. விஷயத்தைப் புரிந்துகொண்ட அவளுக்குச் சிரிப்பு வந்தது. "அப்பா! என்னமோ ஏதோ என்று பயந்து போய்விட்டேன். அந்தப் பழைய கோட்டைப் பார்க்கவா அப்படி விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"விளையாடவேண்டாம், காயத்ரி! அதைக் கூடவா ஜாடிக்காரனிடம் போட்டாய்?" என்று கோபத்துடன் கேட்டான்.

"ஆமாம்! அதனுலென்ன? அதன் கழுத்துப் பட்டையெல்லாம் அநேகமாகக் கிழிந்து போய்விட்டதே! கையிலும் ஒரு கிழிசல் இருந்தது" என்ருள் நிதானமாக.

"கிழிந்திருந்தால் என்ன? அது எவ்வளவு 'ஆகி வந்த' கோட்டு என்று உனக்குத் தெரியுமா? அதைப் போட்டுக் கொண்டு, எத்தனை பரீட்சை எழுதி வெற்றி பெற்றிருக்கிறேன்! நாளைக்குக்கூட அதைப் போட்டுக் கொண்டு தேர்வுப் பரீட்சைக்குப் போக எண்ணி யிருந்தேன். எல்லாம் உன்னுல் கெட்டுக் குட்டிச் சுவராகிவிட்டது. அவசரப்பட்டு என் அதிர்ஷ்டக் கோட்டைத் தொலைத்துவிட்டாயே. கண்ணுடி ஜாடி வேண்டுமானுல் என்னிடம் பணம் கேட்டிருக்கக் கூடாதா?" என்று கூறி விட்டு, முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தான்.

"அந்தக் கோட்டு போய்விட்டால், என்ன? என் அதிர்ஷ்டம்தான் உங்களுக்கு அந்த வேலையைச் செய்து கொடுக்கும் என்று முன்பு சொன்னீர்களே" என்ருள் காயத்ரி.

"இதோ பார், காயத்ரி. முட்டாள்தனமான காரியத்தையும் செய்துவிட்டு, இடக்காகப் பேசி என் கோபத்தைக் கிளருதே!" என்று உறுமினுன் அவன்.

அவளால் சும்மா இருக்க முடியவில்லை. "அப்படி என்ன பெரிய முட்டாள்தனமான காரியத்தைச் செய்துவிட்டேன்? நீங்கள்கூட ஜாடிகள் அழகாக இருந்ததாகச் சொன்னீர்களே. அப்போது உங்களுக்கு அது முட்டாள்தனமாகப் படவில்லையா?" என்ருள்.

அவ்வளவுதான்! கிருஷ்ணமூர்த்தி பைத்தியம் பிடித்தவனைப்போல் எழுந்து சமையல் அறைக்கு ஓடினுன். மறுகணம் இரண்டு மூன்று ஜாடிகள் கீழே விழுந்து உடையும் சத்தம் கேட்டது. காயத்ரி சென்று பார்த்த போது, சமையலறை முழுவதும் கண்ணுடித் துண்டுகள் சிதறிக் கிடந்தன. நல்லவேளை! காலியாக வைக்கப்பட்டிருந்த ஜாடிகளை மட்டுமே கீழே தள்ளி உடைத்திருந்தான்!

அவளுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. அழுகையே வந்துவிடும் போலிருந்தது. விம்மும் குரலில், "இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு முன் கோபம் கூடாது. ஜாடிகளை உடைத்துவிட்டதால் உங்கள் கோட்டு கிடைத்தது போலாகுமா?" என்று கேட்டாள்.

அவன் பதில் சொல்லவில்லை. அவளை விழித்துப் பார்த்துவிட்டு மறுபடியும் முன் அறைக்குப் போய்விட்டான். அவன் கோபம் மட்டும் அடங்கினதாகத் தெரியவில்லை. தன் கோட்டுடன் தன் அதிர்ஷ்டமும் போய்விட்டதாகவே அவன் நம்பினுன்.

அன்றிரவு அவன் சாப்பிடவும் மறுத்து விட்டான். காயத்ரி இரண்டு மூன்று தரம் கூப்பிட்டுப் பார்த்தாள். அதற்குமேல் வற்புறுத்தவும் அவளுக்குப் பயமாக இருந்தது. கோபத்தில் இசைகேடாக வேறு ஏதாவது செய்துவிட்டால் அவள் என்ன செய்ய முடியும்? ஆகவே, அவளும் சாப்பிடாமல் எல்லாவற்றையும் மூடி வைத்துவிட்டுப் படுத்துக் கொண்டாள்.



மறுநாள் காலை எழுந்தபோது கிருஷ்ண மூர்த்தியின் கோபம் அடங்கி யிருந்தும், கோட்டைப் பற்றிய கவலைமட்டும் நீங்க வில்லை. அது இல்லாமல் 'தேர்வுப் பரீட்சை'க் குப் போவது எப்படி என்ற கவலைதான். காயத்ரி எவ்வளவோ முயன்றும் அவனிடம் அவன் முகம் கொடுத்துப் பேசவேயில்லை.

இரண்டு மாதங்களுக்கு முன்புதான் புதுக் குடித்தனம் தொடங்கி யிருந்த அவர்க ளிடையே குதூகலமும், கொம்மாளமும் மண்டிக் கிடப்பதற்குப் பதில், பயங்கர அமைதி வீட்டில் நிலவியது. மௌனமாகவே எல்லாக் காரியங்களும் நடந்தன.

கடைசியில் அவன் கோட்டு எதுவும் போட் டுக் கொள்ளாமலேயே வேலைக்குக் கிளம்பி யதைக் கண்ட காயத்ரியால் சும்மா யிருக்க முடியவில்லை.

''உங்கள் கல்யாணக் கோட்டைப் போட் டுக் கொண்டு போகக் கூடாதா? பழைய கோட்டு போய்விட்டதற்காக, வேறு எந்தக் கோட்டையும் போட்டுக் கொள்ளக் கூடாதா?'' என்று கேட்டாள்.

''புதுக் கோட்டு போட்டுக் கொண்டு போவதால் போன அதிர்ஷ்டம் திரும்பி விடுமா, என்ன?'' என்று கூறிவிட்டுக் கிளம்பி விட்டான்.



''ஹூம்! அவர்கள் வேலை கொடுத்தால் கூட இவர் வேண்டாமென்று சொல்லிவிடு வார் போலிருக்கிறதே, பழைய கோட்டு காரணமாக'' என்றெண்ணினாள் அவள்.

அவன் கவலைப்பட்டதற்கிணங்க அன்று தேர்வுப் பரீட்சை நடத்தவேண்டிய டைரெக் டர் ஜாக்ஸன் காரியாலயத்துக்கே வரவில்லை. எனவே, பரீட்சை தள்ளி வைக்கப்பட்டது.

அடுத்த இரண்டு நாட்களும்கூட ஜாக்ஸன் வரவில்லை. அந்தரங்கக் காரியதரிசி பதவி பற்றிய நம்பிக்கை கிருஷ்ணமூர்த்தியிடம் இருந்து அடியோடு போய்விட்டது. 'எல்லாம் அந்தப் பழைய கோட்டு போனதன் விளைவு' என்று திடமாக நம்பினான்.

அந்த மூன்று நாட்களும் அவர்கள் வீடு களையிழந்து காணப்பட்டது. தம்பதிகளுக் குள் அதிகப் பேச்சு வார்த்தையே இல்லை. காயத்ரி ஒரிருமுறை வேலையைப் பற்றி அவனிடம் கேட்டுப் பார்த்தாள். அவன் பிடி கொடுத்துப் பேசினால்தானே! அந்தப் பதவி அவனுக்குக் கிடைக்கவே யில்லையா அல்லது தேர்வுப் பரீட்சையின் முடிவுதான் அறிவிக்கப்படவில்லையா என்று அவளால் ஊகிக்க முடியவில்லை. தன்னால் தன் கணவ னுக்கு வர விருந்த அதிர்ஷ்டம் வராமற் போய்விட்டதோ என்று கவலை கொண்டாள்.

* * *

நாலாவது நாள் கிருஷ்ணமூர்த்தி காரி யாலயத்துக்குள் நுழைந்ததும் அக்கௌண் டண்ட் ஆனந்தரங்கம் அவன் கைகளைப் பிடித்துக் குலுக்கு குலுக்கு என்று குலுக்கி, ''என்னுடைய மனமார்ந்த வாழ்த்துக்கள்!'' என்றார்.

கிருஷ்ணமூர்த்திக்கு விஷயம் புரிய வில்லை. ''எதற்கு வாழ்த்துக்கள்?'' என்று கேட்டான்.

''எதற்கா?.... போய் நோட்டீஸ் போர்டைப் பாரும். பார்த்து விட்டு நேரே ஜாக்ஸனின் அறைக்குப் போய், இன்றிலிருந்து புது வேலையை ஒப்புக்கொள் ளும்'' என்றார்.

''அப்படியானால் டைரக்டர்வந்தாயிற்று? தேர்வுப் பரீட்சைஎன்ன வாயிற்று?'' என்று ஆவலோடு கேட்டான்.

''நீர் ஒரு பைத்தியம். நமது டைரக்டரின் போக்கு உமக்குத் தெரி யாதா! 'முதலில் தேர்வுப் பரீட்சை வைக்க வேண்டுமென்று ஒற்றைக் காலில் நின்றான்! இன்று காலை வந்ததுமே என்னைக் கூப்பிட்டு, 'பரீட்சை வேண்டாம். மூன்று பேரில் சீனிய ராக இருப்பவரை நியமித்து, ஒரு அறிக்கை தயார் செய்' என்றான். நான் அறிக்கையைக் கொண்டு போனதும், 'மூர்த்தி திறமைசாலி யாயிற்றே. சீனியராகவும் இருப்பது நல்ல தாயிற்று' என்று சொல்லிக் கொண்டே,

# தெரியுமா உங்களுக்கு?

அணுகுண்டு, கிருமிகள் குண்டு இவற்றைப்போல் விஷகுண்டும் கொடியது என்ற இரகசியத்தைச் சில ஆண்டுகளுக்கு முன் டாக்டர் ஜெரால்டு வெண்டெட் என்ற ரசாயன நிபுணர் வெளியிட்டார். அதைக் கேட்டு உலக மக்கள் நடுக்கிட்டுப் போனார்கள். ஆனால், அதன் சம்பந்தமான விவரங்கள் பலருக்குத் தெரியாது. அதாவது அமெரிக்கா ரசாயனப் போர் ஆராய்ச்சி இலாக்காவைச் சேர்ந்த நிபுணர்கள் லட்சக்கணக்கான தொகை செலவழித்து ஆராய்ச்சி செய்தபின், சுத்த ஜலம் போல் தோன்றும் ஒரு விதமான கொடிய விஷத்தை உற்பத்தி செய்தார்கள். அந்த விஷத்தில் ஒரு அவுன்ஸைக் கொண்டு அமெரிக்காவிலும் கானடாவிலும் உள்ள சகலரையும் கொன்று விடலாம்! அந்த விஷம் நாகப்பாம்பின் வாயில் உள்ள விஷத்தைப் போல் எத்தனை எத்தனையோ மடங்கு அதிககொடியது. உலகத்திலே அதைக் காட்டிலும் கொடிய விஷம் வேறு எதுவுமே இல்லை என்ற உண்மையையும் அவர்கள் பெருமையுடன் வெளியிட்டார்கள். யுத்த சமயத்தில் அத்தகைய கொடிய விஷம் பகைவர்களின் கையில் சிக்கி விட்டால் என்ன ஆகும்? தவிர, பகைவர்கள் அந்த விஷத்தை உற்பத்தி செய்யும் முறைகளைக் கண்டு பிடித்து விடலாம் அல்லவா? எனவே அந்தக் கொடிய விஷத்துக்கு மாற்று மருந்து ஏதாவது உண்டா என்ற ஆராய்ச்சியில் நிபுணர்கள் ஈடுபட்டார்கள். அணுகுண்டு, கிருமிகள் குண்டுகளிலிருந்து மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வழியில்லை. ஆனால் மேற்படி விஷகுண்டிலிருந்து தப்பித்துக் கொள்ளும் எளிதான வழியை நிபுணர்கள் கண்டுபிடித்து விட்டனர். அந்த விஷத்தை மக்கள் உட்கொண்டாலன்றி அவர்களுக்கு ஆபத்து ஏற்பட இடமில்லை. மாபெரும் நகரங்களில் மக்கள் அருந்தும் ஜலம், தண்ணீர்த் தேக்கத்திலிருந்தே வருகிறது. அந்தத் தேக்கத்தில் மேற்படி விஷத்தைக் கலந்து விட்டால், எல்லோருக்கும் ஆபத்து ஏற்பட்டுவிடும் அல்லவா? ஆனால், அந்த விஷம் கலந்த தண்ணீரைக் கொதிக்கக் காய்ச்சி விட்டால் விஷம் முறிந்துவிடுகிறது என்ற எளிதான வழியைக் கண்டு பிடித்துள்ளனர். எனவே, ரிசர்வாயர் அதாவது தண்ணீர்த் தேக்கத்திலிருந்து வரும் தண்ணீரை நம்பி வாழும் பெரிய பட்டணங்களில் உள்ள மக்கள் தண்ணீரைக் காய்ச்சிச் சாப்பிட வேண்டியது எவ்வளவு அவசியம் என்பது நிபுணர்களின் ஆராய்ச்சியிலிருந்து வெளியாகியிருக்கிறது. உஷ்ணத்துக்குக் கிருமிகளை மாத்திரம் அல்ல, கொடிய விஷத்தைக்கூட முறித்துவிடும் அபூர்வ சக்தி இருப்பது வெளியாகியிருக்கிறது.



உற்சாகத்துடன் கையெழுத்துப் போட்டான்'' என்று முடித்தார்.

அன்று மாலை வீடு திரும்பிய கிருஷ்ண மூர்த்தி உற்சாகமாக, ''காயத்ரி! காயத்ரி!'' என்று கூப்பிட்டான். சமையலறையிலிருந்து ஓடிவந்த காயத்ரி அவன் முகத்தைப் பார்த்து விஷயத்தை ஒருவாறு புரிந்து கொண்டாள்.

அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு, ''காயத்ரி! நான் நாலு நாட்களாக முட்டாள்தனமாக நடந்து கொண்டு விட்டேன். என்னை மன்னித்து விடு'' என்றான்.

''முதலில் கைகளை விடுங்கள், யாராவது பார்க்கப் போகிறார்கள். கதவு திறந்திருக்கிறது'' என்று கைகளை விடுவித்துக் கொண்டாள். பிறகு, ''நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த வேலை கிடைத்து விட்டதல்லவா?'' என்றாள் சிரித்தபடி.

''தேர்வுப் பரீட்சை இல்லாமலேயே எனக்குக் கொடுத்துவிட்டார்கள்!'' என்றான்.

''உங்கள் பழைய கோட்டு இல்லாமலே வேலை கிடைத்து விட்டது, பார்த்தீர்களா?'' என்றாள் குறும்பாக.

'' என்ன? என் திறமையில் உனக்கு நம்பிக்கை இல்லையா?'' என்று கேட்டான்.

''நானா அப்படிச் சொல்வேன்? உங்களுக்குத்தான் உங்கள் திறமையில் நம்பிக்கை இல்லாமல் இருந்தது. அதிர்ஷ்டத்திற்குக் கோட்டையும் என்னையும் நம்பியிருந்தீர்கள்?'' என்றாள். அதைக் கேட்டு அவன் சிரித்தான்.

''நான் சொல்ல வந்தது வேறு. திறமை மட்டும் இருந்தால் போதாது. திறமையோடு அதிர்ஷ்டமும் இருக்கவேதான் உங்களுக்கு இந்த வேலை கிடைத்திருக்கிறது'' என்றாள்.

''சரியாகச் சொல்லி விட்டாய், காயத்ரி! ...அது சரி! நான் உன் கண்ணாடி ஜாடிகளை உடைத்து விட்டேனல்லவா? பணம் தருகிறேன். புதிதாக இன்னும் சில ஜாடிகள் வாங்கிக் கொண்டு விடு!'' என்றான்.

''பணம் கொஞ்சம் சேர்த்துக் கொடுங்கள். கண்ணாடி ஜாடிகளுக்குப் பதில் புதுமித்தளை பிப்பாக்களாக வாங்கிக் கொள்ளுகிறேன். உங்களுக்குக் கோபம் வந்தாலும் அவை கவைமாக உடையாமலிருக்கும்'' என்றாள் சிரித்தவாறு. அவனும் அவளுடைய சிரிப்பில் கலந்து கொண்டான்.

# சக்தியை

## நீங்கள் நம்பியிருக்கலாம்



தொடர்ந்து முன்னணியிலிருந்து
வரும் டிசைன், அபிவிருத்தி செய்யப் பெற்ற
தயாரிப்பு முறைகள், மற்றும் கடுமையான
பரிசீலனை-இவைகள் பிரதியொரு பிரஷ் கிர்லோஸ்கர்
எலக்டிரிக் மோட்டார்களுக்கும் நல்ல உறுதி
மற்றும் நம்பகமானது என்பதை ஊர்ஜிதம் செய்வ
துடன் நீடித்து உழைக்கும் சக்தி மற்றும்
நீண்டகால தொந்திரவற்ற சேவைக்கும்
உத்திரவாதம் அளிக்கிறது.




**கிர்லோஸ்கர் எலக்டிரிக் கோ., லிட்., பெங்களூர் - 3**




**ஸோல் ஏஜண்டுகள்: பாரி & கோ. லிட்., மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-புதுடில்லி**


'ஹா! லைப்பாய் சோப்
உபயோகித்துக் குளிக்க
வேண்டிய நேரம் இதுதான்!'
– அது சரீரத்தை
சுத்தமாக்குவதுடன்
புத்துணர்ச்சியைத்
தருகிறது!
LIFEBUOY
SOAP
இந்தியாவில் தயாரித்தது
L. 259-50 TM




"யார் தான் கொடுப்பார்கள்? ரோஜா மாலை-புஷ்பச் செண்டுகளுடன் எதிர் கொண்டு தக்க மரியாதையுடன் அழைத்து வரவேற்புப் பத்திரம் படித்து, வெள்ளிப் பேழையில் இட்டுக் கொடுத்து 'நோயே! வருக, வருக!' என்று உபசரிப்பாருமுண்டா? 'நோய்க்கு இடங் கொடேல்' என்ற எச்சரிக்கைக்கு அவசியமே இல்லை. இவ்விதவினை எச்சரிக்கைகளால்..."

"ஐயா! பொறுங்கள். 'நோயே! வருக!' என்று ஒருவரும் வரவேற்க மாட்டார்கள். ஆனால்நம்மையுமறியாமல் நோய் நம்மில் இடம் பெறலாம். அதற்கு இடங்கொடுக்காமல் ஜாக்கிரதையாயிருப்பது அவசியம்.

## 19. நோய்க்கிடங் கொடேல்

"எலி, பெருச்சாளி முதலியவை நம்முடன் வீட்டில் குடித்தனஞ் செய்யச் சேருகின்றன. அவற்றை வரவொட்டாமலிருக்க நாம் முயற்சிகள் எடுத்துக் கொள்ளக் கூடும். வந்து சேர்ந்து விட்டாலோ...? 'ரெண்டு கண்ட்ரோலர்,' 'அகாமடேஷன் கண்ட்ரோலர்,' 'எவிக்ஷன் ஸூட்' ஒன்றும் பயன் படாது. ஆகவே இவை வீட்டில் குடி புகாதபடி பார்த்துக் கொள்வது அவசியம். நோயும் வந்துறாத வகையில் நாம் சில விஷயங்களில் சிரத்தை காண்பித்தல் அவசியம். இதுதான் தலைப்பில் கண்ட ஔவைப் பாட்டியின் பொன்மொழியின் பொருள்.

"இவ்விஷயமாக ஆகாரம், குடி நீர், ஒய்வு, உறக்கம், ஒழுக்கம், பருவ காலங்களுக் கேற்ப இவற்றை மாற்றிக் கொள்ளல் என்றெல்லாம் எழுதியாயிற்றே. இன்னும் என்ன பாக்கி இருக்கிறது?"

ஆம், மேற்கண்ட தலைப்புகளில் எழுதிய விஷயங்கள் யாவுமே நோய்க்கிடங் கொடாமை பற்றியவைதான். இவற்றைத் தவிர வேறு ஒன்றிரண்டு விஷயங்களுமுண்டு. அவற்றையும் அறிந்து செயலளவிற் கொண்டு வந்தால் தான் நோய்க்கிடங் கொடாமையில் நமது முயற்சி பூரணமாகும். இல்லாவிட்டால் அரைகுறைதான்.

"தேவலையே! ஔவையின் ஆத்திச் சூடிக்குப் புதியபுதிய அர்த்தங்களல்லவா இருப்பதாகப் புரிகிறது! சரி! இப்போது சொல்லும் 'வேறு ஒன்றிரண்டு விஷயங்கள்' என்ன?"

நமது சரீரத்தின் இயக்கத்தில் நம்மையுமறியாமல் ஏற்படும் 14 'வேகங்கள்' உண்டு. இவற்றை வேணுமானால் இயற்கையாய் ஏற்படும் சில 'உந்தல்கள்' எனலாம். இவற்றை ஒருகாலும் தடை செய்யக் கூடாது; அவ்விதமே, இவற்றை வலுக்கட்டாயமாக வெளிப்படுத்தவுங் கூடாது.

இவ்விதமே நமது மனத்திலெழும் சில 'வேகங்க'ளுமுண்டு. இகத்திலும் பரத்திலும் நன்மையை விரும்புவோர் இம்மனோ வேகங்களைக் கட்டாயமாகக் கட்டுப் படுத்தவும் வேண்டும்.

வடமொழி, தென்மொழிகளில் வகுத்த நம் நாட்டு வைத்திய நூல்களில் இவ் விஷயத்தில் கருத்து வேற்றுமையே கிடையாது. இனி, சரீர சம்பந்தமான இவ் வேகங்கள் யாவை? அவற்றைத் தடை செய்வதால் என்னென்ன தீமைகள் விளையும்? என்பதைக் கவனிப்போம்.

"பதினன்கு வேகப்பேர்கள்
பகர்ந்திட அவற்றைக்கேளாய்!
விந்தினும் வாதந்தும்மல்
மேவுநீர் மலங்கொட்டாவி

கந்தித்திடு பசிநீர் வேட்கை
காசமோ டிளைப்பு நித்ரை
மந்தித்திடு வாந்தி கண்ணீர்
வளர்சுக்லஞ் சுவாச மாமே''

என்று 'பதினெண் சித்தர் நாடி நூல்' தெரிவிக்கும் 14 வேகங்கள். ஒவ்வொரு வேகத்தின் இயல்பு, அதைத் தடுப்பதால் உண்டாகும் நோய்கள் ஆகியவற்றைப் பல பாடல்களில் விளக்கியுள்ளார் நந்தமிழ்ச் சித்தர்கள். அப்பாக்களை யெல்லாம் எழுதி ஒவ்வொன்றுக்கும் இதுவரையில் எழுதப்பட்ட உரையாசிரியரின் பதவுரை, பொழிப்புரை, கருத்துரைகளை எழுதிப் பிறகு எனது அணிந்துரையையும் எழுதினால் விஷயம் மிகவும் நீண்டு விடும். இது வைத்தியப் பயிற்சி பெறும் மாணவருக்கான பாடபுத்தக மல்லவாதலின் மேற்சொன்ன விதம் எழுதவேண்டிய அவசியமில்லை. ஆகவே, இங்கு நாம் அறிய வேண்டிய விஷயத்தை மட்டும் சுருக்கமாகவும் விளக்கக் குறைவின்றியும் எழுதி விடுகிறேன்.

**வேகங்களாவன:** 1. அபானவாயு வென்னும் கீழ்வாய் வளி, 2. தும்மல், 3. சிறுநீர், 4. மலம், 5. கொட்டாவி, 6. பசி, 7. நீர்வேட்கை, 8. இருமல், 9. இளைப்பு - ஓடிவந்ததாலோ, கடும் வேலை செய்ததாலோ ஏற்படும் ''சிரம சுவாஸம்'' என்னும் பெருமூச்சு, 10. தூக்கம், 11. வாந்தி, 12. கண்ணீர், 13. சுக்கிலம், 14. சுவாசம்—மேல் நோக்கி வெளியாகும் வளி அல்லது ஏப்பம்.

குறிப்பு: 9. 'இளைப்பு' என்பதை ஆயாசம் என்றும் 14. சுவாசம் என்பதை மூச்சு அல்லது உயிர்ப்பு என்றும் உரையாசிரியர்கள் தெரிவித்துள்ளனர்.

பெருமூச்சு - விம்மல் போன்ற சிரமசுவாஸம், ஏப்பம் என்ற இரண்டு வேகங்களை வடமொழியில் வருத்த வைத்திய நூல்கள் தெரிவிக்கின்றன. மற்றுள்ள 12, வேகங்களும் தமிழ் நூல்களில் சொன்னது போலவே நேருக்கு நேரமைந்துள்ளன. பெருமூச்சு, ஏப்பம் இரண்டும் விடுபடுவானேன் என்று யோசிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஆனால் 9, இளைப்பு என்னும் வேகத்தையும் 14, சுவாசம், மூச்சு - உயிர்ப்பு என்னும் வேகத்தையும் பலாத்காரமாகத் தடை செய்வதால் ஏற்படும் நோய்களின் பட்டியலைக் கூர்ந்து பார்த்தால் வடமொழி நூல்களில் சொன்ன சிரமசுவாஸம், உத்காரம் என்னும் ஏப்பம் இவற்றைத் தடை செய்வதால் உண்டாகும் ரோகங்களுக்கு முறையே ஒத்திருக்கின்றன. ஆகவே, 9, இளைப்பு என்பதைப் பெருமூச்சென்றும் 14. சுவாசம் என்பதை ஏப்பம் என்றும் தெளிந்து இரு மூகாந்தரங்களால் கிடைக்கும் அறிவைச் சமன்வயம் செய்திடல் நல்லறிவாகும்.

1. அபான வாயுவென்னும் கீழ்வாய் வளியை அடக்கி நிறுத்துவதோ அன்றித் தடுத்துத் தடுத்துச் சிறிது சிறிதாக வெளிவிடுவதோ நோய்க்கு இடங் கொடுத்தலாகும். இதனால், மார்பு நோய், குன்மம், உதாவர்த்தம் என்னும் குடல்வாதம், உடம்பு முழுவதும் ஏற்படும் குத்தல் குடைச்சல் வலி, மலசலத் தடை, அதை யொட்டிப் பசிக்குறைவு ஆகிய நோய்கள் ஏற்படும்.

2. தும்மலை யடக்குவதால் தலை முழுவதும் ஏற்படும் ஒரு வலி, இந்திரியங்கள் தெறித்து விழுந்துவிடுமோ என்ற தோற்றம், முகம் கழுத்துப் புறங்களில் இசிவு, இடுப்பில் பிடிப்பு ஆகிய நோய்கள் ஏற்படும்.

3. சிறு நீரென்னும் மூத்திரத்தை அடக்கினால், நீர் அடைப்பு, நீர் இறங்கும் புழை புண்ணாதல், கீல்களில் நோவு, சிறுநீர்த்தாரை புண்ணாதல் - கீழ்வாய் வளி வயிற்றில் சேர்தல் முதலிய ரோகங்கள் உண்டாகும்.

4. மலத்தைத் தடை செய்வதால், ஆடுசதை என்னும் பாகத்தில் முறுக்கு வலியும், மூக்கு கண்களில் நீர்முட்டிச் சொறிதல், கொடுமையான தலைவலி,

## பரதநாட்டிய அரங்கேற்றம்



சமீபத்தில் நீதிபதி ஸ்ரீ ராம பிரஸாத் முகர்ஜி அவர்களின் தலைமையில் கல்கத்தா ராக்ஸி தியேட்டரில் தென்னிந்திய பிரபல தோட்டம் உரிமையாளர் ஸ்ரீ வி. வி. ராமய்யர் அவர்கள் புதல்வி பேபி ராஜேஸ்வரியின் பரதநாட்டியம் அரங்கேற்றப் பட்டது. பர்த்வான் மகாராணி அவர்களும், கல்கத்தா பிரமுகர்களும், பல தேசஸ்தானிகர்களும் விஜயம் செய்து சிறப்பித்தார்கள். பாம்பாட்டி நடனமும், தில்லானாவும் எல்லோராலும் வெகுவாகப் பாராட்டப்பட்டன. நாட்டிய ஆசிரியர் ஸ்ரீ டி. எம். மருதப்ப பிள்ளைக்கு ஸ்ரீ ராமய்யர் தக்க சன்மானம் அளித்துக் கௌரவித்தார்.

பொதுவாக வாயுவின் இயக்கங் கெட்டு ஹிருதயத்தில் நோவும், மலம் மேல் நோக்கி வாயால் வெளிப்படுவதும், கீழ் வாய் வழியை அடக்குவதால் பலவித ரோகங்களும் உண்டாகும்.

'மலசலங் கட்டி விடு'மென்று திருமூலரும் 'கண்ணிரண்டும் நீர் சொரியுங் காணுந் தலை நோயு'மென்று வியாசர் 80 என்ற நூலிலும் வலியுறுத்திச் சொல்லி யிருப்பது விசேஷம்.

5. கொட்டாவியை அடக்கினல் முகம் வதங்கி இளைப்புக்குறி தோன்றி விடும். அளவோடு உண்டாலும் செரியாமை, நீர் நோய் மயக்கம் தலை சுற்றல் வயிற்றுவலி ஆகியவை வரும்.

6-7. பசி வேட்கைகளை அடக்குவதால் உடல் மெலிந்து அங்கங்கள் வாடி இந்திரியங்கள் தத்தம் செயலாற்றுந் திறமையற்று, சூலை, தலை சுற்றல் மயக்கம், சந்திகளில் வலி பலவிதமான வாத ரோகங்கள் - நாவறட்சி ஆகியவை உண்டாகும். க்ஷயரோகமும் உண்டாகலாம்.

8. இருமல்: இருமலை அடக்குவதால் அவ்விருமலே அதிக மாகும். மேலும் அவ்விருமல் முற்றி மீளாத சுவாசகாசம் என்னும் ஆஸ்த்மா முதலான கொடிய வியாதிகளுண்டாக ஹேதுவாகும்.

9. பெருமூச்சு: இதை அடக்கினல் குல்மம், ஹிருத்ரோகம் மூர்ச்சை, முதலானவை யுண்டாகும்.

10. தூக்கம்: இதை அடக்குவது இன்று ஸர்வ ஸாதாரணம். 'டீ'யைக் குடித்தாவது தூக்கத்தை விரட்டி 'ஸினிமா' பார்த்தாக வேணுமே! இவ்விதம் தூக்கத்தைத் துறப்பதால் மயக்கம், தலை கனம், கண்சிவந்து கனத்து எரிச்சலுண்டாதல், காது செவிடுபடல், அரைப் பேச்சு, உடல்வலி, கொட்டாவி, அமிதமான சோம்பேறித்தனம் முதலியவை யுண்டாம்.

11. வாந்தி: வாந்தியைத் தடை செய்து நிறுத்துவதால் தடிப்புக்குஷ்டம் [அர்டிகேரியாவைப் போன்றது] நமைச்சல், உடம்பில் கொப்புளங்கள், பாண்டு, கண் நோய்கள், ஜுரம், இருமல், ஈளை முதலிய பல ரோகங்கள் உண்டாகும்.

12. விழிநீர்: இதை அடக்குவதால் மூக்கடைப்பு - கண் நோய், தலையில் கரப்பான், தலைகனம், கழுத்து திரும்பாமல் ஒருவகைப் பிடிப்பு, அருசி, தலை சுற்றல் குன்மம் ஆகியவை யுண்டாகும்.

13. சுக்கிலம்: விந்துவை யடக்கினல் சுரம், நீர்க்கட்டு, முட்டிகளில் வலி, மார்படைப்பு, சுக்லாச்மரீ என்னும் ரோகம் ஆகியவை யுண்டாகும்.

14. ஏப்பம்: இதை அடக்கினல் அருசி, உடல் நடுக்கம், மலச்சிக்கல், ஹிருதயத்தில் வலி, வயிற்றுப்புசம், இருமல், ஈளை முதலியவை யுண்டாகும்.

ஆகவே எக்காரணத்தாலும் உடலியக்கத்தின் காரணமாக இயற்கையாய் ஏற்படும் இவ்வேகங்களை - தடை செய்யக் கூடாது. பலாத்காரமாக அவற்றை வெளியேற்றவுங் கூடாது. அவ்வாறே, லோபம், ஈர்ஷை, த்வேஷம், மாத்ஸர்யம், ராகம் முதலான மனோ வேகங்களை விடாமல் அடக்கி ஜிதேந்திரியனாய் இருப்பதும் அவசியம். அளவுக்கு மீறிய இவ்வேகங்களால் ரத்த அமுக்கம் அதிகரித்தல் அல்லது குறைதல் என்னும் நிலை ஏற்படலாம். எனவே, சரீர வேகங்களைத் தடை செய்யாமல் மனோவேகங்களைத் தெறிகெட்டுப் போக விடாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.



# மணாளனே மங்கையின் பாக்கியம்

ஆத்திரத்தினால் ஒருவன் இன்னொருவனைக் கொன்று விட்டால் அதைக் கொலை என்கிறோம். ஆனால் ஒரு யுத்தத்தில் பலர் மடிந்தால் அதை யாரும் கொலை என்று சொல்லுவதில்லை.

ஒரு படத்தில் ஏதோ ஒரு பகுதியையோ, காட்சியையோ, சம்பவத்தையோ இன்னொரு படத்திலிருந்து தஸ்கரம் செய்திருந்தால், இது காப்பி அடிக்கப்பட்டிருக்கிறது என்று கூறலாம். படத்தின் அடிப்படைக் கருத்து, காட்சிகள், நிகழ்ச்சிகள் யாவுமே தஸ்கரம் செய்யப்பட்டிருந்தால் அதை என்னவென்று சொல்லுவது !

ஒரு பெரிய பிரபுவின் வீட்டில் ஏராளமாக நகைகளைக் கொள்ளையடித்த கள்ளர் கூட்டம் அந் நகைகளைப் பரவலாகப் பல ஊர்களில், பல மார்வாடிக் கடைகளில் விற்றுப் பணமாக்க முயலுவது போல், இப் படத்தின் கதை அம்சம் பல படங்களில், பல இடங்களிலிருந்து தஸ்கரம் செய்யப்பட்டிருக்கிறது.

முன்பெல்லாம், அதாவது சிறுகதை மலர் தமிழ் வசன இலக்கியத் தருவில் மலர ஆரம்பித்த காலத்தில், ஒரு கதையின் தலைப்பு "விதி சிரித்தது" என்று இருந்தால், அது ஒரு கதாபாத்திரத்தின் வாயிலாகக் கதையின் முடிவில் இடம் பெற்றாக வேண்டும். அதற்கான சூழ்நிலையைக் கதாசிரியர் அவசியம் சிருஷ்டிக்கத் தவற மாட்டார். அந்தப் பழக்கம் இப்பொழுதும் அடியோடு மறைந்து ஓடிவிடவில்லை என்கிற விஷயம் நம் தமிழ்ப் படங்களைப் பார்த்தால் எளிதில் தெரிந்து கொள்ளலாம். அந்தப் பழக்கம்தான் தமிழ்ப் பட உலகில் புகுந்து கொண்டு விட்டதே!

இந்தப் படத்தை நான் பார்த்துக் கொண்டிருந்த போது, என் நண்பர், ஒரு கட்டத்தில், "மிஸ்டர் காந்தன் ! படம் விரைவில் முடிந்து விடும் போலிருக்கிறதே !" என்று பரம திருப்தியோடு கேட்டார்.

"இல்லை, நேரமாகும் ஸார் ! இன்னும் பார்க்க வேண்டிய முக்கியமான காட்சியிருக்கிறது. அது விரைவில் வரும் என்பதற்கான அறிகுறியே இன்னும் காணப்படவில்லை" என்றேன் நான் சோகத்தோடு.

"இன்றுதானே இப் படம் வெளியாகியிருக்கிறது ? அதற்குள் உங்களுக்குக் கதை எப்படித் தெரிந்தது ?" என்று நண்பர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை, ஸார் ! ஒரு தமிழ்ப் படத்தின் தலைப்பு அந்தப் படம் முடிவதற்குள் ஒரு பாத்திரத்தின் மூலமாக வரவில்லையென்றால் படம் முடிய

Strictly private & confidential.
For private circulation only.

# A PRIVILEGED OFFER FOR YOU

## Shares in India's fastest-growing business!

# SHRIRAM TRANSPORT FINANCE COMPANY LIMITED

Regd. Office:
123, Angappa Naicken Street,
Madras 600 001

Adm. Office:
145, Linghi Chetty Street,
Madras 600 001

## OFFERS YOU

**Firm Allotment of Promoters' Quota of Equity Shares on first-come-first-served basis !**

Shortly coming out with a Public Issue of 2,50,000 Equity Shares of Rs. 10 each at par, the Company has a limited Quota of Shares reserved for allotment to its promoters and friends.

**You being a valued friend of the Shriram Group, we make you this privileged offer: Shares of STF on a firm allotment basis.**

But before deciding to avail of this friendly offer, you may have some questions.

**Here are the answers...**



**தாந்தன்**

வில்லே என்று உறுதியாகத் தீர்மானம் செய்து கொள்ளலாம்'' என்றேன் நான்.

இந்தப் படத்தின் கதைச் சுருக்கத்தைக் கொஞ்சம் கொடுத்தால் விமரிசனம் படிப்ப தற்குச் சௌகரியமா யிருக்கும் என்று எண்ணினேன். ஆனல் எந்தக் கொஞ்சத்தைக் கொடுப்பது என்று குழப்பம் ஏற்பட்டது.

இந்தப் படத்தின் பொருளடக்கத்தைக் கொடுத்து விட்டால், கதையைப் புரிந்து கொள்வதற்குப் பெரிதும் உத வியா யிருக்கும். ''ரம்பையின் காதல்,'' ''கணவனே கண் கண்ட தெய்வம்,'' ''ஜக தலப் பிரதாபன்,'' ''மதன காமராஜன்''———— ஆகிய படங்களின் தொகுப்புத்தான் அஞ்சலி பிக்சர்ஸாரின் ''மணா ளனேமங்கையின்பாக்கியம்''.

கதாநாயகி அஞ்சலிதேவி, கந்தர்வலோக மங்கை; தேவேந்திர சபையின் ஆடலழகி. மணாளன், சோழ ராஜகுமாரன்—ஜெமினி கணேசன். இவர்கள் காதலித்துப் படும்பாடு, சாபத்தின் கேடு, இவைதான் கதையின் பாக்கியம் — நம் துர்ப்பாக்கியம்!

இந்தப் படத்தில், அஞ்சலிதேவி கந்தர்வ லோக, தேவேந்திர லோக நடனமெல்லாம் அலுப்பில்லாமல் ஆடி யிருக்கிறார். இ. வி. சரோஜா பார்வதியாகத் தோன்றி நடன மாடுகிறார். ராஜகலோசன நாட்டியமாடு கிறார். ஜெமினி கணேசனும் நடனம் ஆடி யிருக்கிறார். இதை யெல்லாம் பார்த்துப் பார்த்து நானும் என் நண்பரும் கொஞ்சம் தூங்கி ஆடினேம்.

ஆனல் படம் மிகவும் நிதானமாக, தூங்கு கிறவர்கள் விழித்துக் கொள்ளுகிற வரையில் காத்திருந்து குட்ஸ் வண்டி மாதிரி போகிறது.

ஆங்கிலப் படங்களை எப்போதுமே நாம் பாராட்டுகிறேம். ஆனல் ஆங்கிலப் படங்கள் பார்ப்பதில் உள்ள முக்கியமான சிரமத்தை நான் எடுத்துக் கூறினல், யாருமே ஒப்புக் கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன்.

ஆங்கிலப் படம் பார்க்கும் போது மிகவும் கவனமாகப் பார்க்க வேண்டும். நடிகர்களின் பேச்சு, முகபாவம், நடிப்பு, சூழ்நிலை யாவற்றையும் ஒருங்கே கவனிக்க வேண்டும். கொஞ்சம் நம் கவனம் பிசகிப் போனலும் பல சுவாரஸ்யமான விஷயங்கள் நழுவிப் போய் விடும். ஆனல் நம் தமிழ்ப் படங்களில் அத்தகைய சிரமம் எதுவும் இல்லை! ரோடு அரைக்கும் என்ஜினில் போகிறவன் கீழே இறங்கிக் குழாயில் தாக சாந்தி செய்து கொண்டு பிறகு போய் ஏறினல், அந்த என்ஜின் எத்தனை தூரம் போய் விடும்?

காட்சி ஜோடனைகளை இப்படத்தில் முக்கிய மாகப் பாராட்டவேண்டும். மிகவும் அற்புத மாகத் தயாரித்திருக்கிறார்கள். நினைத்ததைத் தரும் கமண்டலம், பகைவனைத் தாக்கும் தண்டம், பறக்கும் சக்திபெற்ற பாய்—இவை கள்தான் இந்தப் படத்தில் பாராட்டத்தக்க முறையில் நடித்திருக்கும் நடிகர்கள்!

''தண்டும் கமண்டலமும் சேர்ந்துஇருந்தால் தான் பயன்படும், இரண்டும் வெவ்வேறு இடங்களில் பிரிந்து விட்டால் பயன்பட மாட்டா'' என்று கூறி, குகையில் இருந்து சாப விமோசனம் பெற்ற சித்தர் அவைகளைப் பறக்கும் பாயுடன் ராஜகுமாரனிடம் கொடுக் கிறார். ஆனல் கயவர்களின் சூழ்ச்சியால் அவன் மேற்படி பொருள்களை இழந்து விடுகிறான். அவை மூன்றும் மூன்று நபர் களிடம் சிக்கித் தம் சக்தியைக் காண்பிக் கின்றன. திரைப்பட டைரக்டரின் ஞாபக மறதி சித்தரின் வாக்கை வென்று விடுகின்றது!

தண்டும் கமண்டலமும் தனித்தனி நபரிடம் சிக்கினல் சக்தியை இழந்துவிடும் என்ற சித்தர் வாக்கைக் காற்றில் பறக்க விட்டு விட்டதைச் சிறிய தவருகக் கூறமுடியாது.

டி. எஸ். துரைராஜ் மாயப் பாயில் வானில் பறந்து, குளத் தில் மிதந்து படம் முழு வதும் நிறைய இடம் பெற்றிருக்கிறார். பூதம் ஒன்று குகையில் தோன்றி, சிரித்து, பாடி,பேசி அமர்க்களம் செய்கிறது. சகிக்க முடியவில்லை. அது பாட்டுப் பாட ஆரம் பித்ததும் காது புளித்துப் போகிறது.

பாடல்கள்: விசேஷமாக ஒன்றும் சொல்லு வதற்கில்லை. வசனம்: சாதாரணம். நடிப்பு: பாத்திரங்கள் யாரும் அதைப் பற்றி விசேஷ மாகப் பொருட்படுத்தவில்லை. கதை அம்சம்: புராணம், இதிகாசம், மாயம், ஜாலம், மானி டன், கந்தர்வப் பெண், காதல், மோதல் இப்படி'மூர்' மார்க்கெட் பண்டங்கள் மாதிரி சகலமும் கொண்டதோர் சித்திரம்! பாராட் டுக்குரிய அம்சம்: கபம்.







# தளதளக்கும் ஈனோ வயிற்றுக் கோளாறுகளிலிருந்து எட்டே விநாடிகளில் நிவாரணமளிக்கிறது!

**அஜீர்ணம், நெஞ்செரிச்சல், அல்லது வாயுப் பொருமல் இவைகளில் எதையும் ஈனோ நிவர்த்திக்கிறது!**

ஒரு கிளாஸ் தளதளக்கும் ஈனோ ப்ரூட் ஸால்ட் சாப்பிட்டால் எட்டே விநாடிகளில் வயிற்றுக் கோளாறுகள் சீரா கின்றன. மிதமாக பேதி ஏற்பட விரும்பினால் வெறும் வயிற்றில் சிறிது பெரிய 'டோஸ்' ஈனோ அருந்தினால் போதும். எப்பொழுதும் உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் ஈனோ வைத்திருங்கள்.




ஈனோ
இந்த சீதோஷ்ண ஸ்திதிக்கு
விசேஷமாக ஏற்றது
(2 [illegible] கிடைக்கும்)

## ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'

அமித அமிலங்களை அடக்கும்
தளதளக்கும் பானம்

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள்
ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்
குரூப் லாபரேட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.

# மெயில் வண்டி

○★○

'டிங் டிங்' மணி அடிச்சாச்சு!
டிக்கட்டும் வாங்கியாச்சு!
எங்க ஊரு ஸ்டேஷனிலே
எக்ஸ்பிரசும் வந்தாச்சு!

பச்சை, சிவப்புக் கொடியெடுத்து
பகட்டுத் தலைப் பாகையுடன்
கச்சம் போட்ட வேட்டியோடு
கடுகி வரார் ஸ்டேஷன்மாஸ்டர்.

சுண்டல், வடை விற்பவரும்
சோடா, கலர் விற்பவரும்
பண்டங்களைத் தூக்கிக் கொண்டு
பரபரப்பாய் ஓடுகின்றார்.

காசிக்குப் புறப்பட்ட
காமுப்பாட்டி ஏறி விட்டாள்.
காசில்லாத ஓசிக்காரன்
கந்தன் கூட ஏறிவிட்டான்.

வெள்ளைக் கோட்டு போட்டு கார்டு
விசி லெடுத்து ஊதிட்டார்.
மெள்ள மெள்ள மூச்சுவிட்டு
மெயில் வண்டி கிளம்புதுபார்!

''அழுது கொண்டு நிற்கும் சின்ன
அம்பி! அழ வேண்டாம்!
பொழுது விடிந்து வரும் மெயிலில்
போய் வரலாம் நாமே!''

— ஸ்ரீரஞ்சனி

# மணப்புயல் சித்திரத் தொடர் கதை
















ஹேமா! இனி இந்தமாதிரி வைத்தியக்காரத் தனமாக நடந்து கொள்ளாதே!


ஏதோ ஆவேசத்தில் செய்துவிட்டேன்...! மன்னித்து விடுங்கள்.


ரமணி தன் பங்களாவில் ஆனந்தத்தில் குதிபோடுகிறான். அவனுடன கலாசாலையில் பயின்ற பராங்குசம் இந்த ஊருக்கே சப்இன்ஸ்பெக்டராகி வருகிறான்.


பேஷ்! நம் அருமை நண்பன் பராங்குசத் தைக் கைக்குள் போட்டுக்கொண்டு இந்த ஊரனியை ஒருகைப் பார்க்கிறேன்!
தொடரும்




உபாத்தியாயர் வகுப்புக்கு வருவதற்கு முன் வகுப்பிலுள்ள பெரிய கரும் பலகையில் கண்டபடியெல்லாம் கிறுக்கும் பழக்கம் மாணவர்களிடம் இருந்தது. 'போண்டா வாத்தியார் வேண்டாம்' 'காங்கிரசுக்கு வோட்டுப் போடுங்கள்!' என்றெல்லாம் கரும்பலகையில் மாணவர்கள் எழுதி விடுவார்கள்.

உபாத்தியாயர்களும் தலைமை ஆசிரியர் சிவராமகிருஷ்ணனும் எவ்வளவோ முயற்சி செய்தும் இந்த வழக்கத்தை மாற்ற முடியவில்லை.

மணி அடித்ததும் மாணவர்கள் எல்லோரும் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியே ஓடி வந்தார்கள். தெருவில் வேகமாகக் கார்கள் போய்க் கொண்டிருந்தன.



ராமு தெருவின் குறுக்கே ஓடிய போது ஒரு கார் 'கிரீச்' என்ற சத்தத்துடன் 'பிரேக்' போட்டு நின்றது.

'பையன்கள் தலைதெறிக்க ஓடுகிறார்களே? ஜாக்கிரதையாகப் போகக் கூடாதா?' என்று டிரைவர் முணுமுணுத்துக் கொண்டே போனான்.

தலைமை ஆசிரியர் சிவராமகிருஷ்ணன் இந்தக் காட்சியைப் பார்த்தார். அவருக்கு டிரைவரின் மீது கோபம் கோபமாக வந்தது. 'மடையன், குழந்தைகள் வரும் இடமாயிற்றே. ஜாக்கிரதையாகவும் மெள்ளவும் வரக்கூடாதா?' என்று எண்ணினார். இதற்கு ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டும் என்று யோசித்துப் பார்த்தார். ரொம்ப நேரம் மண்டையைக் குழப்பிக் கொண்ட பிறகு அவர் ஒரு முடிவுக்கு வந்தார்.

மறு நாள் காலையில் தெருவில் ஒரு பெரிய 'போர்டு' இருந்தது. 'பள்ளிக்கூடம் ஜாக்கிரதை! குழந்தைகளைக் கொன்று விடாதீர்கள்!' என்று கொட்டை எழுத்துக்களில் அந்த போர்டில் எழுதியிருந்தது. தலைமை ஆசிரியர் சிவராமகிருஷ்ணன் அந்த போர்டைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து போனார். அந்த போர்டில் எழுதியிருப்பதைப் படித்து விட்டு டிரைவர்கள் கார்களை மெள்ள ஓட்டிச் சென்றார்கள். தம்முடைய யுக்தி பலித்து விட்டது பற்றித் தலைமை ஆசிரியருக்கு ஒரே சந்தோஷம். தாம் ஒரு நல்ல காரியத்தைச் செய்து விட்ட திருப்தியில் அவர் நடந்தார்.

மறுநாள் காலையில் தலைமை ஆசிரியர் அந்தப் போர்டைப்பார்த்ததும் திடுக்கிட்டுப் போனார். ஏற்கெனவே எழுதியிருந்ததற்கு அடியில் வேறு யாரோ சில வார்த்தைகளைச் சேர்த்திருந்தார்கள்.



'பள்ளிக்கூடம் ஜாக்கிரதை! குழந்தைகளைக் கொன்று விடாதீர்கள்! உபாத்தியாயர்கள் வரும் வரை காத்திருங்கள்!' என்று இப்போது அந்த போர்டில் எழுதியிருந்தது!

— தம்பி



# மாயப் பந்து

## 11. உண்மை வெளிப்பட்டது!

அரண்மனைக்கு மால் கோஷையும் கலாவையும் இழுத்து வந்தனர் சேவகர்கள். பிறகு அவர்களை அரசன் முன் கொண்டு வந்து நிறுத்தினர். அவர்களை விசாரித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் திடீர் என்று அரசனுக்கு எதிரில் கொடியவன் குதித்தான். உடனே எல்லோரும் "பிடி" "அவனைக் கட்டு" என்று உரக்கக் கத்தினார்கள்.

"அரசரே! நான் தப்பி ஓடுபவனாக இருந்தால் உங்கள் எதிரில் இப்பொழுது வந்திருக்க மாட்டேன். என்னை முன்பின் அறியாமல் காப்பாற்றிய இருவரும் என்னைத் தப்பி வைத்ததற்காக உங்கள் எதிரில் கொண்டு நிறுத்தப்பட்டார்கள் என்று கேள்விப்பட்டுத்தான் நான் இப்போது இங்கே ஓடி வந்தேன். இதற்கு முன்பு ஊரார் சொல்லுவதைக் கேட்டு என்னை விசாரிக்காமல் எனக்கு மரண தண்டனை கொடுத்தீர்கள். இப்பொழுதாவது நான் எந்தச் சிறுவர் சிறுமிகளுக்கு என்ன கெடுதி செய்தேன் என்று விசாரித்து எனக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டுமோ, அதைக் கொடுங்கள்" என்று கேட்டான்.

அரசனும் அதற்கு இசைந்து, "யாராவது மூன்று சிறுவர் சிறுமியர்களைக் கூப்பிடுங்கள். அவர்களை முதலில் விசாரிப்போம்" என்றான்.

முதலில் ஒரு சிறுவன் வந்தான். "அரசே! இன்று எனக்குப் பள்ளிக்கூடத்தில் கணக்குப் பரீட்சை எழுதிக் கொண்டிருக்கும்பொழுது கொடியவன் உடனே தனது உருவத்தை ஒரு சுண்டு விரல் அளவு குறைத்துக்கொண்டு நான் எழுதிக் கொண்டிருந்த மேஜையின் அருகில் வந்தான். மேஜையின்மீது வைத்திருந்த மைக் கூட்டுக்குள்ளே சென்று உடம்பு முழுவதும் மையுடன் வெளியே வந்து திடீரென்று நான் கணக்குகள் போட்டிருந்த காகிதத்தின்மீது புரண்டு, எழுதியது ஒன்றுமே தெரியாமல்படி செய்து விட்டுச் சென்றான். என்னை மாத்திரம் அப்படிச் செய்யவில்லை. வேறு சில பையன்கள் எழுதி யிருந்த பரீட்சைத் தாள்களையும் அப்படித்தான் செய்தான். உபாத்தியாயரிடம் சொல்லி அவரை அழைத்து வருவதற்குள் அவன் எப்படியோ தப்பி ஓடிவிட்டான்" என்றான்.

உடனே அரசன் "சிறுவன் சொல்லுவது உண்மைதானா? அப்படியானால் ஏன் அப்படிச் செய்தாய்?" என்று கொடியவனைக் கேட்டான்.

"பரீட்சையில் சொந்த முயற்சியால் எழுதாமல் பக்கத்தில் இருப்பவனைப் பார்த்து எழுதுவது சரியான வழியா?" என்று கொடியவன் கேட்டான்.

"இல்லை இல்லை" என்று பல குரல்கள் கிளம்பின. "அப்படியானால் நான் செய்ததில் என்ன தவறு இருக்கிறது? எந்தக் கணக்கைக் காப்பி அடித்தானோ அந்தக் கணக்கைப் படிக்க முடியாமல் செய்தேன்" என்றான் கொடியவன். உடனே அரசன் குற்றம் கூறிய சிறுவனைப் பார்த்தான். அவன் பதிலே சொல்லாமல் தலையைக் கீழே குனிந்து கொண்டான்.

உடனே இரண்டாவது சிறுவன் "அரசே! நான் இன்று காலையில் வீட்டு மாடியில் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருக்கும் பொழுது இந்தக் கொடியவன் திடீரென்று என் அறைக்குள் நுழைந்தான். சிறிது நேரத்துக் கெல்லாம் நான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தையும் என் அலமாரியில் உள்ள வேறு சில புத்தகங்களையும் எடுத்துக் கொண்டு போய் எங்கள் வீட்டுக் கிணற்றில் போட்டுவிட்டு மூடி விட்டான்" என்று முறையிட்டான்.

அரசன் கொடியவனை நோக்கினான். "அரசே! சிறுவன் கூறியது உண்மையே. சிறுவனுக்கு இன்று இங்கிலீஷ் பரீட்சை. காலையில் எழுந்திருந்து இங்கி






லிஷ் பாடப் புத்தகத்தைப் படிக்காமல் 'கொள்ளிடத்துக் கொலை' என்ற துப்பறியும் நாவலைப் படித்துக்கொண்டிருந்தான். அதுவுமல்லாமல் அவன் அலமாரியில் துப்பறியும் தமிழ் நாவல்களாக அடுக்கி வைத்திருந்தான். 'பள்ளிக்கூடத்தில் படிக்கிற பையனுக்கு இவைகள் எல்லாம் எதற்காக?' என்று கோபத்தில் கிணற்றில் எறிந்துவிட்டு வந்தேன். உங்களுக்கு உண்மை தெரியவேண்டுமென்றால் கிணற்றில் விட்டெறிந்த புத்தகங்களை, எடுத்துக் கொண்டுவரச் சொல்லுங்கள்" என்றான். இரண்டாவது சிறுவனும் குனிந்த தலை நிமிரவே இல்லை.

உடனே அரசன், "போதும் மூன்றாவது சிறுவனை ஒன்றும் கேட்கப் போவதில்லை. நம்முடைய பட்டணத்துச் சிறுவர்கள் இவ்வளவு கேவலமாக நடந்து கொள்ளுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. நம்முடைய பள்ளிக்கூடத்து நிலைமையை விசாரித்து நன்றாக நடத்த முயற்சி செய்கிறேன். உண்மையாக நம் பட்டணத்துச் சிறுவர்களுக்கு உதவி செய்யும் நோக்கத்துடன் செய்த கொடியவனின் காரியங்களை நான் தப்பாக நினைத்து அவனது உயிருக்கே ஆபத்து நேரிடும்படி செய்தேன். மால்கோஷ் சமயத்தில் வந்து உதவி செய்யாமல் இருந்தால் கொடியவன் என்று சொல்லப்படும் நல்லவன் இறந்து போயிருப்பான்" என்று சொல்லி விட்டுக் கொடியவனைத் தன் அருகில் கூப்பிட்டான்.

"தெரியாமல் உனக்குத் தீங்கு இழைக்க நேரிட்டது. அதற்காக என்னை மன்னிக்க வேண்டும். ஆனால் சிறுவர்களை நேர் வழிக்குக் கொண்டுவர நீ மிகவும் முயற்சி செய்கிறாய் என்பதைக் கேட்க மிகவும் சந்தோஷம். ஆனால் நீ கையாளும் வழி சரி இல்லை. அதை மாற்றிக் கொண்டால் .." என்று அரசன் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே கொடியவனை நல்லவன் அங்கிருந்தவர்களுக்கு வணக்கம் தெரிவித்து விட்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அப்பட்டணத்தை விட்டுச் சென்றான்.

சிற்றரசன் கட்டளைப் படி அன்று இரவு மால்கோஷும், கலாவும் அரண்மனையில் தங்கி விட்டு மறுநாள் காலையில் அப்பட்டணத்தை விட்டுப் புறப்பட நிச்சயித்தார்கள். புறப்படுவதற்கு முன் சிற்றரசன் மாலகோஷிடம், "ஒருநாள் பழகினாலும் உங்களை விட்டுப் பிரிய மனம் இல்லை. உன் மனோதைரியத்தைப் பார்த்தால் எந்தக் காரியத்திலும் வெற்றி பெறுவாய் என்று நினைக்கிறேன். இங்கிருந்து சுமார் நானூறு மைலுக்கு அப்பால் மேற்குத் திசையில மகாராணு என்றொரு பெரிய பட்டணம் ஒன்று இருக்கிறது. அவ்வூர் அரசனுக்கு உனபோல ஒருவருடைய உதவி அவசியம் வேண்டி இருக்கிறது. அதைப் பற்றிய விஷயங்களை அங்கு போய்த் தெரிந்து கொள். அவசியம் நீ அங்கு சென்றால் வெற்றிபெறுவாய் என்று நினைக்கிறேன்" என்றான்.

உடனே கலா, "மகாராணு என்கிற பட்டணத்திலேதான் நம்முடைய மாமா குல்மா இருக்கிறார்" என்றாள்.

"ஆமாம்! ஆமாம்! அந்தப் பட்டணத்துக்குப் போய் அவர் வீட்டிலேயே தங்குவோம்" என்றான் மால்கோஷ். மகாராணு பட்டணத்துக்குப் போகும் வழியைத் தெரிந்துகொணடு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார்கள்.

நடுவில் பல இடங்களில் தங்கிவிட்டு மகாராணு என்ற பட்டணத்துக்கு வந்தார்கள். அந்தப் பட்டணத்துக்கு வநதது அது தான் முதல் தடவை. பெரிய பெரிய மாளிகைகளையும் விசாலமான வீதிகளையும் கொண்ட அந்தப் பட்டணம் ஏனோ சோபையற்று விளங்கியது. அவர்கள மாமா குல்மாவின்வீட்டைஅடைந்தார்கள். குல்மாவும் அவளது மனைவியும் மால்கோஷையும் கலாவையும் வரவேற்று அவர்கள் வந்த விஷயங்கள யாவற்றையும் தெரிந்து கொண்டார்கள்.

"மாமா! இவ்வளவு பெரிய பட்டணம் சோபையற்று விளங்குகிறது. பல இடங்களில் கறுப்புக் கொடி பறக்கின்றது. சினிமாக் கொட்டகைகளும், நாடகக் கொட்டகைகளும் மூடி வெகு காலம் ஆகிறது போல இருக்கிறது ஏதாவது முக்கிய விசேஷம் உண்டா?" என்று விசாரித்தான் மால்கோஷ்.

"மால்கோஷ்! அது பெரிய கதை. இந்த நாட்டை ஆளும் அரசன் மிகவும் முன் கோபம் உடையவன். நானும் அரசாங்கத்தில் ஒரு சிப்பந்தி என்பது உனக்குத் தெரியும். அரண்மனையே அவன் கோபத்துக்கு நடுங்கிக் கொண்டிருக்கிறது என்றால் மேலே சொல்வானேன். அரண்மனையில் மிகவும் பெயர் பெற்ற ஒரு மந்திரவாதி இருந்தான். பல மாதங்களுக்கு முன்பு ஒரு முறை அரசனுக்கும் அந்த மந்திரவாதிக்கும் சண்டை வந்தது. அரண்மனையை விட்டு வெளியேறிய மந்திரவாதி கோபங் கொண்டு அரசனுக்குப் புத்தி கற்பிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் "அரண்மனை உள்பட இந்தப் பட்டணத்தில், உள்ள எல்லோருடைய வீட்டில் உள்ள பண்டங்கள் யாவும் ருசியில் உப்பு அதிகமாக இருப்பது போல இருக்க வேண்டும்" என்று தனது மந்திர சக்தியினால் நினைத்தான். அவ்வளவுதான்; எல்லாப் பண்டங்களும் வாயில் போட்டுக் கொள்ளாமல்படி உப்பு கரிக்க ஆரம்பித்தன. பாயசமும், அல்வாவும் உப்பு கரித்தன என்றால் பார்த்துக் கொள்ளேன். மந்திரவாதி செய்த காரியத்தைப் பார்த்த அரசன் மந்திரவாதியைச் சமாதானம் செய்து தன் அரண்மனைக்குத் திரும்பி அழைத்துக் கொண்டு வந்தான். அவன் வந்த சில காலத்துக்கு அரசனும் மந்திரவாதியும் சிநேகமாகத்தான் இருந்தார்கள். ஆனால் திடீர் என்று ஒரு நாள் அவர்கள் இருவருக்கும் கடுமையான சச்சரவு ஏற்பட்டது. அதனால் மிகுந்த கோபத்துடன் மந்திரவாதி அரண்மனையை விட்டு வெளியே வரும்பொழுது, 'என்னை உனக்குப் பயந்து வேலை செய்யும் மந்திரவாதி என்று நினைக்காதே. சீக்கிரத்தில் நீ உன்னுடைய ஆயுளிலும் மறக்க முடியாதபடி ஒருதீங்கு செய்கிறேன், பார்!' என்று கூறிச் சென்றான். அரசன் மந்திரவாதிக்குப் பதில் சொல்லுவது போல, 'எது வந்தாலும் வரட்டும். நான் ஒருவருக்கும் பயப்படப் போவதில்லை' என்றான்.

"அரசனுக்கு மிகவும் அழகு வாய்ந்த ஒரு ராஜகுமாரி ஒருத்தி இருந்தாள். அவள் பெயர் ரூபியா என்று பெயர். அரசனுக்கு ஒரே பெண் ஆனதால் அவள் மீது மிகவும் அன்பு பாராட்டி அவள் நலத்தைப் பற்றியே எப்பொழுதும் யோசனை செய்து கொண்டிருப்பான். மந்திரவாதிக்கு அரசன் தன் பெண்மீது வைத்திருக்கும் அளவு கடந்த அன்பைப் பற்றி நன்றாகத் தெரியும். அதனால் தன் வஞ்சத்தைத் தீர்க்கும் பொருட்டு ஒரு நாள் நள்ளிரவிலே ராஜகுமாரியை எங்கேயோ கண்டுபிடிக்க முடியாத ஒரு இடத்துக்குக் கொண்டு போய் விட்டான். ஒரே சமயத்தில் ராஜகுமாரியும், மந்திரவாதியும் காணாமற் போகவே மந்திரவாதிதான் ராஜகுமாரி காணாமற் போனதற்குக் காரணம் என்று எல்லோருக்கும் தெரிந்து விட்டது. அன்பாக வளர்த்த மிகுந்த அழகுள்ள ராஜகுமாரி 'ரூபியா' காணாமற் போகவே அரசன் மனம் உடைந்தவனாய்ப் பைத்தியக்காரனைப் போலக் காணப்படுகிறான். மந்திரவாதியையோ அல்லது ராஜகுமாரியையோ கண்டுபிடித்துக் கொடுப்பவர்களுக்கு நிறைய இனாம் தருவதாகவும் சொன்னான். ஆனால் பலர் பிரயத்தனப்பட்டும் கண்டுபிடிக்க முடியாமல் திரும்பினார்கள். அப்படித் திரும்பினவர்கள்மீது அடங்காக் கோபம் கொண்டு அவர்களுக்குக் கடும் தண்டனை அளித்தான். ராஜகுமாரியைப் பற்றித் தகவல் தெரியும் வரையில் மகாராஜாப் பட்டணத்தில் சங்கீதங்களோ, நாட்டியக் கச்சேரிகளோ வேறு களிப்பூட்டும் காரியங்களோ நடக்கக் கூடாது என்று சொல்லிவிட்டான்" என்று குல்மா சொன்னான்.

"மாமா! நான் இவ்வூர் அரசர், மந்திரவாதி இவர்களுடைய இரண்டு பேரின் விஷயத்தில் தலையிட்டு இவ்வூர் அரசனுக்கு ஆன உதவியைச் செய்யப் போகிறேன். தயவுசெய்து கலா இங்கே இருக்கட்டும் நான் சென்று வருகிறேன்" என்றான் மால்கோஷ்.

உடனே கலா "எப்பொழுதும் போல் நானும் உன்னுடன் வருகிறேன். அப்பா நாம் இருவரும் எப்பொழுதும் சேர்ந்து இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறாரே?" என்றாள்.

"ஆமாம்! அப்பா சொல்லியது உண்மைதான். ஆனால நம்முடைய மாமா வீடு இருக்கிறபொழுது உன்னை நான் போகிற இடத்துக்கு அழைத்துப் போவது சரியல்ல. அங்கு நான் போகிறதே சரி இல்லை என்று மாமா சொல்லுகிறார். நீ இங்கேயே இரு நான் போய் விட்டு வருகிறேன்" என்றான் மால்கோஷ்.

"அண்ணா! நீ ஆபத்துக்கு உள்ளாகாமல் திரும்பி வர வேண்டுமே" என்று தன் கண்களிலிருந்து வந்த நீர்த் துளிகளைத் துடைத்துக் கொண்டே சொன்னாள் கலா.

மால்கோஷ் "கலா! சின்னக் குழந்தை மாதிரி ஏன் அழுகிறாய்? அப்பா எது வந்தாலும் தைரியமாக இருக்கச் சொல்லவில்லையா? சற்று நேரத்தில் மாலைப் பொழுது முடியும் போலிருக்கிறது. நான் அரண்மனைக்குச் சென்று சீக்கிரம் வருகிறேன்" என்று எல்லோரிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு வேகமாக அரண்மனையை நோக்கிச் சென்றான். (தொடரும்)

# மலைச்சாரல் மாதவி

அத்தியாயம் 27

## "மன்னித்துவிடு!"

சிவசங்கரன் மாதவியைச் சமாதானம் செய்துவிட்டு வீட்டுக்குப் போய்விட்டார். அதன் பிறகு மாதவி தனியாகத்தான் இருந்தாள். அந்தத் தனிமை அவளுக்குப் பழைய சம்பவங்களையெல்லாம் நினைவூட்டியது.

தான் குழந்தைப் பருவத்தில் கஷ்டப்பட்டதெல்லாம் அவளுக்கு நினைவு வந்தது. வருத்தமாக இருக்கும் நேரத்தில், முன்னால் பட்ட கஷ்டங்களையெல்லாம் நினைத்துக் கொண்டால் ஒருவிதமான ஆறுதல் ஏற்படுவதுண்டு. மாதவிக்குத் தன் அன்னை இறந்து போன சம்பவம் ஞாபகம் வந்தது.

அம்மா இறந்து போனபொழுது மாதவிக்குப் பத்து வயதுதான் இருக்கும். அம்மாவை நினைத்தால் அழுகை அழுகையாய் வரும். ஆனால் தன் அருமைத் தம்பிக்காக அழாமல் இருப்பாள். மாதவிதான் அவனுக்குக் குளிப்பாட்டி, உடை அணிவித்து, சாதம் போட வேண்டும். வீட்டில் வேறு யாரும் மனிதர்கள் கிடையாது.

அவனுடைய கையைப் பிடித்துப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துப் போவதில் அவளுக்கு இருந்த பெருமை சொல்லி முடியாது.

# ஆனந்தி

கருணாகரனின் வகுப்பு, மாதவியின் வகுப்புக்கு எதிர்ப் பக்கத்தில் இருக்கும். ஆகவே அவனைத் தன் வகுப்பிலிருந்தே பார்க்கக் கூடிய இடமாகத் தேடித்தான் உட்கார்ந்து கொள்வாள். எந்த உபாத்தியாயினியாவது இடம் மாற்றி உட்கார வைத்து விட்டால் அவளுக்குப் பிடிக்கவே பிடிக்காது.

ஒருநாள் கணக்கு வகுப்பு நடந்து கொண்டிருந்த பொழுது, சிரமப்பட்டு, ஒரு கணக்கைப் போட்டுக் கொண்டிருந்தாள் மாதவி. அவளுக்கு அருகிலிருந்த பெண் மாதவியைத் தொட்டாள். மாதவி நிமிர்ந்ததும், பக்கத்து வகுப்பைச் சுட்டிக் காட்டினாள். மாதவிக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவளுடைய அருமைத் தம்பியைப் பக்கத்து வகுப்பு உபாத்தியாயர் தன் முன்னால் நிறுத்தி ஏதோ அதட்டிக் கொண்டிருந்தார். பார்த்துக் கொண்டிருக்கும்போதே பிரம்பினால் கையில் ஒரு அடியும் அடித்து விட்டார். மாதவியின் கண்களில் நீர் பொங்கியது. துயரம் தாங்க முடியாமல் விம்மி விம்மி அழுது விட்டாள்.

கரும் பலகையில் எழுதிக் கொண்டிருந்த கணக்கு உபாத்தியாயினி, விம்மல் ஒலியைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். மாதவி அழுவதைக் கண்டதும், ''ஏன் அழுகிறாய், மாதவி?'' என்று கேட்டாள்.

மாதவியால் பதில் சொல்ல முடியவில்லை. மேலும் விம்மினாள். மாதவிக்கு அருகிலிருந்த பெண்ணைப் பார்த்து அந்த உபாத்தியாயினி, ''நீ ஏதாவது செய்தாயா?'' என்று கோபமாகக் கேட்டாள்.

''இல்லை டீச்சர். பக்கத்து வகுப்பில் அவளுடைய தம்பியை வாத்தியார் அடிச்சார். அதனாலே மாதவி அழறா'' என்றாள் அந்தப் பெண்.

உபாத்தியாயினி அம்மா ஒரு கணம் திகைத்துப் போனாள். மாதவியின் அருகில் வந்து, ''விஷமம் பண்ணினால் வாத்தியார் கோபித்துக் கொள்ளத்தான் செய்வார். இதற்கு அழலாமோ?'' என்று சமாதானம் செய்தாள். ஆனால் மாதவியின் அழுகை ஓயவில்லை. பக்கத்து



**ஒரு யந்திரம் நன்கு வேலை செய்ய வேண்டுமாயின் அது விஸ்தாரமான இடம் அடைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை, என்ற பொருள் கொண்ட பழமொழியொன்று 'ஸ்காட்ச்' மொழியிலுண்டு. இதற்கு எடுத்துக்காட்டாக இந்த ஸ்விஸ் ஜுவல் பதித்த லிவர் கடிகாரம் விளங்குகிறது. உலகிலேயே மிகச் சிறிய கடிகாரமான இதனுடைய டயல் சாதாரணத் தீக்குச்சியின் தலையளவுதான்.**

**வட்ட வட்டமான பொன் பட்டையுடன் கூடிய இந்தக் கடிகாரம் 1957ம் வருடம் நடைபெற்ற ஸ்விஸ் கடிகாரக் காட்சியில் வைக்கப்பட்ட நவநாகரீக சிருஷ்டிகளுள் ஒன்று.**

வகுப்பில் தம்பி பெஞ்சின்மீது நிற்பதைப் பார்த்துப் பார்த்து விம்மினாள்.

கடைசியில் அவன் பெஞ்சின்மேலிருந்து இறங்கி உட்கார்ந்த பிறகுதான், அவளுடைய அழுகையும் ஓய்ந்தது. அவளுக்குத் தன் தம்பியிடம் இருந்த வாஞ்சையைப் பார்த்துப் பள்ளியில் அனைவரும் வியந்தார்கள்.

அவளுக்குப் பதினெட்டு வயதாகும்போது தந்தையும் இறந்து போனார். மாதவி பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு உபாத்தியாயினி வேலைக்குப் பயிற்சி பெற்றிருந்தாள்.

ஆனாலும் சித்தப்பா முகுந்தன் அவளை வேலைக்குப் போக அனுமதிக்கவில்லை. கருணாகரன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். அவனைப் படிக்க வைக்கவே அவருக்கு விருப்பமில்லை. பள்ளிப் படிப்பை மாத்திரம் முடித்து விடட்டும் என்று பொறுத்துக் கொண்டிருந்தார்.

தன் தம்பியின் படிப்புக்காகவே மாதவி அந்த வீட்டில் இருந்து வந்தாள். அவர்களுடைய பேச்சையும், தன் தாய் தந்தையரைப் பற்றிக் கூறிய அவதூறுகளையும் கருணாகரன் ஒருவனுக்காகப் பொறுத்துக் கொண்டிருந்தாள்.

கருணாகரனின் பள்ளிப் படிப்பு முடிந்ததும், அவன் கல்லூரியில் சேர்ந்து படிக்கவேண்டுமென்று ஆசைப் பட்டான். வழக்கம் போல மாதவியிடம் தான் அவனால் அதைச் சொல்லிக் கொள்ள முடிந்தது.

மாதவிக்கும் அவனைப் படிக்க வைக்க வேண்டும் என்று ஆசை. சித்தப்பா தானாகப் பேச்சை ஆரம்பிப்பார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் பேசாமல் இருக்கவே ஒரு நாள் தானாகவே பேச்சை ஆரம்பித்தாள்.

அவளுடைய சித்தப்பா உடனேயே, ''கல்லூரிப் படிப்பினால் என்ன பிரயோசனம்? ஏதாவது வேலை பார்த்து வைக்கிறேன். செய்யட்டும். எத்தனை நாட்கள் தண்டச் சோறு தின்பது?'' என்றார்.

மாதவிக்கு மிகவும் வருத்தமாகப் போயிற்று. சித்தப்பாவுக்குப் பாரமாக இருக்கக் கூடாது என்று உறுதி செய்து கொண்டாள். 'எப்படியாவது உபாத்தியாயினி வேலை பார்த்துக் கொண்டு போய்விட வேண்டியது. மலைச்சாரல் பங்களாதான் இருக்கவே இருக்கிறது. தனியாக இருந்தால் ஊரார் என்ன சொல்லுவார்களோ என்று இனிமேல் பயப்படக் கூடாது. ஊரார் தம்பியைப் படிக்க வைப்பார்களா? எப்படியாவது இந்த வீட்டை விட்டு வெளியேறிவிட வேண்டும்' என்று தீர்மானித்தாள். தன் தம்பியிடம் கூட அவள் இதைப் பற்றிச் சொல்லவில்லை.

ஒரு நாள் ஏதோ சாக்குச் சொல்லி விட்டு வெளியே கிளம்பினாள். கமுக மலையில் இருந்த பெண்கள் பள்ளிக்கூடத்தில் சென்று தலைமை ஆசிரியையிடம் வேலை கேட்டாள். அதிர்ஷ்டவசமாக உடனே அவளுக்கு வேலை கிடைத்து விட்டது.

வீட்டில் அவள் விஷயத்தைக் கூறிய போது நடந்த ரகளையை நினைத்தாலே மாதவிக்குக் கதிகலங்கியது. அடேயப்பா! சித்தப்பா போட்ட கூப்பாடும், அவரது மனைவி சொல்லிய வார்த்தைகளும், அப்படியே காய்ந்த இரும்புக் கம்பியால் சூடு போட்ட மாதிரி மனத்தை விகாரப்படுத்தின. வீட்டை விட்டுப் போவதற்கு அவள் தயாராகவே இருந்தபோதிலும், 'போய்விடு' என்று அவர்கள் சொன்னபோது தயக்கமாகத் தான் இருந்தது. தன்னந்தனியாக

மலைச்சாரல் பங்களாவில் தான் வசிக்கத் துணிந்ததை எண்ணினால் இப்போது கூட மாதவிக்கு மிகவும் வியப்பாகத் தான் இருந்தது.

சித்தப்பா தனக்குக் கல்யாணம்செய்து வைக்க முயற்சி செய்கிறார் என்று தெரிந்த போது அவளுக்கு அளவில்லாத கோபம் வந்தது.

சித்தப்பாவிடமே, "நீங்கள் என்னு டைய நன்மைக்காகவா கல்யாணம் செய்து வைக்கப் போகிறீர்கள்? உங்க ளுக்கு யாரிடமாவது காரியம் ஆக வேண்டியிருக்கும். என்னை அதற்கு விலை பேசி விடுவீர்கள்!" என்று ஆத் திரத்துடன் கூறி விட்டாள்.

அன்றே தன் சாமான்களைக் கட்டி எடுத்துக் கொண்டு மலைச்சாரல் பங்களா வுக்குக் கிளம்பினாள். கருணாகரன் வாயைத் திறக்காமல் அவளைப் பின் தொடர்ந்தான்.

பிறகு எவ்வளவோ கஷ்டப்பட்டு அவனைப் படிக்க வைத்தாள். அவனு டைய கல்லூரிப் படிப்புக்கு வேண்டிய செலவுகளுக்கெல்லாம் அவளுடைய சம்பளம் போதவில்லை.

அப்போதுதான் பகவதி தேங்காய் எண்ணெய் தொழிற்சாலை முதலாளி விஜயராகவனை அவர்கள் பார்க்க நேர்ந்தது.

பள்ளிக்கூடத்தில் ஏதோ ஒரு விழா நடத்திய போது அவரைத் தலைமை வகிக்க அழைப்பதற்காக மாதவியை அழைத்துக் கொண்டு தலைமை ஆசிரியை சென்றாள். அவர், அன்று பேசிய வித மும், செய்த உபசாரங்களும் மாதவியின் மனத்தைக் கவர்ந்தன. இவ்வளவு பணக் காரர், எளிய குணமுடையவராக இருக் கிறாரே என்று ஆச்சரியப்பட்டாள். அவருடைய மகள் ஜயந்தி அதே பள்ளிக் கூடத்தில் மேல்வகுப்பில் படித்து வரு வதும் மாதவிக்குத் தெரியும்.

அதன் பிறகு ஒரு நாள் தலைமை ஆசிரியையின் யோசனையின் பேரில் அவரை மறுபடியும் சென்று பார்த்தாள் மாதவி. தன் தம்பியைப் பற்றிக் கூறினாள். படிப்புக்கு ஏதாவது விஜய ராகவனால் உதவி செய்ய முடியுமா என்று கேட்டாள். அவர் உடனே செய்வதாக வாக்குறுதி அளித்தார். அவருடைய உதவி இல்லாமல் போனால் கருணாகரனை முழுவதும் மாதவியால் படிக்க வைத்திருக்க முடியாது.

இது எப்படியோ சித்தப்பா முகுந்த னுக்குத் தெரிந்துபோய் விட்டது. ஒரு நாள் ரொம்பக் கோபமாக வந்து, மாதவி யைக் கண்டபடி ஏசினார். "உன்னால் தான் என் கௌரவம் பாழாகிப் போகிறது. நீ என்னமாய் என் நண்ப ரிடம் போய்ப் பண உதவி கேட்கலாம்? என்னை அவமானப்படுத்தி விட்டாய்" என்று அவர் சத்தம் போட்டார்.

மாதவி எதையும் பொருட்படுத்த வில்லை. அதிருஷ்டமிருந்து கருணா கரன் பரீட்சையில் தேறி, ஒரு வேலையும் பார்த்துக் கொண்டு விட்டால் தன் பொறுப்பு தீர்ந்துவிடும் என்று நிம்மதி யாக இருந்து வந்தாள்.

அவனை உத்தேசித்தே அவள் தன் திருமணத்தைப் பற்றிக் கூடச் சிந்தனை செய்யவில்லை. அவளுடைய கல்யாணத் தைப் பற்றி முகுந்தன் இரண்டு மூன்று தடவைகள் பேச்செடுத்தார். சண்டை போட்டுக் கொண்டு போன பிறகுகூட மாதவியைப் பார்த்து விவாகம் செய்து



வைப்பதாகச் சொன்னார். மாதவி சம் மதிக்கவில்லை. தனக்கு வரும் கணவனுக் குத் தன் தம்பியைப் பிடிக்காமல் இருந்து விட்டால் என்ன செய்வது என்று அவ ளுக்குப் பயம்.

ஆனால் சிவசங்கரனைப் பார்த்தது முதல் அவளுடைய மனத்தில் புதியதொரு மாறுதல் ஏற்பட்டு விட்டது. அவ ருடைய தோற்றமே அவர் எவ்வளவு கண்ணியமான மனிதர் என்பதைத் தெரி வித்தது. இவரை மணந்து கொண்டா லும் தம்பியைப் பற்றி ஒன்றும் சொல்ல மாட்டார் என்று மாதவிக்குத் தோன்றியது.

இப்போது இருவரும், வேறு ஒருவருக் காகச் சண்டை போட்டுக் கொண்டது மாதவிக்கு அர்த்தமாகவே இல்லை.

# மிகவும் எளிது!

ஒன்றை வாங்குங்கள்

மிக கலபமாக

**'ப்ரௌனி' காமிரா மாடல் !**

உலகெங்கும் நன்மதிப்புப் பெற்ற ஸ்டில்-20 'ப்ரௌனி' காமிராக்கள் நான்கு அற்புதமான மாடல்களில் உள்ளன! இந்த காமிராக்கள் ரூ. 28/-லிருந்து மேற்கொண்டு உயர்ந்த விலைகளிலும் கிடைக்கும். மூன்று மாடல்களில் ப்ளாஷ் இணைக்க வசதிகளும் க்ளோஸ்-அப் லென்ஸ்களும் உள்ளன. இரண்டு மாடல்களில் மஞ்சள் பில்டர்கூட உள்ளது.

**'ப்ரௌனி' ரிப்ளெக்ஸ் காமிரா**



இந்த இரட்டை-லென்ஸ் காமிராவின் மிகப் பெரிய வியூபைண்டர், காட்சிகளின் பிரதிபிம்பத்தைக் கிட்டத்தட்ட விழப்போகும் படத்தின் அளவில் காண்பிக்கும். வீட்டிற்குள்ளோ அல்லது இருட்டிய பிறகோ படமெடுக்க 'கோடக்' ப்ளாஷ்ஹோல்டரை பொருத்தவும். விலை ரூ. 45/4

கேஸ் .. .. ரூ. 3/4

ப்ளாஷ்ஹோல்டர் ரூ. 31/-

கோடக் லிட். (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது. கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது) பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

**பிலிமையே எப்பொழுதும் உபயோகியுங்கள்!**

இதையெல்லாம் நினைத்துக் கொண்டிருந்து விட்டு எழுந்தாள் மாதவி. நன்றாக இருட்டி விட்டதும், தான் சமையல் ஒன்றும் செய்யாததும் ஞாபகம் வந்தது. மெதுவாக எழுந்து சென்று விளக்கை ஏற்றினாள். பிறகு அடுப்பை மூட்டினாள். அடுப்பில் எரியும் செந்நெருப்பின் ஜ்வாலை மாதவியின் முகத்தில் பிரதிபலித்தது. அந்தச் செந்நிற ஒளியில் மாதவியின் முகம் புதியதொரு சோபையுடன் பிரகாசித்தது.

மாதவி நெருப்புக்குள்ளே எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பின்னால் கருணாகரன் வந்து நின்றதைக் கவனிக்கவில்லை.

மாதவியின் நெஞ்சிலிருந்து ஒரு பெருமூச்சு வெடித்துக் கொண்டு வந்தது. 'எத்தனை அருமையோடு இந்தத் தம்பியைப் பார்த்துக் கொண்டேன். என்னிடம் அப்படிப் பேசிவிட்டானே?' என்று எண்ணினாள் மாதவி.

''அக்கா!'' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள்.

கருணாகரன் அவள் அருகில் உட்கார்ந்து கொண்டான். ''என்னை மன்னித்து விடு, அக்கா! நீ எனக்குச் செய்திருப்பதற்கு நான் ஏழு ஜன்மம் எடுத்து உனக்குத் தொண்டு செய்ய வேண்டும். இன்று ஆத்திரத்தில் ஏதோ உளறி விட்டேன். என்னை மன்னித்துவிடு'' என்றான்.

''மன்னிப்பு எதற்காகக் கேட்கிறாய், தம்பி! உன்னிடம் எனக்குக் கோபமே கிடையாது'' என்றாள் மாதவி.

## அத்தியாயம் 28

# முகம் சிவந்தது

மறுநாள் காலை மாதவியும், கருணாகரனும் எல்லாவற்றையும் மறந்துவிட்டதாகத் தோன்றியது. மாதவி சீக்கிரம் சமையலை முடித்துவிட்டுத் தன் பையை எடுத்துக் கொண்டு பள்ளிக்குக் கிளம்பினாள். கருணாகரனும் சைக்கிளில் மில்லுக்குப் புறப்பட்டுப் போனான்.

கருணாகரன் மில்லை அடைந்தபோது, விஜயராகவன் வீட்டுக் கார் வாசலில் நிற்பதைப் பார்த்தான். விஜயராகவன் அவ்வளவு சீக்கிரமாக மில்லுக்கு வருவது வழக்கமில்லை. 'ஒருவேளை ஜயந்தி வந்திருப்பாளோ?' என்று நினைத்துக் கொண்டே சைக்கிளை வைத்துப் பூட்டிவிட்டு உள்ளே சென்றான்.

தன் அறைக்கு அருகில் வரும்போதே காரில் வந்திருப்பது ஜயந்தியாகத்தான் இருக்க வேண்டும் என்று அவனுடைய உள்ளுணர்வு கூறி விட்டது. ஜயந்தியின் குரலும் உள்ளேயிருந்து கேட்டது. 'யாருடன் பேசுகிறாள்?' என்று நினைத்துக் கொண்டே உள்ளே நுழைந்த கருணாகரனுக்கு ஒரு வாலிபன் நிற்பதைக் கண்டதும் தூக்கிவாரிப் போட்டது.

ஒரு கணத்தில் தன்னைச் சுதாரித்துக் கொண்டு அந்த வாலிபனை ஏறிட்டுப் பார்த்தான். அவனை எங்கேயோ பார்த்த மாதிரி தோன்றியது.

ஜயந்தி முன்னால் வந்து, ''இவரை உங்களுக்குத் தெரியவில்லையா? இவர்தான் என் பெரிய மாமாவின் பிள்ளை கோவிந்தன்'' என்று அவரை அறிமுகம் செய்து வைத்தாள்.

''பார்த்திருக்கிறேன். ஆனால் யாரும் அறிமுகம் செய்து வைத்ததில்லை. உங்கள் வீட்டில்தான் முன்பு எப்போதோ பார்த்திருக்கிறேன் போலிருக்கிறது'' என்றான் கருணாகரன்.

''உங்களை எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறதே'' என்றார் கோவிந்தன்.

இருவரும் கைகுலுக்கினார்கள்.

சற்று நேரம் கோவிந்தன் பேசிக்கொண்டிருந்தார். முதலில் வாலிபராகத் தோன்றிய போதிலும் இப்போது பார்த்தால் அவருக்குக் குறைந்தது முப்பத்தைந்து வயது இருக்க வேண்டுமென்று கருணாகரனுக்குத் தோன்றியது. 'என்ன வயதாக இருந்தால் எனக்கு என்ன?' என்றும் எண்ணினான்.

பிறகு மூவரும் தொழிற்சாலையைச் சுற்றிப் பார்த்துவிட்டு வரக் கிளம்பினார்கள். கோவிந்தன் கலகலப்பாகப் பேசிக்கொண்டுவந்தார். அவர் தொழிற்சாலையைப் பற்றியும், இயந்திரங்களைப் பற்றியும் பேசிய விதத்திலிருந்து அவருடைய புத்தி நுட்பம் புலனாயிற்று. அவ்வப்போது அவர் கூறிய சில யோசனைகள் அவருடைய கூர்மையான கிரஹிக்கும் தன்மையை வெளியிட்டன.

ஜயந்தி அவருடைய வார்த்தைகளுக்கு ரொம்ப மதிப்புக் கொடுப்பதாகக் கருணாகரன் கருதினான். அது அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. மேலும் கோவிந்தன் தன் திறமைக் குறைவைச் சுட்டிக் காட்டுவதற்காகவே அப்படியெல்லாம் கூறுகிறாரோ என்று அவனுக்கு வேதனையாக இருந்தது.

அவர் இயந்திரங்களைப் பற்றிக் கேட்ட இரண்டொரு கேள்விகளுக்கு அவனால் உடனே பதில் சொல்ல முடியவில்லை.

அது கருணாகரனின் மனத்தை மிகவும் பாதித்தது. அதுவும் ஜயந்தியின் எதிரே தன்னால் பதில் சொல்ல முடியாமல் போனதை எண்ணி எண்ணி அவன் வருத்தப்பட்டான்.

ஜயந்தியோ கருணாகரனின் உணர்ச்சிகளைக் கவனித்ததாகவே தெரியவில்லை. எப்போதும் போலக் கவலையற்றுப் பேசிக் கொண்டிருந்தாள். தன்னைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் அவள் கோவிந்தனையே பொருட்படுத்தி அவர் கூறுவதை யெல்லாம் பாராட்டியது அவன் உள்ளத்தைக் குத்தியது.

கடைசியில் இரண்டு பேரும் விடை பெற்றுக் கொண்டு போனார்கள். அதன் பிறகு கருணாகரனுக்கு வேலையே ஓடவில்லை. மனம் நொந்து உட்கார்ந்திருந்தான். இவ்வளவு அற்ப விஷயம் ஏன் தன் மனத்தைப் புண்படுத்த வேண்டும் என்பது அவனுக்கே புரியவில்லை.

மாலை அவனுக்கு விஜயராகவனிடம் பேச வேண்டியிருந்தது. அதற்காக ஜயந்தியின் வீட்டுக்குச் சென்றான். அப்போது கோவிந்தனும், ஜயந்தியும் வாசலில் உள்ள புல் தரையில் நாற்காலிகளில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். ஜயந்தி ஏதோ புத்தகம் ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு படித்துக் கொண்டிருந்தாள். அவள் ஏதோ ஆங்கிலக் கவிதையைப் படித்துக் காட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்று கருணாகரன் ஊகித்தான்.

அவனைப் பார்த்ததும் ஜயந்தி துள்ளி எழுந்து, ''வாருங்கள்'' என்று வரவேற்றாள். இன்னொரு நாற்காலியை இழுத்துப் போட்டு, ''உட்காருங்கள்'' என்றாள்.



கருணாகரன் உட்கார்ந்துகொண்டான். கோவிந்தன் ஜயந்தியைப் பார்த்து, ''தொடர்ந்து படி, ஜயந்தி! கருணாகரனும் கேட்கட்டுமே. ரொம்ப அழகான கவிதை'' என்றார்.

''அவருக்குப் பிடிக்காது'' என்று கூறி ஜயந்தி சிரித்தாள்.

கருணாகரனுக்குச் சுருக்கென்று தைத்தது. ஜயந்தி ரொம்பப் படித்தவள் என்பது அவனுக்குத் தெரியும். அவளுடைய ரசனையுணர்ச்சி எவ்வளவு உன்னதமானது என்பதை அவன் உணர்ந்து கொண்டிருந்தான். அவளைப் போலக் கவிதைகள் படிக்கவும், புத்தகம் படிக்கவும், புதிய பாஷைகள் கற்கவும் அவனுக்கு ஆசை கிடையாது. அதைக் குறித்து அவன் அவமானப்பட்டதும் கிடையாது. சில சமயம் அவள் ஏதாவது மேற்கோளாகச் சொன்னால்கூடப் பரிகாசம் செய்வான். ''புத்தகம் படித்துப்படித்து உனக்கு மூளை கலங்கி விடும்'' என்று கூறி ஆத்திரமூட்டுவான். ''நீ அதிகமாகப் படித்துத்தான் உன் உடம்பு இளைத்துப் போய்விட்டது. படிப்பதை நிறுத்தினால்தான் உனக்கு உடம்பு தேறும்'' என்பான்.

இன்று ஜயந்தி அப்படிக் கூறியதும் அவனுக்கு ரொம்ப அவமானமாகப் போய் விட்டது. ஏதோ செய்யக்கூடாத மகத்தானதொரு தவறைச் செய்து விட்டமாதிரி வேதனையாக இருந்தது.

கோவிந்தனும் சிரித்துவிட்டு ''ஜயந்தி! உன்னுடைய அற்புதமான குரலினால் வாய்ப்பாடு ஒப்பித்தால்கூடக் கேட்க இனிமையாக இருக்குமே. இந்த அற்புதமான கவிதை எப்படிப் பிடிக்காமல் இருக்க முடியும்? ஒன்றுமே தெரியாதவன்கூட நீ படித்தால் ரஸித்துத்தான் ஆகவேண்டும்'' என்றார்.

கருணாகரனுக்கு அவர் தன்னை ஒன்றுமறியாதவன் என்று மறைமுகமாகச் சொல்வதாகப் பட்டது. அவனால் எழுந்து போகவும் முடியவில்லை; அங்கே இருக்கப் பிடிக்கவும் இல்லை. எழுந்து போனால் தனக்குக் கவிதை பிடிக்காது என்று ஜயந்தி கூறியது உண்மையாகி விடும். கோவிந்தன் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார் என்று எண்ணினான். ஆகவே அரை மனத்துடன், ''எனக்குக் கவிதை பிடிக்குமே! ஆனால் ஜயந்தி எனக்குப் படித்துக் காட்ட மாட்டாள். அவ்வளவுதான்'' என்றான்.

ஜயந்திக்கு அவன் கூறியது கொஞ்சம் விநோதமாக இருந்தது. கருணாகரனை நிமிர்ந்து பார்த்து, ''நான் படிப்பது உங்களுக்குப் பிடிக்காவிட்டால் நீங்கள் அப்பாலைப் பார்க்கப் போகலாம். நான் தவறாக நினைத்துக்கொள்ள மாட்டேன்'' என்று கூறி விட்டு அவள் மேலே படிக்கத் தொடங்கினாள்.

கருணாகரனால் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவே முடியவில்லை. ஜயந்தி 'அவருக்குப் பிடிக்கா விட்டால் சிரமப்

## உலகில் முதல் இடம்

உலகத்தில் உள்ள மாளிகைகளில் மிகப் பெரியது எது என்று கேட்டால், லண்டனில் உள்ள பக்கிங்காம் மாளிகை என்றோ, அல்லது அமெரிக்கா ஜனாதிபதியின் ஜாகையான வெண் மாளிகை என்றோதான் பலரும் கூறுவார்கள். ஆனால், உண்மையில் இத்தாலியின் தலைநகரான ரோம் நகரில் உள்ள வாடிகான் மாளிகைதான் உலகத்தில் உள்ள மற்றெந்த மாளிகையையும் காட்டிலும் மிகப் பெரியது, அதிகப் பெருமை வாய்ந்தது, மிகப் புராதனமானது. அது கத்தோலிக்கர்களின் உலக குருவான போப் ஆண்டவர் வசிக்கும் மாளிகையாகும். 1145-ம்



ஆண்டு நிர்மாணிக்கப்பட்ட வாடிகான் மாளிகையில் இன்று வரையில் எத்தனையோ அபிவிருத்திகள் செய்யப் பட்டுள்ளன. அந்த மாளிகையில் இருபது பெரிய மண்டபங்களும் பதினோராயிரம் அறைகளும் இருக்கின்றன. மேற்படி மாளிகையில் உள்ள அரிய கலைப் பொக்கிஷங்களும் உலகப் புகழ் பெற்ற உயிரோவியங்களும் விலை மதிக்க முடியாதவை. மற்றும் அங்கு கண்காட்சி சாலைகள், புத்தக சாலைகள் முதலியனவும் இருக்கின்றன. இலக்கியப் பொக்கிஷங்களான ஐம்பதாயிரத்துக்கு மேற்பட்ட அபூர்வ கையெழுத்துப் பிரதிகள் இருப்பது வாடிகான் மாளிகைச் சிறப்பின் மற்றொரு அம்சமாகும்.

படுத்துவானேன்?' என்ற நல்ல எண்ணத்துடன்தான் கூறினாள். ஆனால் அது அவனுக்கு விபரீதமாகப்பட்டது. அவள் தன்னை அவமானப் படுத்துவதாகத் தோன்றியது. தனக்கு ரஸனை உணர்ச்சி இல்லை என்று குத்திக் காட்டுகிறாள் என்று எண்ணினான்.

கடைசியில் கவிதை ஒருவாறு முடிந்தது. அவனுக்கு ஒன்றுமே மண்டையில் ஏறவில்லை. தன்னைப் போன்ற முட்டாள் இந்த உலகத்தில் யாருமே இருக்கமுடியாதென்று நினைத்தான் கருணாகரன்.

ஜயந்தி 'டென்னிஸன்' எழுதியுள்ள ஒரு அழகான கவிதையைப் படித்தாள். சமுத்திர அலைகள் உருண்டு புரண்டு வரும் காட்சி கண் முன்னால் வந்து நிற்பதைப் போல் இருந்தது. கடலைப் பற்றிய அந்தக் கவிதையைப் படிக்கும் போதே அலைகளின் உறுமும் ஒலியும், கடையும் ஒலியும் கேட்பது போல இருந்தது. சமுத்திரக் கரையில் விளையாடிக் கொண்டிருக்கும் செம்படவச் சிறுவனும், படகில் உல்லாசமாகப் பாடிக்கொண்டிருக்கும் படகோட்டிச் சிறுவனும் கண்முன் நின்றனர். கோவிந்தன் அதை நிஜமாகவே ரஸித்துக் கொண்டிருந்தார்.

கருணாகரனால் பொறுக்கமுடியவில்லை. ''நான் அப்பாவை அவசரமாகப் பார்க்க வேண்டும். போய் வருகிறேன்'' என்று கூறிவிட்டு எழுந்தான்.

''சரி'' என்று தலையை ஆட்டினாள் ஜயந்தி.

இது கருணாகரனின் மனத்தை இன்னும் புண்படுத்தியது. அவள் தான் போவதை லட்சியமே செய்யவில்லை என்று வருந்தினான். 'இதை முழுவதும் கேட்டு விட்டுப் போங்களேன்' என்று அவள் கூறியிருந்தால் அவனுக்குச் சமாதானமாக இருந்திருக்கும். அவள் மேலே படிக்க ஆரம்பிக்கவே அவனுக்கு வருத்தமாகப் போய் விட்டது. அவனுடைய வருத்தம், கோவிந்தன் மீது ஆத்திரமாக மாறியது. ஆங்காரத்துடன் வேகமாக நடந்து உள்ளே சென்றான்.

''என்ன இப்படி முட்டாளாக இருக்கிறானே? இங்கிதமே தெரியவில்லையே?'' என்றார் கோவிந்தன்.

ஜயந்தி அதற்கு ''அவர் ஒன்றும் முட்டாள் இல்லை. அப்படிச் சொல்லாதீர்கள். சில பேருக்குச் சில விஷயங்கள் பிடிக்காது. அவருக்கு இதில் ஆசை இல்லை. அவ்வளவுதான்'' என்று கூறினாள்.

''அப்படியானால் அதைச் சொல்ல வெட்கப்பட வேண்டியதில்லையே.''

''அவர் கூச்சப் படவில்லை. உங்களுக்காக மரியாதையாக இருந்தார்!''

''அடேயப்பா! நீ அவனுக்கு ரொம்பப் பரிந்து பேசுகிறாயே. உனக்கு அவனைப் பிடிக்கும் போலிருக்கிறது'' என்றார் கோவிந்தன்.

ஜயந்தியின் முகம் சிவந்தது. கன்னம் குழிய அவள் அழகாகச் சிரிப்பதைப் பார்த்துக் கொண்டே கருணாகரன் வெளியே வந்தான். இருவரிடமும் ஒன்றும் சொல்லிக் கொள்ளாமல் சைக்கிளில் ஏறி வேகமாகச் சென்றான். அவன் சொல்லிக் கொள்ளாமல் அவ்வளவு வேகமாகப் போனது ஜயந்திக்கு மிகுந்த கவலையை அளித்தது.

**(தொடரும்)**

## தனது கவுனே வெண்மையென அவள் நினைத்திருந்தாள்
## ஆனால், ரின்ஸோவினால் சலவை செய்த மீனாவின் கவுனைப் பார்த்ததும் பிரமித்தாள்!

**உண்மை! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது**




அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோவினால் சலவை செய்யுங்கள். உங்களுடைய வெண்மை ஆடைகள் கண்ணைப் பறிக்கும் வெண்மையாக ஆகிவிடும்! வர்ணத் துணிகளும் அதிகப் பிரகாசமடையும்! அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை. ரின்ஸோவின் பிரமிக்கத்தக்க விறுவிறுப்பு வாய்ந்த நுரை எல்லா அழுக்குகளையும் கழுவிக் களைந்துவிடும். கண்ணைப் பறிக்கும் அத்தகைய அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் சேர்க்க வேண்டியது வேறொன்றுமில்லை, குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!

. . . சலவை செய்ய மிகவும் சுலபமானது

**இந்த அற்புத சோப் பவுடர்**

R. 7-50 TM



புதுமை பெறுக!
இதம் பெறுக!
நளினமாய் இருங்கள்! நாள்முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




**சார்மிஸ்**
**டால்கம் பவுடர்**

உன்னத. மனோரம்மிய மணத்துடன்.



# நரஸு காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்

நரஸுஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை

# படித்துப் பாருங்கள்

## தேன்மொழியாள்

மலருக்கு அழகு மணம். நதிக்கு அழகு நீர். கவிதைக்கு அழகு கருத்து. அதுபோல, நல்ல நாவலுக்கு அழகு எது என்று கேட்டால் ஒரு வார்த்தையில் சொல்லிவிட முடியாது. ஜீவநதியின் பிரவாகம் போன்ற கம்பீரமான கதையம்சம், அந்தக் கதையை அழகாக எடுத்துச் சொல்லும் கவர்ச்சியான நடை, கதா பாத்திரங்களின் மூலம் சமூக நல்வாழ்வுக்கு அடிகோலும் மிக உயர்ந்த கருத்துக்கள், இவையெல்லாம் பொதிந்திருக்க வேண்டும்.

மேற்கூறிய எல்லா அம்சங்களும் நிறைந்த ஒரு நாவலை எழுதுவதென்பது சிரம சாத்தியமான காரியந்தான். அத்தகைய சிரமசாத்தியமான காரியத்தையும் வெற்றிகரமாகச் செய்து முடித்திருக்கிறார் திரு பகீரதன். அவர் எழுதிய "தேன்மொழியாள்" என்ற நாவல் மேற்கூறிய நாவல் இலக்கணத்துக்குச் சிகரமாகத் திகழ்கிறது.

தேன்மொழியாள் என்ற அழகிய பெயரைக் கதாநாயகிக்குச் சூட்டிய ஆசிரியர் கதாநாயகனுக்கு இனியன் என்று பெயரிட்டிருப்பதிலிருந்தே கதையின் இனிமை நன்கு புலனாகிறது. கதை கிராமச் சூழ்நிலையில் உருவாகிறது. இயற்கை இன்பத்தில் காதல் பிறக்கிறது. காதலைச் சிருஷ்டிக்க ஆசிரியர், கல்லூரி, சினிமாத் தியேட்டர், பூங்கா முதலிய இடங்களைத் தேடியலையவில்லை. வைக்கோலின் நறுமணத்திலும், பசுமை படர்ந்த வயல்களின் இடையேயும், அவ் வயல்களிடையே தவழ்ந்து வரும் தென்றலிலும் இனியன்—தேன்மொழியின் காதல் தழைத்து, செழித்து வளர்ந்து வருகிறது. கடைசியில் அது சாதிப் பேயின் சீற்றத்தினால் கருகிப் போய்விடுகிறது.

இந்தக் கதையை ஆசிரியர் நவிலும் திறன் ஈடு இணையற்றதாயிருக்கிறது. இந்த அருமையான நாவலின் விலை : ரூ. 3-50.

## முல்லைவனத்து மோகினி

அழகும் இனிமையும் பூத்துக் குலுங்கும் ஒரு இன்பப் பூங்கா. ஒரு கன்னிப் பெண்ணைக் காதலித்து, அவள் உள்ளத்தில் இன்பக் கனலை எழுப்பி விட்டு, அவளை நீண்ட காலம் காத்திருக்கச் செய்து கடைசியில் கைவிட்ட கயவனின் கதைதான் இது.

இதய தாபத்தையும், உள்ளத் துடிப்பையும் பற்றிக் கூறும்போது ஆசிரியரின் நடை உணர்ச்சிப் புயலாகவே இருக்கிறது. உதாரணத்துக்குக் கொஞ்சம் பாருங்கள் :—

"வாழ்வின் இன்பங்கள் யாவும் அவளைச் சூழ்ந்திருந்தன. இருந்தும் அவள் திருப்தி இல்லாமலே இருந்தாள்...அடிக்கடி தாமரைக் குளத்துப் பக்கமே போக ஆரம்பித்தாள். தாமரை மலர்களை வைத்த விழிவாங்காமல் பார்த்துக் கொண்டே இருப்பாள். அருகில் இருக்கும் பெரிய கிணற்றைப் பார்ப்பாள். அதில் ஒரு நாள் விழுந்து உயிரை விடப்போன அபலைப் பெண்ணை நினைப்பாள். தன்னையும் அவளையும் ஒப்பிட்டுப் பார்ப்பாள். இலேசாகச் சிரிப்பாள். பிறகு அங்கிருந்து நேராகச் சலவைக்கல் மேடைக்கு வருவாள். அந்த மேடைமீது அமர்ந்து தன் காதலனை-சுந்தரத்தைப் பற்றி நினைத்துக் கொள்வாள். அப்படி நினைக்கும் பொழுது சில சமயம் கண்ணீர் விடுவாள்; சில சமயம் கலகலவென்று சிரிப்பாள்; சிலசமயம் பாடுவாள்; சில சமயம் தன்னை மறந்து ஆடவும் செய்வாள்."

இந்த அழகிய நூலுக்குப் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் முன்னுரை வழங்கியிருக்கிறார். இந்த நூலின் சிறப்புக்கு அதைவிட ஒரு நல்ல பாராட்டை நாம் கூறிவிட முடியாது. விலை : ரூ. 1-50.

## உழைப்பால் உயர்ந்த ஏழை

காதலைப் பற்றியும், காதலில் சிக்குண்ட இளம் உள்ளங்களைப் பற்றியும், இடீரென்று சரிந்துபோகும் காதல் கோட்டைகளைப் பற்றியும் நமக்குப் படமெடுத்துக் காட்டும் ஆசிரியர் பகீரதன் மனித வாழ்வில் இன்பம் நல்கும் உழைப்பின் பெருமையைக் கூறும் ஒரு கதையை ஆவேசத்துடன் எழுதியிருக்கிறார் என்றால் அது சிறிது அதிசயமாகத் தோன்றும். ஆனால் உழைப்பால் உயர்ந்த ஏழை என்ற நூலைப் படிப்பவர்கள் அதிசயப்பட மாட்டார்கள்; அயர்ந்துபோய் விடுவார்கள்.

மனிதனை உயர்த்துவது எது என்ற கேள்விக்குச் சட்டென்று பதில் அளிக்க முடியாது.

கல்வி அறிவினால் மனிதன் உயர்கிறானா? நற்பண்புகளால் உயர்கிறானா? சமூக சேவை உணர்ச்சியினால் உயர்கிறானா? அன்பினால் உயர்கிறானா? ஆண்மையினால் உயர்கிறானா?

மேற்கூறிய கேள்விகள் எல்லாவற்றுக்கும் 'ஆமாம்' போட்டுவிடுவது எளிது. ஆனால் அடிப்படையில், மனித வாழ்வின் உயர்வுக்கு ஆதாரமாக அமைந்திருப்பது எது என்ற கேள்விக்குப் பதில் இறுப்பதுதான் சற்றுக் கடினமானது. அதைத்தான் இந்நூல் தெளிவாக்குகிறது. உழைப்பினால் தான் மனிதன் உயர முடியும் என்பதை இந்நூலில் வரும் கதாபாத்திரங்கள் நமக்கு எளிதில் விளக்குகிறார்கள். வேலன் இந்நூலில் ஒரு சிறந்த பாத்திரம். வேலம்மாள் அவனை விளங்க வைக்கும் ஒரு அன்பு உருவம். அவன் கதை மனித குலத்தை மலர வைக்கும் மகத்தான சக்தி வாய்ந்தது. வேலம்மாள் — வேலன் காதல் கதையும், அவர்கள் காதல் வளர்ந்த கதையும், கடைசியில் அது மலர்ந்த கதையும் படிப்பவர் உள்ளங்களைக் கவரும் தன்மை கொண்டவை. சிற்றுளியினால் சிற்பங்களைச் செதுக்கும் சிற்பியைப்போல், திரு பகீரதன் இந்நூலை ஒரு சிறந்த சொல்லோவியமாகப் புனைந்திருக்கிறார். விலை: ரூ. 2—25.

மூன்று நூல்களும் கிடைக்கும் இடம் : கலைஞன் பதிப்பகம், பாண்டிபஜார், தியாகராய நகரம், சென்னை - 17.

—ஸோமாஸ்




மழை கொட்டு கொட்டு என்று கொட்டிக்கொண்டிருந்தது. ஐந்தடி தூரத்துக்குள் என்ன இருக்கிறது என்று பார்க்க முடியாதபடி அடை மழை பெய்து கொண்டிருந்தது. அந்த மழையில் அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். சுமார் ஐம்பது பேர்கள் இருக்கும். அஸ்ஸாம் மலைச்சாரலில், காட்டின் நடுவே ஒற்றையடிப் பாதையில் அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். சேற்றில் அவர்களுடைய கால் அழுந்தி எழுந்ததால் 'சொதக் சொதக்' என்று சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அவர்கள் தலையில் அணிந்து கொண்டிருந்த இரும்புத் தலைப்பாகைகளின் மீதுமழை கொட்டி வழிந்து கொண்டிருந்தது. அவர்கள் களைத்துப் போயிருந்தார்கள் என்பது அவர்களுடைய நடையிலிருந்து தெரிந்தது.

"இந்தக் கொடிய பாதைக்கு ஒரு முடிவே இல்லையோ?" என்று சோர்வோடு கேட்டான் ஒருவன்.

# நங்கை



"இந்தப் பாதை நம்மை நேராக நரகத்துக்கே கொண்டு விடப் போகிறது" என்று அலுத்துக் கொண்டான் மற்றொருவன்.

"இப்போதே நாம் நரகத்தில்தானே இருக்கிறோம். இதை விட வேறு நரகம் இருக்க முடியுமா என்ன? பாழாய்ப் போன மழை ஓயவே ஓயாதோ!" என்றான் வேறொருவன்.

அண்ட சராசரங்களெல்லாம் எட்டி எதிரொலிக்கும்படியாக ஒரு பேரிடி இடித்தது.

ஒருவன் உளறியடித்துக் கொண்டு அருகில் இருந்தவனைக் கட்டிக் கொண்டான். "துப்பாக்கிக் குண்டுக்குப் பயப்படாத சிப்பாய் இடிக்குப் பயப்படுகிறான்!" என்று கூறிவிட்டு அருகில் இருந்தவர்கள் சிரித்தார்கள்.

"நாசமாய்ப் போகிற இந்த இடி அந்தக் கலகக்கார பீஸோவின் தலையில் விழுந்து தொலைக்கக் கூடாதோ?" என்று அங்கலாய்த்தான் இன்னொருவன்.

"அது கிடக்கட்டும். நாம் இப்போது எங்கே போய்க் கொண்டிருக்கிறோம். யாருக்காவது தெரியுமா?" என்று ஒரு சிப்பாய் படபடப்போடு கேட்டான்.



"இதோ பார், சிப்பாய்கள் இந்த மாதிரிக் கேள்வி யெல்லாம் கேட்கக் கூடாது. தெரியுமா? 'நட என்றால் நடக்க வேண்டும்! ஓடு என்றால் ஓட வேண்டும்! சுடு என்றால் சுட வேண்டும்! செத்துப் போ என்றால் சாக வேண்டும்' அவ்வளவுதான். எங்கு ஓட வேண்டும், எதற்காகச் சாக வேண்டும் என்றெல்லாம் கேட்கக் கூடாது" என்று வேறொரு சிப்பாய் வெறுப்புடன் கூறினான்.

"எல்லாம் தெரியும், அப்பனே! என்னவோ புத்திமதி சொல்ல வந்து விட்டாயே? ஏதோ கேட்டேன், உனக்குத் தெரிந்தால் சொல்லு. இல்லா விட்டால் தயவு செய்து சும்மா இரு!" என்றான் முதலில் பேசியவன்.

"ரஜனிகாந்தனையே கேட்டு விடலாமே!"

"அந்தச் சிடுமூஞ்சியை யார் கேட்பது? நானேக்குப் பத்து மைல் தூரம் துப்பாக்கியைத் தூக்கிக் கொண்டு ஓடு என்று தண்டனை கொடுப்பான்."

"அதற்கு ரஜனிகாந்தன் என்ன செய்வார்? ராணுவ விதிகளை நாம் மீறினால் அதற்குரிய தண்டனையை அவர் கொடுத்துத்தானே ஆக வேண்டும்?"

"அது யாரப்பா அது, ரஜனிகாந்தனுக்கு இடுப்பு பிடிக்கிறவன்?" என்று பல குரல்கள் ஒரே சமயத்தில் கேட்டன. அதைத் தொடர்ந்து ஒரே சிரிப்பொலி கேட்டது.

"என்ன சத்தம் அங்கே? சிரித்து விளையாடுவதற்காகவா இங்கு வந்திருக்கிறீர்கள்? 'ஆன் தி டபிள்!'— ஓடுங்கள்" என்று கட்டளை பிறந்தது. முதுகில் கைகளைக் கட்டிக் கொண்டு ரஜனிகாந்தன் நின்று கொண்டு சிரித்தவர்களை வெறித்துப் பார்த்தார்.

கி. ராஜேந்திரன்



சிப்பாய்கள் ஒரு கணம் தயங்கினார்கள். 'அந்தக் கொட்டுகிற மழையில் புதை சேற்றில் கரடுமுரடான ஒற்றையடிப்பாதையில் மலைச் சாரலிலுள்ள காட்டின் நடுவே, நாள் முழுதும் நடந்து நடந்து அலுத்துப் போயிருக்கும் நம்மை ஓடச் சொல்கிறானே' என்று அவர்களுக்கு ஆத்திரம். அந்த ஆத்திரத்தில் ஒரு கணம் ரஜனிகாந்தனை வெறித்து நோக்கினார்கள். ஒரு கணம் அவர் கட்டளைக்குக் கீழ்ப்படியாதவர்கள்போல் தயங்கி நின்றார்கள். அடுத்த கணம் ஓடத் தொடங்கினார்கள்!

சுமார் அரை மணி நேரம் ஓடிய பிறகு அவர்கள் அந்தக் கிராமத்தை அடைந்தார்கள். மழை நின்றிருந்தது. கிராமத்து மக்கள் சிலர் அங்கும் இங்குமாகச் சிதறி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் பெண்களோ, வயோதிகர்களோ இல்லை என்பதை ரஜனிகாந்தன் கவனித்தான்.



அருகில் இரண்டொருவர் பேசிக் கொண்டிருந்தனர். அவர்களை அணுகி, "இதுதானே வில்துபி கிராமம்?" என்று கேட்டார்.

"ஆமாம். இதுதான் வில்துபி கிராமம். நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?"

சிப்பாய்களைப் பார்த்த உடனே சிதறி நின்று தங்கள் காரியத்தில் கவனமாயிருந்த கிராமத்து மக்கள் இப்போது ஒரே கூட்டமாகச் சேர்ந்து விட்டார்கள்.

"எனக்கு உங்கள் கிராமத்துத் தலைவர் பார்டோலியைப் பார்க்க வேண்டும்" என்றார் ரஜனிகாந்தன்.

கிராமத்து மக்கள் ஒருவருக்கொருவர் காதோடு பேசிக் கொண்டார்கள்.

"எதற்காக அவரைப் பார்க்க வேண்டும்?" என்று ஒருவர் கேட்டார்.

இதைக் கேட்டதும் ரஜனிகாந்தனுக்குக் கடுங் கோபம் வந்து விட்டது.

"நான் அதை அவரிடமே சொல்லிக் கொள்கிறேன். அவர் எங்கே இருக்கிறார்?" என்று அதிகாரக் குரலில் மீண்டும் கேட்டார்.

மறுபடியும் கிராமத்து மக்கள் ஒருவரோடு ஒருவர் காதோடு பேசிக் கொண்டார்கள். கடைசியில் ஒருவர் "என்னுடன் வாருங்கள்" என்று கூறி முன்னே நடந்தார். ரஜனிகாந்தன் அவரைப் பின்தொடர்ந்தார். பத்தடி எடுத்து வைத்ததும் சடார் என்று திரும்பினார். அவருடைய முகத்தில் சந்தோஷத்தினால் ஒரு புன்னகை அரும்பியது. அதற்குக் காரணம் அவருடைய சிப்பாய்கள் ஆடாமல் அசையாமல் அப்படியே நின்று கொண்டிருந்தனர். "அட் ஈஸ்—களைப் பாருங்கள்" என்று தொண்டை கிழியக் கத்தி விட்டு ரஜனிகாந்தன் மேலே நடந்தார்.

சிப்பாய்கள் நின்று கொண்டிருந்த இடத்திலேயே 'பொத் பொத்' என்று உட்கார்ந்தார்கள். சிலர் அப்படியே கால்களையும் கைகளையும் விரித்துப் படுத்து நீண்ட பெருமூச்சு விட்டார்கள். சிலர் உட்கார்ந்த வண்ணம் தங்கள் களைப்புற்ற கால்களைப் பிடித்து விட்டுக் கொண்டார்கள்!

## 2

கிராமத் தலைவன் பார்டோலியின் சிறிய வீட்டை ரஜனிகாந்தன் அடைந்தபோது நன்றாக இருட்டி விட்டிருந்தது.

ரஜனிகாந்தனை அழைத்து வந்தவன் "இதுதான் பார்டோலியின் வீடு" என்று சொல்லி விட்டுப் போய் விட்டான். வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஒருவனிடம் ரஜனிகாந்தன் தான் பார்டோலியைச் சந்திக்க விரும்புவதாகக் கூறினான்.

"யார் வந்திருப்பதாகக் கூறுவது?" என்று அவன் கேட்டான்.

"இந்திய ராணுவத்தைச் சேர்ந்த லெப்டினண்ட் ரஜனிகாந்தன் வந்திருக்கிறார் என்று அவரிடம் சொல்லுங்கள்."

சிறிது நேரத்தில் அந்த மனிதன் வீட்டினுள்ளிருந்து வெளியே வந்து ரஜனிகாந்தனை உள்ளே அழைத்துச் சென்றான்.

"இவர்தான் எங்கள் கிராமத்துத் தலைவர் பார்டோலி" என்று அந்த மனிதன் பார்டோலி அவர்களை அறிமுகப் படுத்தினான்.

ரஜனிகாந்தன் பார்டோலியைப் பார்க்கவில்லை. ஆனால் பார்டோலிக்கு அருகில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்திருந்த அந்தப் பெண்ணைப் பார்த்தார். அவளுடைய இளமை தவழும் கரிய உடல் மாடக் குழியில் இருந்த மண்ணெண்ணெய் விளக்கின் ஒளியில் பிரகாசித்தது. பால் போன்ற வெண்மையான பல் அவளுடைய கரிய உடலை எடுத்துக் காட்டுவதற்காக அமைந்தது போல் இருந்தது. அவள் அகன்ற விழிகள் சில கணங்கள் ரஜனிகாந்தனைப் பார்த்தன. அதன் பின் அவளுடைய பார்வையைத் தான முடியாமல் மூடிக் கொண்டன. அவளுடைய நீண்ட கண் இமைகள் மிருதுவான கன்னத்தைத் தொட்டுத் தொட்டுக் கொஞ்சி விளையாடின.

பார்டோலி மெல்லத் தம் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். ரஜனிகாந்தன் திடீரென்று சுய உணர்வு பெற்றவராய் கால்கள்

இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து வைத்து விறைப்பாக நின்று ஒரு சல்யூட் அடித்தார்.

"மேஜர் ஜெனரல் கோசாரிடமிருந்து நேரடியாக உத்தரவு பெற்று வந்திருக்கிறேன். லெப்டினன்ட் ரஜனிகாந்தனாகிய என்னைத் தங்களுக்கு அறிமுகம் செய்து கொள்ள விரும்புகிறேன். தங்களிடம் வந்ததும் மேஜர் ஜெனரல் ....." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார் ரஜனிகாந்தன்.

பார்டோலியின் முகத்தில் ஒரு புன்னகை அரும்பியது. அது ஒரு ஏளனப் புன்னகை என்று ரஜனிகாந்தனுக்குத் தோன்றவே தான் கூற வந்ததை முடிக்காமல் நிறுத்தினார்.

"வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசுவதெல்லாம் உங்களுக்குக் கீழ் இருக்கும் சிப்பாய்களிடம் மட்டும் வைத்துக் கொள்ளுங்கள்! என்னிடம் பேசும் போது...." என்று ஆரம்பித்தார் பார்டோலி.

அந்தப் பெண் அதைக் கேட்டதும் கல கல வென்று சிரித்துவிட்டாள். கருகும் என்றிருந்த அமாவாசை இரவில் தோன்றும் விண்மீன்களை அவளுடைய நட்சத்திரப் பற்கள் நினைவூட்டின. ரஜனிகாந்தனின் உடல் சிலிர்த்து விட்டது.



பார்டோலி பேச ஆரம்பித்தார். "மறந்தே போய் விட்டேன். இவள் என்னுடைய ஒரே மகள் கௌதமி. பிலோவினுடைய ஆட்களின் உபத்திரவம் தாங்க முடியாமல் கிராமத்தில் உள்ள பெண்களும் வயோதிகர்களும் பத்திரமான வேறு இடங்களுக்குச் சென்று விட்டார்கள். இவளையும் அவர்களுடனே போகும்படி சொன்னேன். இவள் போக மறுத்து விட்டாள். அப்பாவை விட்டுப் போவதற்கு அவளால் முடியாதாம். எப்படி இருக்கிறது கதை? இப்படி ஒரு அசட்டுப் பெண்ணை எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா?" என்றார்.

இதற்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் ரஜனிகாந்தன் விழித்தார். பார்டோலி இப்படிச் சொன்னாரே ஒழிய உண்மையில் கௌதமி அவரை விட்டுப் போகாததில் அவருக்கு அளவில்லாத சந்தோஷம் என்பது அவருடைய குரலிலிருந்து தெளிவாகத் தெரிந்தது. தம் மகளின் தைரியத்தையும் அவள் தம்மிடம் காட்டிய அன்பையும் எண்ணி யெண்ணி அவர் பெருமைப்பட்டார்.

"அப்பா! அவர் ஏதோ சொல்ல வந்தார். அதைக் கேட்காமல் நீங்கள் ஏதேதோ பேசிக் கொண்டே இருக்கிறீர்களே?" என்றாள் கௌதமி. வசந்த காலத்தில் கருவண்டு செய்யும் இனிய ரீங்காரம் ரஜனிகாந்தனின் காதுகளில் கேட்டது.

"ஆமாம். ஆமாம். மறந்தே போய்விட்டேன். நீங்கள் என்ன சொல்ல வந்தீர்கள்?" என்று கேட்டார் பார்டோலி.

"மேஜர் ஜெனரல் கோசாரிடமிருந்து எனக்கு உத்தரவு வந்தது. உங்களைப் படைத் தலைவர் சரியாகப் புரிந்து கொள்ளவேண்டியதின் அவசியத்தையும், படைத் தலைவனை நீங்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டியதின் முக்கியத்தையும் நன்கு உணர்ந்து கோசார் இந்தக் காரியத்துக்கு என்னைப் பிரத்தியேகமாகத் தேர்ந்தெடுத்தார். ஐம்பது சிப்பாய்களுடன் இந்தக் கிராமத்துக்கு வந்து இந்தக் கிராமத்தின் தலைவராகிய தங்களைச் சந்திக்க வேண்டும் என்று உத்தரவில் கண்டிருந்தது."

"சந்தித்தாகி விட்டதல்லவா மேலே....?"

"இந்தக் கிராமத்திலிருந்து சுமார் ஐந்து அல்லது ஆறு மைல் தூரத்தில் பிலோவின் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் ஒரு பகுதியினர் முகாம் போட்டிருக்கின்றனர் என்று நம்பகமாகத் தெரிகிறது. அங்கிருந்துகொண்டு திடீர் திடீரென்று சுற்றிலும் உள்ள கிராமங்களுக்குச் சென்று கொலை, கொள்ளை முதலியவற்றைப் புரிந்து வருகிறார்கள். இந்தக் கலகக்கார நாகர்களைப் பிடிப்பதற்கு நீங்கள் உதவ வேண்டும்."

"அதற்கு நான் என்ன உதவி செய்ய முடியும்?" என்று கேட்டார் பார்டோலி.

"அவர்கள் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து எங்களை அழைத்துச் செல்ல வேண்டும். எதிராளியை நேருக்குநேர் சந்தித்துச் சண்டை போட்டு ஜெயித்து விடுவோம். ஆனால் இந்த அஸ்ஸாம் மலைச்சாரல்களில் கலகக்கார நாகர்களைக் கண்டு பிடிப்பதே முடியாத காரியமாக இருக்கிறது. இந்த வனாந்திரப் பிரதேசங்களில் அவர்கள் எங்கெங்கெல்லாமோ ஒளிந்து கொண்டு திடீர்திடீரென்று தாக்குகிறார்கள்."

பார்டோலி சிறிது நேரம் யோசனை செய்தார். "எங்களைச் சேர்ந்தவர்களை, எங்களுடைய ஜாதியினரை நாங்களே காட்டிக் கொடுக்க வேண்டும் என்கிறீர்கள். அதற்கு நான் உதவி செய்கிறேன். ஆனால் மனச் சாட்சிக்கு விரோதமாக, என் விருப்பத்துக்கு மாறாகத்தான் உதவி செய்கிறேன். பாரத நாட்டின் ஐக்கியத்துக்கு நான் செய்யும் தியாகமாகக் கருதிச் செய்கிறேன். அதை மறந்து விடாதீர்கள்" என்றார்.

அப்போது வீட்டினுள் ஒரு வாலிபன் நுழைந்தான். பார்டோலியை வணங்கி விட்டு அடக்கத்துடன் ஒதுங்கி நின்றான். ஆனால் அவன் கண்கள் மட்டும் கௌதமியை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தன. ரஜனிகாந்தன் அதைக் கவனித்தார். ரஜனிகாந்தன் கவனிக்கிறார் என்று தெரிந்ததும் எக்காரணத்தினாலோ கௌதமியின் முகம் சட்டென்று வேறு பக்கமாகத் திரும்பியது.

"லாக்ரிக்கு இந்த வனாந்திரப் பிரதேசங்களில் தெரியாத இடமே கிடையாது. லாக்ரி தான் உங்களுக்கு உதவி செய்யச் சரியான ஆள்" என்று பார்டோலி கூறினார்.

பின்னர் ஸாக்ரிக்கு லெப்டினன்ட் ரஜனி காந்தனைப் பற்றியும் அவருடைய கோரிக்கையைப் பற்றியும் தெரியப்படுத்தினார்.

"நாளை சூரியன் உச்சிக்கு வந்ததும் புறப்படுகிறேன். கலகக்காரர்கள் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டு வருகிறேன். அதன் பின்னர் உங்களை அழைத்துப் போகிறேன்" என்றான் ஸாக்ரி.

"நாளைக்கே நாங்களும் உன்னுடன் வருகிறோம்" என்றார் ரஜனிகாந்தன்.

"அது சௌகரியப்படாது. நான் தனியே சென்றால்தான் அவர்கள் இருக்கும் இடத்தைச் சீக்கிரமாகக் கண்டுபிடிக்க முடியும்" என்றான் நாகர்குல வீரன் ஸாக்ரி.

"நீங்கள் எப்போது திரும்பி வருவீர்கள்?" என்று கேட்டார் ரஜனிகாந்தன்.

"நிச்சயமாகச் சொல்ல முடியாது. சுமார் ஐந்து மைல் தூரத்துக்குள் ஒரு கூட்டத்தினர் இருக்கிறார்கள் என்று சொல்கிறீர்கள். திசையைக் கூட உங்களால் காண்பிக்கமுடியவில்லை. நாலா திசையிலும் தேடித்தான் பார்க்க வேண்டும். இடத்தைக் கண்டு பிடித்தவுடன் திரும்பி விடுவேன். எவ்வளவு நாட்கள் ஆகுமோ, அது உங்கள் அதிர்ஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது" என்றான் ஸாக்ரி.

## 3

மறுநாள் காலை ரஜனிகாந்தன் கிராமத்தைச் சுற்றி மெள்ள நடந்து வந்து கொண்டிருந்தார். ஸில்துபி என்ற அந்தக் கிராமத்தின் இயற்கை அழகை அவர் கண்கள் பார்த்துக் கொண்டிருந்தன. ஆனால் அவர் மனம் கௌதமியைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தது. கருமையான தேகத்தில் அவ்வளவு வனப்பு இருக்குமென்று அவர் கனவிலும் எண்ணிப் பார்த்ததில்லை.

சிறிது தூரத்தில் ஒரு காட்டாறு சலசல வென்ற சத்தத்துடன் ஓடிக் கொண்டிருந்தது. முந்தின நாள் பெய்திருந்த மழையின் காரணமாக ஆற்றின் கரைகளைத் தொட்டுக்கொண்டு வேகமாகச் சென்று கொண்டிருந்தது. ரஜனிகாந்தன் கௌதமியைப் பற்றி எண்ணிக் கொண்டே ஆற்றின் கரையோரமாக நடந்து சென்றார். சற்றுத் தூரத்தில் ஒரு மரத்தின் அடியில் அவர் கண்ட காட்சி அவரை அப்படியே திகைக்கச் செய்து விட்டது.

மரத்தடியில் கௌதமியும் ஸாக்ரியும் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். காலை இளஞ் சூரியனின் ஒளியில் கௌதமியின் கருமை நிற உடல் புதுமை பெற்று ஒளிர்ந்தது. அவளுடைய கரங்களை ஸாக்ரி பற்றி யிருந்தான். கௌதமியின் கண்கள் மட்டும் தரையை நோக்கிக் கொண்டிருந்தன. அவர்கள் பேசுவதை ரஜனிகாந்தனால் கேட்க முடியவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் ஸாக்ரி போய்விட்டான். அவன் சென்ற திசையை ஒரு கணம் பார்த்தாள் கௌதமி. அடுத்த கணம் அங்கிருந்து திரும்பிப் போய்விட்டாள்.

இதுவரையில் தாம் அனுபவித்து அறியாத உணர்ச்சிகளை யெல்லாம் அப்போது ரஜனி காந்தன் அனுபவித்தார். அவர் உள்ளம் படாதபாடு பட்டது. வெகு நேரம் புது வெள்ளம் பாய்ந்து ஓடும் அந்த ஆற்றையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு ஒரு முடிவுக்கு வந்தவர்போல் எழுந்து நடந்தார்.

உச்சிப் பொழுதில் ஸாக்ரி விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டுச் சென்றான். "சீக்கிரமாகத் திரும்பி வந்து விடுங்கள்" என்று ரஜனிகாந்தன் சொல்லி அனுப்பினார். ஆனால் அவருடைய உள்ளம் ஸாக்ரி திரும்புவதற்குப் பல நாட்கள் ஆகவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டது!

அன்று மாலை ரஜனிகாந்தன் ஆற்றங்கரை யோரமாக நடந்து சென்றார். அவர் எதிர் பார்த்தபடியே கௌதமி காலையில் ஸாக்ரியுடன் பேசிக் கொண்டிருந்த இடத்தில் இருந்தாள். யாரோ தம் அருகில் நடந்து வரும் சத்தம் கேட்டதும் அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"ஓ, நீங்களா?" என்று முறுவலித்தபடியே கேட்டாள் கௌதமி.

"ஆம், நான்தான்!" என்றார் லெப்டினன்ட் ரஜனிகாந்தன்.

சற்று நேரம் மௌனம் நிலவியது.

"ஏன் இப்படி வருத்தத்துடன் உட்கார்ந்திருக்கிறாய், கௌதமி?"

"வருத்தப் படாமல் என்ன செய்வது? ஒரே ஜாதியினர், ஒரே இனத்தவர் வெவ்வேறு கட்சியாகப் பிரிந்து போகிறார்கள். ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக்கொள்கிறார்கள். கொலையும் கொள்ளையும் புரிகிறார்கள். ஊரைக் கொளுத்துகிறார்கள். இதையெல்லாம் பார்க்கும்போது வருத்தப் படாமல் சந்தோஷப் படவா முடியும்?"

"உண்மைதான். ஸாக்ரி கூடப் போய் விட்டான். அல்லவா?"

"என்ன சொன்னீர்கள்?"

"ஸாக்ரி கூட இங்கிருந்து போய்விட்டான் அல்லவா என்றேன்."

"ஆமாம், போய் விட்டார்!"

"நீ வருத்தப்படுவதற்கு அதுவும் ஒரு காரணம் இல்லையா?"

"ஸாக்ரி போய்விட்டால் என்ன? நாளையோ அல்லது அதற்கு மறுநாளோ திரும்பி வந்து விடப் போகிறார். அப்படியே இல்லாவிட்டாலும் அவர் போய்விட்டார் என்பதற்காக நான் ஏன் வருத்தப்பட வேண்டும்?"

"நீ அவனைக் காதலிக்கிறாய் அல்லவா? அதனால்தான்!"

கௌதமி ரஜனிகாந்தனை ஏறிட்டுப் பார்த்தாள். "யார் சொன்னது?" என்று திகைப்புடன் கேட்டாள்.

"யாரும் சொல்லவில்லை, கௌதமி! நானே இன்று காலையில் பார்த்தேன். இதே மரத்தடியில் நீயும் ஸாக்ரியும் பேசிக் கொண்டிருந்தீர்கள். உன்னுடைய கைகளை....."

"போதும், போதும்! தயவுசெய்து அவரைப் பற்றி என்னிடம் நீங்கள் பேசாதீர்கள்" என்றாள் கௌதமி. அவளுடைய குரல் தழதழத்தது.

"உனக்கு மனவருத்தத்தை அளிக்கிறது என்றால் நான் அவனைப்பற்றிப் பேசவேயில்லை. நீ பேசிக் கொண்டே இரு. நான் கேட்டுக் கொண்டே இருக்கிறேன்" என்றார் ரஜனி காந்தன்.

(அடுத்த இதழில் முடியும்)



## இந்த கோமாளி வேஷம்
## கோணங்கித்தனமா அல்லது அசிரத்தையின் விளைவா?

'ஸான்பொரைஸ்ட்' லேபிளுள்ள துணியை கவனித்து வாங்கியிருந்தால், இந்த அலங்கோலமான நிலைமையும், வீண் பணச் செலவையும் தவிர்த்திருக்கலாம். 'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க்குள்ள துணிகளை எத்தனை தடவை சலவை செய்தாலும், அவைகள் சுருங்காமல் உடம்புக்குப் பொருந்தியபடி இருக்கும்.

### லேபிளில் 'SANFORIZED' REGD TD MK
### இந்த அடையாளம் இருந்தால்

**உங்கள் துணிகள் உடம்புக்குப் பொருந்தாதபடி ஒருபொழுதும் சுருங்காது!**

ரிஜிஸ்தர் செய்யப்பட்ட 'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க்கின் சொந்தக்காரர்களான க்ளூயட் பீபாடி அண்ட் கோ., இன்கார்ப்பரேட்டட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப் பெற்றது) அவர்களால் இந்த விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இந்த கம்பெனியின் சுருங்காது என்பதற்கான கடும் நிபந்தனைகளுக்குட்பட்டு தயாரிக்கப்படும் துணிகளில் மட்டுமே 'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க் போட அனுமதிக்கப்படுகிறது.

விபரங்களுக்கு: 'ஸான்பொரைஸ்ட்' ஸர்வீஸ், 95, மெரீன் டிரைவ், பம்பாய்-2

ACP. 4366




# சந்திப்பு!

நா. பார்த்தசாரதி

"பாலு! அதோ அந்த ஏரியிலே படகு ஏறிப் போவோமா?"

"பயமா இருக்குமே, அப்பா!..."

"போடா பயந்தாங்கொள்ளி. நான் கூட வருகிறபோது உனக்கென்னடா பயம்?"

"சரி அப்பா போகலாம்" — கொடைக்கானலின் குளிரில் மிரண்டு என் அருகில் ஒட்டிக்கொண்டு நின்ற பையன் சம்மதத்துக்கு அறிகுறியாய்த் தலையை ஆட்டினான். முழுக்கைக் கம்பளிச் சட்டையும், கனமான நிஜாரும், மப்ளருமாகச் சேர்ந்து கொண்டு, ஐந்து வயதுப் பையனைப் பெரியவனாகக் காட்டின.

"வா பாலு! போகலாம்." பையனைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு ஏரியை நோக்கிக் கிளம்பினேன்.

"அப்போவ்..."

"என்னடா? என்ன வேணும்?"

"ஏரி ரொம்ப ஆழமா இருக்குமோ?" — மலர்ந்த விழிகள் இரண்டும் விரிய என்னை நிமிர்ந்து பார்த்துக் கொண்டே கேட்டான் பாலு. அந்தக் கண்களையும் அவன் முகத்தையும் பார்க்கிறபோது 'அவள்' நினைவு வந்தது. பாவி! எப்படித்தான் இந்தக் குழந்தையை விட்டுச் சாக மனம் வந்ததோ? மூன்றரை வருஷ வாழ்க்கை. எனக்குப் பாரமாக இந்தப் பையனை விட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தாள். வேண்டுமென்றா போனாள்? மரணத்தை வெல்ல நாம் யார்? பையனை மட்டுமா? என் சரோஜா என்னையும் அனாதையாக்கி விட்டுப் போய் விட்டாள்.

பாலு தாயில்லாத குழந்தை. நான் மனைவியை இழந்த வாலிப வயதுத் தந்தை. அவனுக்குத் தாயுறவு இல்லை. எனக்கு மனைவி உறவு இல்லை. இருவரும் இரு வேறு விதத்தில் நிராதரவானவர்கள்.

"என்னப்பா? நீ பதில் சொல்ல மாட்டாயா? உனக்கு என்மேலே கோபமா?"

"என்னடா? ஏரி ஆழமான்னு கேட்டாயா? ஆழமானாலும் நமக்கென்னடா கண்ணு? படகிலே தானே போகப் போகிறோம்? ஒரு பயமும் இல்லே." நான் சிந்தனையிலிருந்து விடுபட்டு அவன் கேள்விக்குப் பதில் கூறினேன். அவன் பேசாமல் நடந்து வந்தான். தூரத்திலிருந்து பார்க்கும்போதே ஏரியில் கூட்டம் அதிகமாக இருந்தது. வாடகைப் படகு கிடைக்குமோ, கிடைக்காதோ என்ற சந்தேகத்தோடு காலை எட்டிப் போட்டுத் துரிதமாக நடந்தேன் நான்.

"அப்பால்..."

"என்னடா மறுபடியும்? தொண தொணவென்று..."

"இல்லேப்பா! இப்போது அம்மா உயிரோடு இருந்தால் நம்மோடு கொடைக்கானலுக்கு வந்திருப்பாள் இல்லையா, அப்பா?"

"நீ பேசாமல் வர மாட்டாய்?" — அவன் கேள்வி புண்ணைக் கிளறி விட்டது. வாயை அடக்குவதற்காக இப்படிச் சத்தம் போட்டேன். என் சத்தத்தைக் கேட்டுப் பையன் 'கப்சிப்' என்றுஅடங்கிவிட்டான்.

படகுகள் புறப்படும் இடத்தில் ஒரே ஒரு படகு யாரும் வாடகைக்குப் பேசாமல் மீதமிருந்தது. அதற்கான வாடகையைக் கொடுத்துவிட்டுப் பையனை ஏற்றிக் கொண்டு புறப்பட்டேன். சுற்றிலும் அடர்த்தியான மலைக் காட்சிகளுக்கு நடுவே நீல நிற வெல்வெட்டை அளவு கத்திரித்துத் தைத்தாற் போன்ற அந்த ஏரியில் படகில் செல்வது எவ்வளவு பெரிய இன்பம்? சிறிதும் பெரிதுமாக இன்னும் எத்தனை எத்தனையோ படகுகள் ஏரியில் சென்று கொண்டிருந்தன.

"அப்பா! அப்பா! அதோ, அங்கே பாரேன்!" பையன் சுட்டிக் காட்டிய திசையில் பார்த்தேன். இருபது-இருபத்துமூன்று வயது மதிக்கத்தக்க பெண் ஒருத்தி படகைச் செலுத்திக் கொண்டிருந்தாள். படகில் அவளோடு பாலுவின் வயதை யொத்த சிறு பெண் ஒருத்தியும் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

"அந்த மாமி படகை என்ன வேகமாகச் செலுத்தறா பாரு அப்பா!"— பையனுக்கு உற்சாகம் கிளம்பிவிட்டது.

"அதுக்கென்னடா! நீ பயப்படாமல் இருந்தால் நானும் வேகமாக விடுவேன்"— என் பதிலை அவன் கவனிக்கவில்லை. அந்தப் படகையும் அதிலிருந்த சிறு பெண்ணையுமே பார்த்துக் கொண்டிருந்தான். என் கவனமும் அந்தப் படகின் மேல் சென்றது. அதைச் செலுத்திக் கொண்டிருந்தவளைக் கவனித்தேன் நான். ஆசையால் உந்தப்பட்டுப் பார்த்த பார்வை அல்ல அது! ஏதோ தற்செயலாகச் சென்று லயித்த பார்வை தான். 'இந்தப் புத்தகத்தில் நாம் படிப்பதற்கு என்ன இருக்கப் போகிறது?' என்ற அலட்சியத்தோடு பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருக்கும்போது நமக்குப் பிடித்தமான ஒன்று அதில் அகப்பட்டு விட்டால் எப்படி இருக்கும்? அந்த நிலைதான் தற்செயலாகச் சென்ற என் பார்வைக்கும் ஏற்பட்டது.

என் கண்கள் சென்ற திசையிலேயே நிலைத்தன. அப்படி ஒன்றும் அவள் பிரமாதமாக அலங்கரித்துக் கொண்டிருக்கவில்லை. வாயில் புடவையும் கறுப்பு நிறச் சோளியும் அணிந்து கொண்டிருந்தாள். செல்வக் குடும்பத்துக்கே உரிய கம்பீரமான அழகு அவள் முகத்தில் படிந்திருந்தது. வெளிறிய சிவப்பு நிறம்— யானைத் தந்தத்தைப் போல. நியாயமாகப் பார்த்தால் அவளுக்கு இருந்த அழகுக்கு இன்னும் எவ்வளவோ அலங்காரம் செய்து கொண்டிருக்கலாம். அதிகம் ஆடம்பரத்தை விரும்பாதவள் போலிருக்கிறது! என்ன எளிமை? எவ்வளவு அழகு?

''என்னப்பா! அங்கேயே பார்க்கிறே? படகைத் தள்ளு''—நினைவு திரும்பியது. நகராமல் தத்தளித்துக் கொண்டிருந்த படகைத் துடுப்புக்களால் தள்ளினேன். பாலு இன்னும் அந்தப் படகில் உட்கார்ந்திருந்த சிறுமியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''அப்பா! அந்தப் பொண்ணு அந்த மாமிக்கு மகளா, அப்பா?''

''சீ! போடா....அந்த மாமி தங்கையாக இருக்கும்'' என்றேன். சிறுமி அவளுக்கு நேர் மாறாக அலங்காரத்தின் சிகரமாகக் காட்சி அளித்தாள் தோற்றத்தில். பட்டுப்பாவாடை, வைர நெக்லேஸ், இரட்டைப் பின்னல், தலை தாங்காமல் மல்லிகைப்பூ முதலிய ஆடம்பர அலங்காரங்களால் நிறைந்திருந்தாள் அவள். எங்கள் படகுகள் வேறு வேறு திசையில் பிரிந்தன. படகு சிறிது தூரம் சென்றதும் கீழ்க்கண்ட சம்பாஷணை அரைகுறையாக என் காதில் விழுந்தது.

''......அந்த மாமாவுக்குப் பிள்ளையா அவன்?'' என்று கேட்டாள் சிறுமி.

''சீ! போடி உளறாதே!'' சிறு குழந்தைகளுக்கு ஒரே மாதிரி சந்தேகங்களே எப்போதும் ஏற்படுகின்றன. நான் அதைக் கேட்டு எனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டேன்.

ஏரியில் சுற்றிவிட்டுப் படகைக் கரைக்குக் கொண்டு வரும்போது மணி ஐந்தரை. அவளும் அந்தச் சிறுமியும் எங்களுக்கு முன்பே கரையேறிச் சென்றுவிட்டனர். பாலு தூக்கக் கிறக்கமுற்றுத் தள்ளாடினான். பனியும் குளிரும் அதிகமாகி விட்டிருந்தன. அவனை இழுத்துக் கொண்டு தங்கியிருந்த ஹோட்டலை அடையும்போது மணி ஆறேகாலுக்கு மேல் ஆகிவிட்டது. கொடைக்கானலில் அந்த நேரத்தில் குளிருக்கு அடக்கமாகத் தூங்குவதைத் தவிர வேறு எந்த 'நல்ல காரியத்தைச் செய்வதற்கு முடியும்? அதையே நானும் பாலுவும் செய்தோம்.

## 2. அனுமானம்

காட்சிக்கு வரம்பு உண்டு. கட்டுப்பாடு உண்டு. அனுமானத்துக்கு அவை இரண்டுமே இல்லை. தூக்கமோ, மயக்கமோ இன்றி மனத்தில் தன் நினைவோடு ஏற்படக் கூடிய சொப்பனவஸ்தைக்குத் தான் அனுமானம் என்று பெயரோ?

பாலு சிறு குழந்தை. சாப்பிட்டதும் தூங்கி விட்டான். தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தேன் நான்.

அவள். அவளுடைய அழகு. அவள் படகைச் செலுத்திய கம்பீரமான கவர்ச்சி, ''சீ! போடி. உளறாதே!'' என்று தங்கையைக் கடிந்துகொண்ட இனிய குரல். எல்லாம் நினைவில் மிதந்தன. நான் தங்கியிருந்த அதே 'லேக் வியூ' ஹோட்டலில்தான் அவளும் தங்கி யிருந்தாள். அன்று ஏரியிலிருந்து ஹோட்டலுக்குத் திரும்பியவுடனே இதை நான் தெரிந்துகொண்டு விட்டேன்.

அந்தப் பெண்ணும் அந்தச் சிறுமியும் தவிர வேறு யாரும் உடன் வந்திருப்பதாகத் தெரியவில்லை. ''ஒரு இளவயசுப் பெண் இப்படி ஒரு சிறுமியோடு தனியாகக் கொடைக்கானல் 'சீஸனை' அனுபவிக்க வந்திருக்கிறாளே! அவளுக்கு என்ன துணிச்சல்?''—என் மனத்தில் இப்படி ஒரு கேள்வி.

''அதனாலென்ன? இந்தக் காலத்தில் படித்த பெண்கள் தனியாகப் பிரயாணம் செய்வது தான் சகஜமாகி விட்டதே? காலேஜில் படிக்கிற பெண் போலும். வீட்டில் யாரும் துணைக்கு வரக்கூடிய நிலையில் இருந்திருக்க மாட்டார்கள். தங்கையையும் அழைத்துக் கொண்டு தனியாகக் கிளம்பியிருப்பாள். இதில் என்ன தப்பு?'' இப்படி ஒரு அனுமானம்.

''படித்து விட்டால்தான் என்ன? நெற்றிக்குப் பொட்டு வைத்துக் கொள்வது அநாகரிகமா? கைக்கு வளை போட்டுக் கொள்வது அநாகரிகமா? சே! சே! என்ன படிப்பு வேண்டியிருக்கிறது? நாலெழுத்து படித்து விட்டால் மங்கலமான பழக்க வழக்கங்களையெல்லாம் தலை முழுகி விடுகிறார்களே!''

''ஆனாலும் துணிச்சல்காரப் பெண்! படகை என்ன லாகவமாகத் தள்ளுகிறாள்? தண்ணீரைக் கண்டால் மிரண்டு நடுங்குகிற ஆளாகத் தெரியவில்லை.''

தூக்கக் கலக்கத்தில் புரண்டு படுத்த பாலு தன் பிஞ்சுக் காலால் இடுப்பில் உதைத்தான். போர்வையை இழுத்து அவனுக்கும் எனக்குமாகச் சேர்த்துப் போர்த்திக் கொண்டேன். எனக்கும் தூக்கம் இமைகளை அழுத்தியது. சிந்தனைகளால் எவ்வளவு நேரம்தான் தூக்கத்தை எதிர்க்க முடியும்?

இரண்டையுமே நான் எதிர்க்கவில்லை. தூக்கத்தையும், அனுமதித்து விட்டேன். சிந்தனையையும் அனுமதித்து விட்டேன். நினைவு தூக்கத்தில் இரண்டறக் கலந்து போய் விட்டது!

## 3. கனவு

நினைவோடு கூடிய எண்ணத்துக்குச் 'சிந்தனை' என்று பெயர். தூக்கத்தில் ஏற்படும் பிரக்ஞையற்ற எண்ணத்துக்குப் பெயர் உண்டா? உண்டானால் 'கனவு' என்பது தான் அந்தப் பெயர்.

மாலை நேரம். கொடைக்கானல் மலை அழகின் சுவர்க்கமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. அங்கங்கே ஹோட்டல்களிலிருந்தும், பங்களாக்களிலிருந்தும், பல நிறப் பட்டுப் பூச்சிகளைப்போல ஆண்களும் பெண்களுமாக ஏரியில் படகு செலுத்தவும், மலைக் காற்றில் உலாவவும், சினிமா பார்க்கவும் சென்று கொண்டிருந்தனர்.

நான் பாலுவை அழைத்துக் கொண்டு ஏரிக் கரைக்குப் போகிறேன். அதே சமயத்தில் அந்த அழகியும் தன் தங்கையை அழைத்துக் கொண்டு வருகிறாள். அதே வெள்ளைக் கலையுடுத்த கோலம். பாலுவும் சிறுமியும் வெகு நாள் பழகியவர்களைப் போலக் கை கோத்துக் கொண்டு நடந்து வருகின்றனர்.

ஆனால் நாங்கள் அப்படிக் கைகோத்துக் கொண்டு சிரித்துப் பேசி நடக்க முடியுமா? அவள் யாரோ? நான் யாரோ? ஆசை இருக்கலாம்; அப்படிச் செய்ய வேண்டுமென்று. யாருக்கு? எனக்குத்தான். அவளுக்கும் தான். ஏன்? இருவருக்குமே இருக்கலாம்! எல்லா ஆசைகளையுமே வெளிப்படையாக நிறைவேற்றிக் கொண்டுவிட முடியுமா? பச்சைக்



## பிரகாசமுள்ள வெண்ணிறப் பற்கள் மட்டுமல்ல அத்துடன் ஆரோக்கியமான ஈறுகளும்!

ஈறுகளை கெட்டியாகவும் ஆரோக்கியமாகவும் வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப்பற்பசையில் டாக்டர் ஆர்.ஜே. போர்ஹான் டி. டி. எஸ் அவர்கள் பக்குவப்படுத்திய முறையில் விசேஷ காரப் பொருள் கலக்கப்படுகிறது. ரத்தக்கசிவு வீங்கிய ஈறு புண்ணானதும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பி விடும் ஆனபடியால் இந்த இரட்டைக் காரியமுள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்து பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவரெனப் பெருமைப்படலாம்.

தன்த்வைதினால்
செய்யப்பட்ட டூத்பேஸ்ட்

**போர்ஹான்ஸ்**
ஈறுகளுக்குகந்தது



கற்பூரத்தைப் பேழைக்குள் பொதிந்து வைத்திருந்தால்தானே வாசனை நிலைத்திருக்கிறது? சில ஆசைகளையும் அதுபோல் அடக்குவது அவசியமாகிறது.

நானும் அவளும் சாதாரணமாகச் சம்பாஷித்துக் கொண்டு நடந்தோம். இடையிடையே அவசியமான சமயங்களில் அவளுடைய முத்துப் பல் வரிசை பவழச் சிறையிலிருந்து மெல்லத் தோன்றி மறையும். அதாவது அவள் சிரிப்பாள்.

"உங்களை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது! சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறீர்கள். இந்த வருஷம் கொடைக்கானல் சீஸனுக்கு வந்ததில் உங்கள் பழக்கத்தை என்றென்றும் மறக்க மாட்டேன்." — அவள் புன்னகையோடு என்னைப் பார்த்துக் கொண்டே இவ்வாறு கூறுகிறாள்..

"எனக்கும் அப்படித்தான்" என்று சிரித்துக் கொண்டே பதில் சொல்கிறேன் நான்.

"நாமிருவரும் ஜோடியாக ஒரு புகைப்படம் எடுத்துக் கொண்டால் என்ன?" எனக்குத் தூக்கி வாரிப் போடுகிறது. ஆனாலும் மகிழ்ச்சி. யாராவது கரும்பு தின்னக் கூலி கேட்பார்களா? மகிழ்வால் பொங்கும் என் மனத்தைச் சமாளித்துக் கொண்டே, "அதற்கென்ன? எடுத்துக் கொண்டால் போயிற்று! பாலுவையும் உன் தங்கையையும் கூட உட்கார்த்தி எடுத்துக் கொள்வோம்!" என்கிறேன்.

"ஊஹூம், கூடாது. நாம் இருவரும் தனியாக எடுத்துக் கொள்ள வேண்டும்."

"சரி!...அப்படியே செய்யலாம்." இருவரும் ஒரு ஸ்டுடியோவுக்குச் சென்று புகைப்படம் எடுத்துக் கொண்டு அதன் பிறகு ஏரிக்குச் சென்றோம்.

"இன்றைக்கு நாம் ஒரே படகில் செல்வோம். தனித்தனிப் படகுகள் வேண்டாம்." அவள் கெஞ்சினாள்.

"இல்லை! பார்க்கிறவர்களுக்கு நன்றாக இருக்காது. யாராவது ஏதாவது தவறாக நினைத்துக் கொள்வார்கள்."

"நான் அதைப்பற்றிக் கவலைப் படவில்லை! உங்கள் வாழ்க்கைப் படகிலேயே அருகில் அமர்ந்து ஓட்டத் தீர்மானித்து விட்டவளுக்கு இந்த வெறும் படகில் உட்காரத் தயக்கமா?"

"என்னது? இப்போது நீ பேசுவது மெய்தானா? என்னால் என் காதுகளையே நம்ப முடியவில்லையே?"

"நம்புங்கள். சத்தியமாக நம்புங்கள். நான் உங்களிடம் என்னை ஒப்படைக்கத்தான் போகிறேன்..."

"ஆனால் அது என் தவப்பயன்..."

"வாருங்கள், ஒரே படகில் போகலாம்.."

"குழந்தைகள்?"

"அவர்கள் வேண்டாம்! கரையிலேயே இருக்கட்டும்..."

"ஏன் கூட வரட்டுமே! படகில் இடத்துக்குப் பஞ்சமா? தவிர, கரையில் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது யார்...?"

"உஷ்! அதோ பாருங்கள்! அவர்களைப் போல நாமும் போக வேண்டும்."

அவள் சுட்டிக்காட்டிய திசையில் பார்த்தேன். ஒரு சிறு படகில் கணவனும் மனைவியும் போலக் காணப்பட்ட ஒரு யுவனும், யுவதியும்



கடைக்காரர் - சட்டை தைக்க இந்த வரி போட்ட துணிதான் நல்லாயிருக்கும்!....
வந்தவர் :— சர்க்காரிலே போடற வரியே சமாளிக்க முடியல்லே....வரி போட்ட துணி வேற எதற்கு அப்பா!....

oooooooooooooooooooooooooooooooooooo

நெருங்கி உட்கார்ந்து கொண்டிருந்தனர். என் உடலில் பாதாதிகேச பரியந்தம் மயிர் சிலிர்த்தது அவள் ஆவல்ததும்பும் கண்களால் இமைக்காமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பார்வை என்னை வென்று விட்டது. "சரி! உன் இஷ்டம்..."

குழந்தைகள் இருவரையும் படகு இளம்பும் இடத்திலிருந்த ஆளிடம் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுக் கிளம்பினோம்.

"அப்பா! அப்பா! என்னைமட்டும் விட்டுட்டுப் போறியே? உனக்குப் பாவம்." பாலு மழலைக் குரலில் கூப்பாடு போடுகிறான். அந்தச் சிறுமியும் அவனோடு சேர்ந்துகொண்டு கூப்பாடு போடுகிறாள். நாங்கள் அந்தக் கூப்பாட்டைக் காதில் கேட்காதவர்களைப் போலப் படகைச் செலுத்துகிறோம்.

"எவ்வளவு மனோரம்மியமான நேரம் இது?" என்று கூறிக் கொண்டே என் தோள் பட்டையில் தலையைச் சாய்க்கிறாள் அவள். கூந்தல் என் கன்னத்தில் உரசுகிறது.

"அன்பே! இவை மறக்க முடியாத நிமிஷங்கள்." நான் அவள் தலையைக் கோதிக் கொண்டே இவ்வாறு சொல்கிறேன்.

"இந்த நிமிஷங்கள் இப்படியே ஊழி ஊழியாக நிலைத்து விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?" — அவள்.

தோள் பட்டையில் ஏதோ உறுத்துவது மாதிரி உணர்ந்து கண் விழித்தேன். விழித்தால்...? அடாடா! அதுவரை நிகழ்ந்ததெல்லாம் வெறும் கனவு! தூக்கத்தில் குழந்தை பாலு தன் காலைத் தூக்கி என் தோளபட்டைமேல் போட்டிருந்தான். ஆகா! எத்தகைய இன்பமயமான கனவு?

## 4 உண்மை

மறுநாள் மாலை பாலுவை அழைத்துக் கொண்டு ஏரிக்கரைக்குப் போனேன். சொல்லி வைத்தாற்போல அந்த வெள்ளைக்



'' ஒரு வருஷத்துக்குள்ளே இவ்வளவு புஸ்தகங்களையும் படிச்சாகணும்......ஊஹும்.........''

'' ஏண்டா, கண்ணு அழுத்துக்கிறே?......... முடிந்த வரை இந்த வருஷம் படி.........பாக்கி இருக்கிற புஸ்தகங்களை அடுத்த வருஷம் படி!''

---

கலையுடுத்த மோகினியாளும் தங்கையை அழைத்துக் கொண்டு வந்திருந்தாள். முதல் நாளிரவு கனவில் தோன்றிப் படாதபாடு படுத்திய அந்த அழகி இப்போது நான் நின்று கொண்டிருந்த பக்கம் சாதாரணமாகத் திரும்பிப் பார்த்தாள். அவளோடிருந்த சிறுமி பாலுவைத் திரும்பிப் பார்த்தாள். பாலுவும் அவளைப் பார்த்தான்.

இருவருடைய கைகளிலும் 'சாக்லேட்' சுற்றிய வர்ணக் காகிதங்கள் இருந்தன. காகிதங்களைக் கப்பல்களாக மாற்றும் முயற்சியில் இருவரும் ஈடுபட்டனர். பெரியவர்களுக்குத் தான் பழகுவதற்குக் கூச்சம், சங்கோஜம் இவையெல்லாம் தடையாகக் குறுக்கிட்டுத் தொலைக்கின்றன. சிறுவர்கள் இதையெல்லாம் பார்ப்பதில்லை. ஒருவருக்கொருவர் அருகில் நெருங்கிக் கப்பல்களை உருவாக்கும் வேலையை ஆரம்பித்தனர்.

இதற்குள் படகுகள் வந்துவிட்டன! நான் படகைப் பேசி வாடகை கொடுத்துவிட்டுப் பாலுவை அழைத்துக் கொண்டு புறப்பட்டேன். அவள் மற்றோர் படகில் தங்கையை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். இரண்டு படகுகளும் அதிகம் விலகாமல் நெருக்கமாகவே சென்று கொண்டிருந்தன.

'' உன் கப்பலைத் தண்ணீரிலே விடு. என் கப்பலையும் விடுகிறேன்!'' அந்தச் சிறுமி பாலுவைக் கூப்பிட்டாள்.

' சரி! இந்தா விட்டுவிட்டேன். நீயும் விடு!'' பாலு தன் காகிதக் கப்பலை என் படகுக்கு அருகில் தண்ணீரின் மேல் மிதக்க விட்டான்.

'' இதோ நானும் விட்டுவிட்டேன்!'' அந்தப் பெண்ணும் தன் படகோரமாகக் காகிதக் கப்பலை மிதக்க விட்டாள்.

இரண்டு கப்பல்களும் நேர் எதிரெதிர்த் திசையில் நகர்ந்தன.

குழந்தைகளின் இந்த வேடிக்கையைப் பார்த்து 'அவள்' என்னை நோக்கி முறுவல் பூத்தாள். நானும் பதிலுக்குப் புன்முறுவல் செய்தேன். வேறு பேச்சில்லை. குழந்தைகள் காகிதக் கப்பல் விளையாட்டில் நெருக்கமாக ஈடுபட்டிருந்ததால் அவளோ, நானோ, படகுகளை வேறு திசையில் விலக்கிச் செல்ல முடியவில்லை. நாங்கள் மட்டும் ஜடங்களா? அருகருகே எவ்வளவு நேரம்தான் பேசாமல் வெறுமனே சிரித்துக் கொண்டு மட்டும் இருக்க முடியும்? அவள்தான் முதலில் பேச்சைத் தொடங்கினாள்: '' சார்! பையன் உங்கள் தம்பியா? ரொம்ப 'பிரிஸ்கா' இருக்கிறானே?''

'' இல்லை! என் பையன். தாயில்லாக் குழந்தை!'' மென்று விழுங்கிக் கொண்டே பதில் சொல்லி விட்டு அவள் முகத்தை உற்றுப் பார்த்தேன்.

அப்பப்பா! அந்த முகத்தில் எவ்வளவு ஏமாற்றம்? கண்கள் ஏன் அப்படி விரிகின்றன? துடுப்பைத் தள்ளிக் கொண்டிருந்த கை இயக்கமற்று நின்று விட்டதே? பாலுவுக்கு நான் தகப்பன் என்று அறிந்தபோது அவளுக்கு ஏன் இவ்வளவு ஆச்சரியமும் ஏமாற்றமும் உண்டாகின்றன?

'' இந்தச் சிறுமி உங்கள் தங்கையோ?'' என்று நான் கேட்டேன். சட்டென்று அவள் முக பாவம் மாறியது. கன்னங்கள் சிவந்தன. தலை கீழ் நோக்கியது. அவள் கூறிய பதில்:

'' இல்லை! என் பெண், தகப்பனில்லாக் குழந்தை.''—என் தலைமேல் வானம் இடிந்து விழுந்தது போல் இருந்தது எனக்கு. அதிர்ச்சியில் துடுப்பைத் தண்ணீருக்குள்ளே நழுவ விட்டுவிட்டேன். இரு படகுகளும் ஸ்தம்பித்து நின்றன. நின்ற வேகத்தில் என் படகடியிலிருந்து ஒரு அலை கிளம்பியது. அலைகளின் கும்மில் பாலுவும் சிறுமியும் மிதக்க விட்ட காகிதக் கப்பல்கள் மேலெழும்பி மிதந்தன. 'அலையும் அலையும்' சந்தித்தபோது இரு அலைகளுமே வலுவிழந்து பின்னுக்கித் திரும்பின. காகிதக் கப்பல்கள் இரண்டும் மூழ்கிவிட்டன.

'' ஐயோ! அப்பா கப்பல் போச்சு! முழுகிப் போச்சு.'' என் பையன் கூச்சல் போட்டான்.

'' ஐயோ! அம்மா, கப்பல் உள்ளே மூழ்கிடிச்சு.'' அந்தச் சிறுமி அவள் தாயை நோக்கிக் கூப்பாடு போட்டாள்.

திடீரென்று அவள் படகை வேறு திசையில் திருப்பினாள். நானும் நீரில் மிதந்த துடுப்பை எடுத்து என் படகை எதிர்த் திசையில் வேகமாகத் திருப்பினேன்.

இந்தத் திடீர்ப் பிரிவின் காரணம் புரியாமல் பாலு என்னையும், சிறுமி அவள் தாயையும் மிரள மிரளப் பார்த்தனர்.

படகுகள் எதிரெதிர்க் கோணத்தில் வெகு தூரம் சென்று விட்டன. இடையே பெரிய நீர்ப் பரப்பு.

என் இதயத்தை அமுக்கிக் கொண்டிருந்த நீண்ட பெருமூச்சு வெளியேறிக் காற்றோடு கலந்து விட்டது.

''ஏ! பாழாய்ப்போன உண்மையே! காட்சியையும், அநுமானத்தையும், கனவுகளையும், விட நீ ஏன் இவ்வளவு கசப்பாக இருக்கிறாய்?''

'' எங்கும் என்றும் எந்த யுகத்திலும் நீ இப்படித்தான் மனித சமூகத்தின் கசப்பு மருந்தாக இருந்து, பெருமூச்சுக்களையும், நிராசைகளையும், ஏக்கங்களையும், ஏமாற்றங்களையும் உற்பத்தி செய்து வருகிறாய்!''

'' செய்! செய்! உன்னால் முடிந்தவரையில் செய்து கொண்டிரு!''

கோடம்பாக்கம் "ரயில்வே 'லெவல் கிராஸிங்' கதவுகள் அடைக்கப்பட்டிருந்தன. ரயில்வே லைன்களின் இருபுறமும் ஜனங்கள் கூட்டம் தேர் திருவிழாக் கூட்டத்துக்குச் சமமாகப் பெருகி வந்தது. ஜனக் கூட்டத்தைச் சிதற அடித்துக் கொண்டும் முந்திக் கொண்டும் ரிக்ஷா, ஆட்டோ ரிக்ஷா, வைக்கோல் வண்டி, டாக்ஸி, டாக்ஸியல்லாத சொந்த மோட்டார், செங்கல் லாரி இப்படி இனத்துக்கொரு வாகன வகையறா கதவை முட்டினாற்போல் நிற்கப் போட்டி போட்டன.

கோவிந்தம்மாள் இந்தச் சந்தடியினின்றும் கொஞ்சம் விலகினாற்போல் நிற்க எண்ணிய பின்னால் நகர்ந்தாள். அவள் இடதுபுறமாக இன்னொரு கார் வந்து நின்றது. கார் என்றால் அழகான கார்! கப்பல்மாதிரி எவ்வளவு பெரிது! அதன் அழகை ஒரு முறை நன்றாகப் பார்த்து ரசிக்க வேண்டும் என்று திரும்பினாள் அவள். காரினுள் முன் ஸீட்டில் தனக்குப் பரிச்சயமான ஒரு பெண் முகத்தைக் கண்டாள். அதே சமயம் காரினுள்ளிருந்த அந்தப் பெண் பேசினாள்.



# மனம் எனும்





''அடி, கோவிந்தம்மா! என்ன உன்னைக் கண்ணிலேயே காண வில்லை! என்னடி ஒருமாதிரியாக இருக்கிறாய்? ஏதாவது......'' என்று அவள் சொல்லி முடிப்பதற்குள் கோவிந்தம்மாளின் கண்கள் 'பொலபொல'வென்று நீரைப் பெருக்கின.

''போயிட்டாரம்மா! என்னைத் தெருவிலே உட்டுட்டு அவர் போயிட்டாரம்மா!'' என்று விக்கலுக்கு நடுவில் அந்தச் 'செய்தி'யைச் சொன்னாள் கோவிந்தம்மா!

காரை ஓட்டும் ஸ்தானத்தில் அந்தப் பெண்ணின் கணவர் உட்கார்ந்திருந்தார். கோவிந்தம்மாவைப் பரிதாபத்துடன் பார்த்துக் கொண்டே மனைவியிடம் ஏதோ பேசினார். அவருக்குப் பதில் சொல்லிவிட்டுக் கோவிந்தம்மாவைப் பார்த்து ஆறுதல் மொழிகள் சொல்ல ஆரம்பித்தாள் அவள்!

''அட, பாவமே! பெரிய இடி போல இருக்கிறதே இது! அதுதான் உன்னைப் பத்து நாட்களாகக் கண்ணிலேயே காணவில்லை. ஏதோ உனக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறது என்று எண்ணினேன் ...... போகிறது. நடந்தது நடந்து விட்டது. இதை நினைத்து உருகிக் கொண்டிருக்காதே. துக்கத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் மறக்க முயற்சி செய்ய வேண்டும்......ஒருநாள் வீட்டுக்கு வாயேன்!'' என்றாள் அவள்.

''ஆவட்டும்மா!'' என்று குழந்தைபோல் இரண்டு கைகளாலும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே கூறினாள் கோவிந்தம்மா.

ஒரு மின்சார வண்டி அலறிக் கொண்டு சென்றது. எல்லோருடைய கவனமும் கதவுகள் பக்கம் சென்றது. ஆனால் கதவுகள் திறக்கப்படவில்லை! இன்னொரு எதிர்த்திசை வண்டி எதிர்பார்க்கப்பட்டது.

கோவிந்தம்மா அழகான கார் என்று மதிப்பிட்ட அந்தத் தம்பதிகளின் கார் மட்டும் அப்படித் தனித்து அழகு வாய்ந்திருக்கவில்லை. அவர்களும் அழகின் வடிவங்களாக விளங்கினார்கள். இளம் வயது; ஒருவருக்கொருவர் பொருத்தமான இணைப்பு; கலகலப்பான சுபாவம்.

கோவிந்தம்மா அவர்களையே பார்த்துக் கொண்டு நின்றாள். அந்தப் பெண் இவளைப் பார்த்துத் தன் கணவரிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்தாள். என்ன பேசிக் கொண்டிருந்திருப்பாள்? அவள் மேல் அனுதாபப்பட்டு அவள் நிலைமையை விவரமாகத் தன் கணவனுக்கு எடுத்துச் சொல்லிப் பேசிக்கொண்டிருந்திருப்பாள். அதைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்?

அந்தப் பெண்ணைப் போலக் கோவிந்தம்மாவும் இளம் வயது கொண்டவள்தான். இந்த இளம் வயதில் அப்படிக் கணவன் இறந்து போனதைப் போன்ற துரதிருஷ்டம் வேறு வாய்க்க முடியாது. அதை அவளால் தாங்கவும் முடியவில்லை. மறந்து விட நினைக்கிற சமயங்களில் இப்போது நேர்ந்தது போல் எப்படியோ அந்தத் துக்கம் வந்து மனத்தை மூடிக் கொள்கிறது.

கோவிந்தம்மா இளம் வயது கொண்டவள் மட்டும் அல்ல; காரிலுள்ள அந்தப் பெண்ணுக்கு இணையான அழகும் கொண்டவள்.

# மருந்து

வை. சுப்பிரமண்யன்



அழகு பிரதிபலிக்க எந்தப் பூச்சும் முயற்சியும் அவள் மேற்கொள்ளாமலே பரிணமித்த அழகு அது. அந்த அழகு நிலையைக் குலைக்கத்தான் வந்தது போல் அவளுக்கு விதவைக் கோலம் வந்து விட்டது. ஆயினும் அவள் அழகு தேயவில்லை: மங்கவில்லை; பூரித்து ஒளிவிட்டுக் கொண்டிருந்தது.

இன்னொரு மின்சார வண்டி வந்தது. கதவுகள் திறக்கப்பட்டன. கோவிந்தம்மா காரினுள்ளிருந்த பெண்ணைப் பார்த்து விடை பெற்றுக் கொள்வதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினாள். எல்லா வாகனங்களும் நகர்ந்தன. அவற்றுடன் அந்த அழகான காரும் நகர்ந்து மறைந்தது.

★

கோவிந்தம்மா அவள் புருஷன் இருந்த போதே ஒரு சிறு வியாபாரம் செய்துகொண்டிருந்தாள். அவள் புருஷன் செய்துகொண்டிருந்த வியாபாரத்தின் ஒரு பகுதி என்றுகூட அதைச் சொல்லலாம். அவன் ஒரு புஷ்பக் கடையில் மாலை கட்டுவது, புஷ்பங்கள் தொடுப்பது ஆகிய வேலைகளைச் செய்து கொண்டு ஒரு சிப்பந்தியா யிருந்தான். கோவிந்தம்மாவும் மாலை வேளைகளில் சுற்று வட்டாரத் தெருக்களில் சென்று பூ வியாபாரம் செய்து வந்தாள்.

மணக்கும் அந்த வியாபாரத்தை மேற்கொண்டிருந்த அவள் மலர்களை எப்படித்தான் தொடுப்பாள்! கதம்பத்துக்கு எப்படி எப்படியெல்லாம் புஷ்பங்களையும் வாசனைத் தழைகளையும் இணைப்பாள்! ரோஜா மலர், அல்லி மலர், குண்டு மல்லி, கதிர்ப் பச்சை, வெட்டி வேர், மருக்கொழுந்து.. இப்படி இணைத்துத் தொடுத்திருக்கிற கதம்பத்தைப் பார்த்தாலே போதும்! சூடிக் கொண்டால் கேட்க வேண்டுமா?

அவள் சில வீடுகளுக்குக் கதம்பமும் மல்லிகைச் சரமும் வாடிக்கையாக வைத்து வந்தாள். நுங்கம்பாக்கத்தில் இருந்த ஒரு இஞ்சினீயர் வீட்டுக்கும் அவள் வாடிக்கைப் புஷ்பம் தருவது உண்டு. அவர் மனைவி கௌசல்யாவுக்குக் கோவிந்தம்மாளின் புஷ்பம் என்றாலே உயிர். இந்தத் தம்பதிகளைத்தான் அவள் கோடம்பாக்கம் 'ரயில்வே லெவல் கிராஸிங்'கில் சந்தித்தாள்.

கௌசல்யா அடிக்கடி சொல்வாள்: ''கோவிந்தம்மா! புஷ்பங்களுக்கு ஓரளவுக்குத்தான் வாசனை உண்டு என்று நான் நினைக்கிறேன். ஆனால், உன் கைபட்ட வாசம் உள்ள மலர்கள், வாசமே இல்லாத மலர்கள் எல்லாமே அபாரமான வாசனையைப் பெற்றுக் 'கம் கம்' என்று மணக்கின்றனவே! உன்னிடம் என்னதான் மாயம் இருக்கிறதோ, தெரியவில்லை!''

''என்னிடம் மாயம் என்னம்மா இருக்கிறது? பூ தொடுக்கிற நார்தான் இருக்கிறது! அதெல்லாம் புஷ்பத்தை வைத்துக் கொள்கிறவங்களையும், வைத்துக் கொள்கிற பூவை அநுபவிக்கிறவங்களையும் பொறுத்தது அம்மா!'' என்று கோவிந்தம்மா சிரித்துக் கொண்டே சொல்வாள்.

கடிகாரத்தில் மணி ஐந்தடிக்க வேண்டியதுதான். தினசரி வாசலில் பூ மணக்கும். வீட்டுக்குள்ளிருந்து கௌசல்யா வந்து பார்த்தாளானால் அடுத்தபடி கோவிந்தம்மாவின் சிரித்த முகத்தைத் தவறாமல் பார்ப்பாள். அவள் கொடுக்கும் புஷ்பத்தை முதலில் சுவாமிக்குச் சாத்திவிட்டுப் பிறகு அதிலிருந்து ஒரு சரம் கிள்ளியெடுத்துத் தலையில் வைத்துக் கொண்டு காரியாலயத்திலிருந்து வரும் கணவனை அவள் அன்புடன் நோக்கியிருப்பாள்.

★

இந்த நிலையில் ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டது. கோவிந்தம்மாவின் புருஷன் இறந்து போனவுடன் அவள் பூ வியாபாரத்தை நிறுத்தி விட்டாள். முதலில் தாற்காலிகமாகத்தான் அவள் அதை நிறுத்தினாள். மறுபடியும் அதைத் தொடங்க நினைத்தபோது அவள் மனத்தின் இன்னொரு மூலையில் ஒரு எண்ணம் தோன்றியது. அது ஒரு விபரீதமான எண்ணம்தான். அவளைப் பொறுத்த வரையில் அது அவளுக்கு அப்படியெல்லாம் தோன்றவில்லை.

அவள் வாழ்க்கையில் மஞ்சளும் குங்குமமும் புஷ்பமும் ஒதுக்கி விடப்பட்ட மங்களச் சின்னங்களல்லவா? அந்தச் சின்னங்களைக் கொண்டுள்ள — தன்னையொத்த இளம் பெண்களைக் கண்டாலே அவளுக்கு வெறுப்பாயிருந்தது. அவர்களை மட்டும் தெய்வம் அந்தச் சந்தோஷ நிலையில் வைத்து விட்டுத் தன்னைக் கொடுமைப்படுத்தி விட்டதே என்று எண்ணினாள். இந்த மங்களச் சின்னத்தில் ஒன்றான புஷ்பத்தை மற்றவர்களுக்கு வழங்க, அவர்கள் சந்தோஷமாயிருப்பதற்குத் துணை செய்வது தான்தானே என்று தோன்றியது கோவிந்தம்மாவுக்கு. அப்படிப் புஷ்பம் வழங்குவதன் மூலம் மகிழ்ச்சியை அளிப்பதை நிறுத்தி விடுவது என்று தீர்மானித்தாள் அவள். பூ வியாபாரத்தை நிறுத்தி விட்டாள். வாடிக்கைப் பூ வாங்கிக் கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் சிறிது கஷ்டமாகத்தான் போய் விட்டது. கௌசல்யாதான் அதிகமாக வருத்தப்பட்டாள். கோவிந்தம்மா கொடுத்து வந்த பூவுக்கு இணையாக யாராலும் கொடுக்க முடியாது என்பது அவள் முடிவு. அவளுக்கு உடம்பு சரியில்லையோ என்று எண்ணி, கடந்த பத்து நாட்களாக வேறு யாரிடமும் கூடப் பூ வாங்காமல் தோட்டத்தில் அத்தி பூத்தாற் போல் பூத்துக் கொண்டிருந்த முல்லை அரும்புகள் இரண்டையெடுத்து அடித்தலையில் செருகிக் கொள்வாள் கௌசல்யா.

அன்றைக்குக் கோடம்பாக்கம் 'லெவல் கிராஸிங்' அருகில் சந்தித்த பின்பு பதினைந்து நாட்களாகியும் முன் போலக் கோவிந்தம்மா புஷ்பம் கொண்டு வராமல் போகவேதான் கௌசல்யா அவள்மேல் கொஞ்சம் ஆத்திரம் கொண்டாள். என்ன காரணத்தினால் புஷ்பம் வைப்பதை நிறுத்தி விட்டாள் என்று பல வகையாக யூகித்துப் பார்த்தும் அவளால் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், கோவிந்தம்மா தன்னைப் போன்ற இளம் பெண்களுக்குப் புஷ்பம் வழங்குவதை நிறுத்தி விட்டதில் ஏதோ மகிழ்ச்சி கூடச் சிறிது கொண்டவள் போல இருந்தாள். கீரை வியாபாரம் செய்து பிழைப்புக்கு 'வழி'யை ஆரம்பித்துக் கொண்டு விட்டாள்.

# புதிய கார் விலை இன்றும் உயர்வு






- ரஸ்தா விபத்துக்கள் சகஜம் வருமுன் காப்பது நலம்
- கார் உறுப்புக்களை சீர்கெடாமல் உன்னிப்பது உயர்வு
- விபத்தை விலக்கலாம் - வழிகாண்பது எளிது

**தி மதறாஸ் மோட்டார் இன்ஷ்யூரன்ஸ் கோ., லிட்.**
(டி வி எஸ் ஸ்தாபனம்)
**சென்னை**

பண்பாட்டால் விபத்தை விலக்கி பயனடையலாம்

MMI/106

ஒருநாள் கீரைக் கூடையுடன் கோவிந்தம்மா காலை வேளையில் கௌசல்யாவின் வீட்டுக்குச் சென்றாள். வீட்டின் முன்புறத்தில் ஒன்றும் சந்தடியைக் காணோம். ஆனால், தாராளமாக முன் ஹாலைத் தாண்டி உள்ளே சென்று பழக்கமாகி யிருந்த கோவிந்தம்மா, "அம்மா...." என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே போனாள். உள்ளேயும் ஒன்றும் சந்தடியைக் காணவில்லை. ஆனால் மறு நிமிஷம், கௌசல்யா பரபரப்பாக வெளியில் வந்தாள். மாஜி பூக்காரியை அங்கே கண்டதும் முகத்தைச் சுளித்துக்கொண்டாள்.

"என்ன விஷயம்? இப்படி 'வா....'" என்று முகம் கொடுக்காமல் பேசிக்கொண்டே கோவிந்தம்மாவை வெளியில் வரச்சொல்லும் தோரணையில் கௌசல்யா தானும் வெளியில் வேகமாக வந்தாள்.

"பார்த்துட்டுப் போவம்னுதானம்மா வந்தேன். அன்னைக்குக் கூட வரச் சொன்னியே என்னே எப்படியம்மா இருக்கே? நல்லா யிருக்கியா? முழுவுறியா...?" என்று கேள்வித் தொடர் ஆரம்பித்தாள் கோவிந்தம்மா.

"எல்லாம் இருக்கேன்: இதற்கெல்லாம் இப்பொழுதுதான் நேரம் பார்த்தாயாக்கும்! அவர் ரொம்ப உடம்பு குணமில்லாமல் படுத்திருக்கிறார். ஆபத்தாயிருக்கு. உன்னிடம் பேசிக் கொண்டு நிற்க எனக்கு நேரம் இல்லை. அப்புறமா வா" என்று சொல்லிக்கொண்டே உள்ளே போய் விட்டாள் கௌசல்யா.

இது பெரிய அதிர்ச்சியாகத்தான் தோன்றியது கோவிந்தம்மாவுக்கு. கீரைச் சுமையினால் ஏற்படாத பாரம் மனச் சுமையின் மூலம் வந்து அவளைக் கீழே அமுக்கியது. ஏதேதோ சிந்தித்துக் கொண்டே வீட்டுக்குப் போனாள்.

கௌசல்யாவின் கணவருக்கு என்ன உடம்பாயிருக்கும், அவருக்கு என்ன நேரும் என்று நினைத்துப் பார்த்தபோது இனம் புரியாத ஒரு கிலேசம் அவள் மனத்தில் ஏற்பட்டது. 'அவர் கதி என்ன ஆகும்?' என்ற ஒரு கேள்வியே நிலைத்துத் தங்கிவிட்டது. ஒரு நிமிஷம் அந்தத் தம்பதிகளைச் சேர்த்துத் தன் மனக்கண்முன் கற்பனை பண்ணிப் பார்த்தாள். அன்பு என்றும் காதல் என்றும் எல்லாம் அறிந்த நிலையில் நாம் கூறுவதை அவள் அநுபவ ரீதியில் எண்ணிப் பார்த்து, 'எத்தனை ஆசையாயிருக்கிற சோடி அது!' என்று சொல்லிக் கொண்டாள் தனக்குள்ளாகவே.

இதை நினைத்துப் பார்க்கப் பார்க்க அவள் மனத்தில் 'அவர் கதி என்ன ஆகும்?' 'அந்த அம்மா கதி என்ன ஆகும்?' என்ற இரு கேள்விகள் மாறி மாறி வட்டமிட்டன.

திடீரென்று தான் ஏதோ பெரிய தவறு செய்து விட்டதாகக் கோவிந்தம்மாவின் மனத்தில் தோன்றியது.

"ஐயோ, பாவி! நான்தானே கெடுத்து விட்டேன் காரியத்தை!" என்று வாய்விட்டுச் சொல்லிக் கொண்டாள். பூ வியாபாரத்தை நிறுத்தி, தன்னைப் போன்ற மற்றப் பெண்களுக்குப் பூ வழங்குவதையும் நிறுத்தி விட்டுச் சந்தோஷப்பட்டது எவ்வளவு பெரிய ஆபத்தில் வந்து முடிந்து விட்டது என்று எண்ணினாள். அவள் வயிற்றில் ஏதோ ஒரு சங்கடம் ஏற்பட்டது.



பெரியவர் (நாகஸ்வர வித்வானைக்காட்டி): நம்ம வீட்டுக் கல்யாணத்திலே இவர் அபூர்வமா நாகஸ்வரம் வாசிச்சார்!......

மற்றவர்: ரொம்ப நாளா இவர்தான் நல்லா வாசிச்சுண்டு வருகிறாரே!

"கடவுளே! நினைக்காமல் செய்த பாவங்களுக்கெல்லாம்தான் இவ்வளவு பெரிய பேரிடியை என் தலைமேலே போட்டு விட்டாயே! இன்னும் நான் துக்கிரித்தனமா நினைச்சுச் செய்கிற பாவத்துக்கு என்ன தண்டனை எனக்குக் கிடைக்குமோ! வேண்டாம்... நான் இனிமேல் அப்படி நினைக்க மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டே தன் வீட்டுக் கூடத்துப் பிறையுள் வைத்திருந்த வேங்கடாசலபதிப் பெருமாள் படத்தின் முன் போய் நின்று கன்னத்தில் போட்டுக் கொண்டாள்.

அன்று மாலை வெகு நாட்களுக்குப் பின் அவள் வீட்டில் பூக் குவியலும் நார்ச் சுருளும் காணப்பட்டன. பூ மணம் வீடெல்லாம் பரவி, சந்தைக்கெல்லாம் வீதி யெல்லாம் பரவிக் கொண்டு சென்றது.



மாலை ஏழு மணி இருக்கும். கோவிந்தம்மா கௌசல்யாவின் வீட்டு வாசலில் வந்து நின்றாள். அங்கேயிருந்த சூழ்நிலையையும் நிலைத்திருந்த மௌனத்தையும் கண்டதும் அவள் மனத்தில் 'சொரேர்' என்றது. வாசலில் இரண்டு மூன்று கார்கள் நின்றிருந்தன. யாரோ புதிய புதிய மனிதர்கள் சிலர் வீட்டு முகப்பில் நின்று பேசிக் கொண்டிருந்தனர். சற்றுத் தள்ளினாற்போல் ஒரு பூச்செடிப் பக்கமாக வேலைக்காரர்களும் தோட்டக்காரனும் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். பேசிக் கொண்டிருந்தவர்கள் உதடுகள் அசைவதுதான் தெரிந்ததே தவிரப் பேச்சொலி காதில் விழவேயில்லை.

வேலைக்காரர் கோஷ்டியிடம் சென்று, "ஐயாவுக்கு உடம்பு எப்படி யிருக்கிறதாம்?" என்று கேட்டாள் கோவிந்தம்மா.

"பூசை வேளையிலே கரடியை விட்டமாதிரி நீ எங்கே வந்தே இங்கே! உடம்பு ரொம்ப அதிகந்தான்! ஐயா பிழைச்சா அம்மா புண்

ணியம்!'' என்று ஒருவன் சொன்னான். அவன் இப்படிச் சொல்லும்போது அவனது கண்கள் கசிய ஆரம்பித்தன.

கோவிந்தம்மாவுக்குத் தொண்டையை அடைத்தது. தனக்கு ஏற்பட்ட ஒரு துரதிருஷ்ட நிலையினால் புத்தி தடுமாறி ஒரு விபரீத எண்ணம் தோன்றி அதன்படி இத்தனை நாள் நடந்து கொண்டதையும் இன்று கௌசல்யாவின் கணவனுக்கு ஏற்பட்டுள்ள நிலையையும் எண்ணிப் பார்த்தாள். அவள் விக்கி விக்கி அழத் தொடங்கிவிட்டாள்.

''இந்தா புள்ளே! நீ இங்கே வந்து ஏன் கலாட்டா பண்ணறே? உன்னை யார் இங்கே கூப்பிட்டா? பூ வைக்க இப்பத்தான் நேரம் பார்த்தியா? எதுக்கு இங்கே வந்தே? வந்தது மில்லாமல் முதலைக் கண்ணீர் விட ஆரம்பிச்சிட்டியே!'' என்று தோட்டக்காரன் கடுமையாகக் கூறினான்.

''நான் அழுவலே. அம்மாவைக் கொஞ்சம் பார்த்துட்டுப் போயிடறேன். போய் அவுங்களைக் கொஞ்சம் வரச்சொல்லுங்க, ஐயா!'' என்றாள் கோவிந்தம்மா.

அவர்கள் அவளைத் திட்டி அனுப்ப முயன்று கொண்டிருந்தபோது கௌசல்யாவே வெளியில் வந்தாள். கோவிந்தம்மா இரண்டு எட்டில் பாய்ந்து சென்று அவள் முன் நின்றாள். கௌசல்யாவின் தோற்றத்தைக் கண்டு அவள் உள்ளம் விலவிலத்தது. உடம்பு துரும்பு போல் இளைத்திருந்தது. முகம் வாடிப்போய் வெளிறியும் கிடந்தது.

கோவிந்தம்மாளின் தோற்றத்தை அதே சமயம் கவனித்துக் கொண்டிருந்தாள் கௌசல்யா. ஒரு மாதத்துக்கு முன் 'பளிச்' சென்று சுமங்கலியாக விளங்கிய அவள் இப்போது தலையில் பூ இல்லாமல், நெற்றியில் குங்குமம் இல்லாமல்......''

'ஐயோ! இவள் இப்போது இங்கே எதற்காக வந்திருக்கிறாள்? தெய்வம் இவள் விஜயத்தின் மூலம் நமக்குச் சூசனையாக எதைத் தெரிவிக்கிறது?' என்று எண்ணிக் கொண்டு போன கௌசல்யா திடீரென்று வெறி பிடித்தவள்போல் அலறிக்கொண்டு கேட்டாள்.

''இப்போ எங்கேடி வந்தே நீ? உன்னை யார் அழைத்தது?''

''யாரும் அழைக்கலே, அம்மா! நானேதான் வந்தேன். இன்னும் சொல்லட்டுமா? உன் புருசன் உசிரைக் காப்பாற்ற வந்தேன்!''

இந்தக் கடைசி வார்த்தைகளைக் கேட்கக் கௌசல்யாவுக்கு ஒரே மகிழ்ச்சியாயிருந்தது.

''உன்னால் என்னடி செய்ய முடியும்? மூன்று டாக்டர்கள் இப்போது இங்கே வந்திருக்கிறார்கள். இன்று இரவு பன்னிரண்டு மணி தாண்டின பிறகுதான் நம்பிக்கையாக ஏதாவது சொல்ல முடியும் என்கிறார்கள். உன்னால் என்ன செய்துவிட முடியும்!''

''முடியும் அம்மா! நான் ஒரு மருந்து கொண்டாந்திருக்கிறேன். உங்கள் டாக்டருங்க எல்லாம் ரொம்ப அபூர்வமான மருந்துகளைக் கொண்டாந் திருக்காங்க, இல்லையா?'' அதையெல்லாம் காட்டிலும் இது உசத்த மூலிகை, அம்மா! இந்தா, நீ வேறே ஒன்னும் பண்ண வேண்டாம். இந்தப் பூவை ஆண்டவன் படத்துக்குச் சாத்தி வைச்சிட்டு, அதிலே ஒருசரம் கிள்ளித் தலையிலே வச்சுக்கிட்டு அந்த ஆண்டவனை வேண்டிக்கனும்! உன் புருஷன் பிழைச்சிடுவாரு!'' என்று ஆவேசம் வந்தவள் போல் கூறினாள்.

''பூவுக்கும் மருந்துக்கும் என்னடி சம்பந்தம்? உன் புருஷன் தவறிப் போனதனாலே, பாவம், உனக்கு நிதானம் தெரியாமல் ஏதாவது செய்யத் தோன்றுகிறதா?'' என்று கொஞ்சம் அனுதாபத்தோடும் விரக்தியோடும் கேட்டாள் கௌசல்யா.

''நிதானம் தவறினது மெய்தான், அம்மா! ஆனால் எப்பவோ ஒரு மாசத்துக்கு முந்தி தவறின நிதானத்தைத் திரும்ப அடைஞ்சு விட்டேன்!'' என்றாள் கோவிந்தம்மா.

அவளைப் பார்க்கும் போது ஒரு தேவதையைப் பார்ப்பது போலிருந்தது கௌசல்யாவுக்கு. அவள் கொடுத்த பூப்பந்தை வாங்கிக்கொண்டு உள்ளே போனாள்.

★

அன்றிரவு மணி பன்னிரண்டு நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த வீட்டில் உலகத்து அமைதியெல்லாம் வந்து அடங்கினாற்போல் இருந்தது. டாக்டர்களும் நண்பர்களும் படுக்கையில் சலனமற்றுக் கிடந்த கௌசல்யாவின் கணவனையே கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தனர்.

டாக்டர்களின் முகங்களையும் தன் கணவனின் நண்பர்களின் முகங்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள் கௌசல்யா. அபாயகரமான நிலைமை ஏற்பட்டால் டாக்டர்களின் முகபாவங்களிலிருந்து எதுவும் தெரிந்து கொள்ள முடியாதென்று அவளுக்குத் தெரியும்.

பன்னிரண்டு அடிக்க இன்னும் ஒரு நிமிஷம் இருந்தது. எல்லாம் வல்ல முருகனின் நாமத்தைச் சொல்லிக் கொண்டு முருகனின் படம் மாட்டியிருந்த இடத்தை நோக்கினாள் கௌசல்யா. அங்கே கோவிந்தம்மா கொடுத்த பூச்சரம் முருகனை அலங்கரித்துக் கொண்டிருந்தது. உடனே ஏதோ ஞாபகம் வந்தவள் போலப் பாய்ந்து சென்று அந்தப் புஷ்பத்தில் பாதியை எடுத்துத் தலையில் சூட்டிக் கொண்டு 'முருகா' என்று கண்மூடி, மெய் உருகி நின்றாள்.

★

மறுநாள் காலை சூரியோதயம் சமயத்தில் கோவிந்தம்மா கௌசல்யாவின் வீட்டுக்கு வந்தாள். தாராளமாக உள்ளே வந்து, ''அம்மா!'' என்று கூப்பிட்டாள்.

முல்லை மலர் சிரித்தாற் போல் தன் பல் வரிசை தெரியச் சிரித்துக் கொண்டு, மலர்ந்த முகத்தினளாய் வெளியே வந்த கௌசல்யா ''அடி கோவிந்தம்மா! உன் மருந்துதான் அவரைக் காப்பாற்றியது! அவர் பிழைத்து விட்டாரடி! இத்தனை காலமாக நீ எனக்குப் பூ கொண்டு வழங்கிய அந்த அதிசயப் பொருள் ஒரு மானசீக மருந்தாக உபயோகமாயிற்றடி!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினாள்.

கோவிந்தம்மாளின் மனத்தில் இப்போது தான் திருப்தி உண்டாயிற்று.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

